# கல்கி

28.9.2003

உள்ளே...



சக்ஸஸ் — நந்தனா 16

"என்ன ஸார்... திடுதிப்புனு வந்து நிற்கறீங்[illegible] ஏதாவது அவசரப் பேட்டியா?" நம்மை[illegible]ம, ஈ.வி.கே.எஸ். இளங்கோவன் இப்படிக் கேட்க, "அரசியல் விஷயமே இல்லை. நாட்டுக்கு உழைப்பது ஒரு பக்கம் இருக்கட்டும். வீட்டுக்கு உதவியா என்ன செய்றீங்க?" என்று மடக்கினோம்.

"எங்க ஸார் நேரம் கிடைக்குது? ஆனால் நேரம் கிடைத்தால் சில வேலைகள் செய்வேன். எனது பள்ளிப் படிப்பு, சென்னை, திண்டுக்கல் மீண்டும் சென்னைன்னு அலைக்கழிக்கப்பட்டது. வீட்டில் அக்கா, தங்கை இருந்ததால், வீட்டு வேலை செய்ய வேண்டிய அவசியமே இல்லாமல் போயாச்சு. ஆனால் கல்யாணத்திற்குப் பிறகு நேரம் கிடைக்கும் போது, மனைவிக்கு உதவியாக பாத்திரங்கள் தேய்த்துக் கொடுப்பது, பாத்ரூமை சுத்தமாக வச்சுக்க ஆஸிட் விட்டு கழுவுவதுங்கற மாதிரி வேலைகளைச் செய்வதுண்டு. போன வாரம் கூட, நானும் என் பையனும் ஸிங்க் நிறைய இருந்த பாத்திரங்களைக் கழுவி வைத்தோம்'' என்ற இளங்கோவன் உதவியாளரைக் கூப்பிட்டு, "தம்பி அந்த ஒட்டடைக் குச்சியைக் கொண்டு வா?" என்றார். நாம் பார்த்துக் கொண்டிருக்கும் போதே கூரையில் தொங்கிக் கொண்டிருந்த ஒட்டடைகளைச் சுத்தப் படுத்தினார். "நம்மால் ஒரு நல்ல காரியம் ஆச்சு!" என்று கிளம்பினோம். "ஜெயலலிதா சேர்த்து வைக்கிற ஒட்டடையையெல்லாம் நாங்க தான் 2006ல் வந்து கிளீன் பண்ணணும்" என்று வழக்கமான அரசியல் பஞ்ச் கொடுத்தனுப்பினார் ஈ.வி.கே.எஸ்.

# வீட்டிலும் உழைக்கும் அரசியல்வாதிகள்!

அடையாறிலிருந்து நேரடியாக அரசியல் தோட்டத்திற்கு வந்து பா.ம.க. தலைவர் ஜி.கே. மணியின் வீட்டில் எட்டிப் பார்த்தோம். டாக்டர் ஐயா ஆணையையேற்று கட்சி நிதி வசூலுக்குக் கிளம்பிக் கொண்டிருந்த மணியிடம், இளங்கோவனிடம் கேட்ட அதே கேள்வியை ரிபீட் செய்தோம்.

"ஊர்ல எங்க குடும்பத்தை தர்மகர்த்தா குடும்பம்னு சொல்வாங்க. சுத்துப்பட்டில் எந்த விசேஷம்னாலும் எங்கள் குடும்பத்தினர் யாராவது ஆஜராவோம். நான் திருப்பராய்த்துறை ராமகிருஷ்ணா மடத்துல பத்து வருஷம் பயின்றேன். வாழ்க்கையில் ஒழுக்கத்தையும், உழைப்பின் மேன்மைகளையும் கற்றுக் கொண்டது அங்கேதான். அங்கே நான் பெற்ற போதனைகள் வாழ்க்கை முழுக்க என்னை வழி நடத்தும். எதற்கு இதைச் சொல்றேன்னா, மடத்தில் இருக்கும் போது எந்த வேலையையும் இழிவென்று கருதாம, எல்லா வேலையையும் செய்யப் பழகிக்கிட்டேன். நல்லா சமைப்பேன். என் வாழ்க்கையில்



• பரிதி இளம் வழுதி



• ஈ.வி.கே.எஸ். இளங்கோவன்

மிக துரதிருஷ்டமான விஷயம், என் துணைவியார் சில ஆண்டுகளுக்கு முன்பு இறந்ததுதான். அவர் இருக்கும்போது அவ்வப்போது சமையலறைக் குள்ளே புகுந்து கைவரிசைகளைக் காட்டுவதுண்டு. இப்போ இருபது மணி நேரம் ஓடிக் கொண்டே இருக்கிறேன். எப்போதாவது அரிதாக நேரம் கிடைத்தால் கிச்சனுக்குள் புகுந்து கலக்குவதுண்டு" என்ற மணி நமக்காக ஸ்பெஷலாக டீ போட கிச்சனுக்குள் நுழைந்தார்.

மீண்டும் நமது பயணத்தை சாந்தோம் நோக்கித் திருப்பினோம். தி.மு.க.வின் துணைப் பொதுச் செயலாளரான பரிதி இளம் வழுதியின்



• ஜி.கே.மணி

வீட்டிற்குள் நுழைந்தோம். ஆச்சர்யம்? மனிதர் இஸ்திரி போட்டுக் கொண்டிருந்தார். "என்ன ஸார், அநியாயமா இருக்கே?" என்று நாம் வியக்க, "இதில் என்ன இருக்கு?" என்று தொடர்ந்தார் பரிதி. "நேரம் கிடைத்தால் மார்க்கெட்டுக்குப் போய் காய்கறிகள், மட்டன் வாங்கி வருவேன், குழாயில் தண்ணீர் பிடித்துக் (அடித்து) கொடுப்பேன். சமயத்தில் லாண்டரிக்காரர் டபாய்த்து விட்டால், நானே துணிகளை அயர்ன் செய்து விடுவேன். நேரம் இருந்தால் வீட்டில் மற்றவங்க துணிகளையும் அயர்ன் பண்ணுவேன். வீட்டுக்கு உதவியாக காரியங்கள் செய்யும்போது ஒரு மனநிறைவு கிடைப்பது மட்டுமல்லாமல், மன அழுத்தம், பதற்றம் ஆகியவையும் ஓடி விடுகின்றன என்பது என் அனுபவம்." என்றார் பரிதி.

நல்ல அனுபவம்தான்!

_ ஸ்ரீநி

படங்கள்: ராஜன்




கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் : சீதா ரவி

ஆசிரியர் குழு : செ. ஏக்நாத் ராஜ், அனுராதா சேகர், ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு : எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன்

தொலைபேசி : 22345622, 23, 24

தொலைநகல் : 044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு



• சச்சின்

டீ.வி.எஸ் – இரானி கோப்பை கிரிக்கெட் போட்டியில் மோத, சென்னை வந்த கிரிக்கெட் ஹீரோக்களின் தரிசனத்துக்கு ரசிகர்கள் கொத்துக் கொத்தாகவும், முடிச்சு முடிச்சாகவும் காத்துக் கொண்டிருந்தார்கள்.

மைதானத்திலிருந்து பெவிலியனுக்கு வரும்போது, கை குலுக்கவும், ஆட்டோகிராஃப் நோட்டை நீட்டவும் துடித்துக் கொண்டிருந்தார்கள்!

"ராஜ் சிங் துங்கர்பூர் தலைவராக இருந்தபோது, அவரை எளிதில் பார்க்க முடிந்தது. டால்மியா படுமோசம். மீடியாவைக் கண்டு ஓடி விடுகிறார்!" என்ற காரமான கமெண்ட் மீடியா



• அகார்கர்

# சச்சின் தரும் உளக்கம்!

கும்பலிலிருந்து உரத்துக் கேட்டது.

சச்சினைச் சுற்றி வட்டம் போட்டது போல் ஒரு கும்பல். களைத்துப் போயிருந்தாலும், மளமளவென்று இடது கையால் ஆட்டோகிராஃப் போடச் சளைக்கவில்லை. "நிறைய பேசிட்டேன். இனும பேச ஒண்ணுமில்லை" என்று கழன்றுக் கொண்டார் சச்சின்.

வேகமாக வந்த அஜீத் அகார்கரைத் தடுத்து நிறுத்தி, "வரப்போகும் நியூஸிலாந்து டூர் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?" என்று விசாரித்தோம்.

"நான் அதைப் பற்றி நினைத்துக்கூடப் பார்க்கவில்லை. இப்போதைய கவனமெல்லாம் இந்த மாட்சில்தான்" என்றார்.

கோச் சந்திரகாந்த பண்டிட் வெகு உற்சாகமாக இருக்கிறார். "வாஸிம், டக்கர், ஷெட்டி, ரமேஷ் பவார் என்று நம்பிக்கையூட்டும் இளைஞர்கள் தயாராகி வருகிறார்கள்!" என்றார்.

டீ.வி காமிராக்காரர்களும், பத்திரிகையாளர்களும் ஆவலுடன் காணக் காத்திருந்த ஆட்டக்காரர் – விநோத் காம்ப்ளி!

மனிதர் அறையிலிருந்து வெளி வருவதாயில்லை. ஆனால் மீடியா வெளியே அவருக்காகக் காத்திருக்கிறது என்று தெரிந்ததும், புன்னகை பூத்த முகத்துடன் வெளிப்பட்டார்.

"இத்தனை வருடங்கள் ஆடாமல், இப்போது மறுபடி பிரவேசம்

செய்திருக்கிறீர்களே, உங்கள் தன்னம்பிக்கை எப்படி இருக்கிறது காம்ப்ளி?''

"நான் ரொம்ப நம்பிக்கையோட இருக்கிறேன்!'' என்றார். அவருடைய தலைமுடி வினோதமாக இருந்தது. தலையில் பாத்தி வெட்டிய மாதிரி ஓர் ஆப்பிரிக்கத்தனமான ஹேர் ஸ்டைல்!

"ஏன் இப்படி வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?''

"நன்றாக இல்லை? ஐ லைக் இட்!'' என்று மனம் விட்டுச் சிரித்தார்.

மறுபடியும் பேச்சுக்கு இழுத்து அவருடைய ஃபார்ம் பற்றிக் கேட்டோம்.

"சவுத் ஆப்பிரிக்கா போய்விட்டு வந்த பிறகு நிறைய விஷயங்களைத் தெரிந்து கொண்டேன். சில டெக்னிக்குகள், ஃபிட்னஸ்... இப்போது என் நம்பிக்கை கூடியிருக்கிறது. கடவுள் என் பக்கம் இருக்கிறார்!''



• காம்ப்ளி

"மறுபடியும் மிடில் ஆர்டரில் வருவீர்களா? டபுள் செஞ்சுரி எல்லாம் கூடப் போட்டிருக்கிறீர்களே?''

"நான் விளையாட வேண்டும். ஐ ஜஸ்ட் வான்ட் டு பெர்ஃபாம். அவ்வளவுதான்.''

"பழைய ஆவேசமான அக்ரஸிவ் ஆட்டம் ஆடுவீர்களா?''

"சந்தர்ப்பத்தைப் பொறுத்து ஆடுவேன்!''

"சர்வதேச கிரிக்கெட் மாட்ச் அளவுக்கு இந்த மாதிரிப் போட்டிகளில் புகழ் கிடைக்காது இல்லையா?...''

"ஆனால் இது தான் அடித்தளம். இன்டர்நேஷனல் டீமில் நுழைவதற்கு இதில் சாமர்த்தியத்தைக் காட்டியாக வேண்டும்!''

**ச**ச்சின் பெயரைச் சொல்லும்போதே காம்ப்ளியின் முகம் பிரகாசமாகிறது. "நல்ல நண்பர். அவருடைய இன்ஸ்பிரேஷனில்தான் ஆடுகிறேன். களத்திலும், களத்துக்கு வெளியே யும் உதவி செய்பவர் சச்சின்!''

மும்பை டீமுக்கு ஆடுவதில் காம்ப்ளிக்கு ஏக மகிழ்ச்சி. "என்னை ஏற்றுக் கொண்டதற்கு நான் அவர்களுக்கு நன்றி சொல்ல வேண்டும்!''



• ஜாஃபர்

"என் ஹேர் ஸ்டைல் நன்றாக இல்லையா? Bald & Beautiful?'' என்று ஜோக் அடித்தார் காம்ப்ளி. நமக்குத்தான் சிரிக்க முடியவில்லை.

— சித்தார்த்

படங்கள்: வெங்கடேஷ்



இது 'மாற்றங்கள் வாரம்' போலிருக்கிறது. 'சின்ன பாப்பா, பெரிய பாப்பா' தொடரில் நிரோஷாவுக்குப் பதிலாக பல்லவி மேனனையும் கல்பனாவுக்குப் பதிலாக சீமாவையும் களமிறக்குகிறார்கள். ஏன் இந்த மாற்றமாம்? விசாரித்தால், 'சும்மா ஒரு சேஞ்சுக்குத்தான்' என்கிறார்கள். என்ன சேஞ்சோ?



* சூலம் - சுவலட்சுமி



* மாணிக்கம் நாராயணன்



* பல்லவிமேனன்



# மாற்றங்கள் வாரம்!

இதே போல 'சூலம்' தொடரின் டெக்னிஷியன்களை அப்படியே துடைத்து விட்டு, ஆரம்பத்தில் தொடரை இயக்கிய இளவரசனையும், வசனகர்த்தா தங்கவேலுவையும் திரும்ப இழுத்திருக்கிறது சரிகம நிறுவனம்.

"சூலம் நல்லாத்தான் போயிட்டிருக்கு. இதைவிட பெட்டரா பண்ணலாமேன்னுதான் பழைய டீமை அழைச்சிருக்கோம்" என்ற சரிகம நிறுவன அதிகாரி குமாரிடம், "அப்ப ஏன் ஆரம்பத்திலே அவங்களை மாற்றினீங்க?" என்றால், சிரிப்புதான் பதிலாக வருகிறது.

இரண்டு வாரங்களுக்கு முன்பு 'கதையல்ல நிஜ'த்தில் உடல் ஊனமுற்ற குழந்தைகளைப் பற்றி காட்டினார்கள். 'இந்தக் குழந்தைக்கு நீங்க ஏதாவது உதவலாமே' என்று நடிகை லட்சுமி வேண்டுகோள் வைக்க, பத்தே நாட்களில் ஒரு லட்சத்து அறுபத்தோராயிரத்து முந்நூற்று ஐம்பத்தெட்டு ரூபாய் நிதியுதவி கிடைத்திருக்கிறதாம்!

அக்டோபர் 14ம் தேதி ராஜ் டீ.வியின் பத்தாவது ஆண்டுவிழா. நிறைய மாற்றங்களோடு நிகழ்ச்சிகளைக் கொண்டு வரப் போகிறார்களாம். முதலில் அழகான புது 'லோகோ' ஒன்று தயாராகி விட்டதாகத் தகவல்.

செவன்த் சேனல் நிறுவனமும், ஆஸ்திரேலிய தமிழ் சேனலான வானவில்லும் இணைந்து சர்வதேச தமிழ்த் திரைப்பட விருது வழங்கும் விழாவை நடத்த இருக்கிறது மலேஷியாவில்.

"இந்தி படங்களுக்காக சர்வதேச இந்தி திரைப்பட விருது வழங்கும் விழாவை நடத்திட்டிருக்கிற மாதிரி, உலகம் முழுவதும் உள்ள தமிழர்களையும் தமிழ் அமைப்புகளையும் இணைக்கும் விதமா இப்படியொரு விழாவை ஏன் ஏற்படுத்தக் கூடாதுன்னு தோணுச்சு. இதுக்கு ஆஸ்திரேலிய 'அஸ்ட்ரோ வானவில்' சேனல் ராஜாமணியும் இன்னும் சினிமா துறையைச் சேர்ந்தவங்க பலரும் முன் வந்தாங்க. ரெடி பண்ணிட்டோம்" என்கிறார் செவன்த்சேனல் மாணிக்கம் நாராயணன்.

ஆமாம் விருதுக்கானவங்களை எப்படித் தேர்ந்தெடுக்கப் போறாங்களாம்?

'www.astro.com.my/itfa' என்ற வலைதளத்தின் மூலமா சிறந்த நடிகர் நடிகைகள்ல இருந்து பத்தொன்பது பிரிவுகளுக்கு உலகம் முழுவதும் உள்ள தமிழர்கள் வாக்களித்து தேர்ந்தெடுக்கறாங்க" என்கிறார்.

முடிஞ்சா நீங்களும் ஒரு வோட்டுப் போட்டுட்டுப் போங்க!

- அப்பு

## செட் டாப் பாக்ஸ்:




# இனிய தீபாவளி நல்வாழ்த்துக்கள்!

ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை

# P.R. JEWELLERY



**GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES**

Old No. 102, New No. 138, USMAN ROAD,
T. NAGAR, CHENNAI - 600 017.
PH: 24344442, 24327764 TUESDAY HOLIDAY
(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)

**PROPRIETOR : P. RAVINDHIRAN**
(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)

**P.R.** ஜுவல்லரியில் ராசிக்கல் மோதிரம் வாங்கி அணிந்துபயன்பெறுங்கள். ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 400/-




## வெற்றிகரமான 18-ம் ஆண்டு துவக்க விழா 22.10.2003

தொடர்ந்து தங்களது பேராதரவை நல்கிவரும் வாடிக்கையாளர்கள் மற்றும் ஆதரவாளர்களுக்கு எமது இதயங்கனிந்த நன்றி.



ராசிக்கல் மோதிரம் வாங்க
ராசியான கடை P.R.ஜுவல்லரி.
எங்கு ஜோதிடம் பார்த்தாலும் எங்களிடம்
வந்து ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம்
ரூ. 400/-க்கு வாங்கிப் பயன்பெறுங்கள்.
உடனடியாகக் கிடைக்கும். கல் ஒரிஜினல் என
முழு உத்திரவாதம் தருகிறோம். தங்கத்தில்
2 கிராம் முதல் 8 கிராம் வரை
ரூ. 1800/- முதல் ரூ. 5000/-ம் வரை
உடனடியாகக் கிடைக்கும். தபால்
எழுதினால் முழு விவர பாம்லட்
இலவசமாக அனுப்புகிறோம்.




முகவரி தெளிவாக எழுதவும்.

எமது சிறப்புப் பேட்டியை ராஜ் டீ.வியில் தினசரி காலை 6.55 மணிக்கு காணத் தவறாதீர்கள்.

"எதிர்க்கட்சிகளும் பத்திரிகைகளும், குறைகளைச் சுட்டிக் காட்டி, அவற்றிற்குத் தீர்வு சொல்வதற்குப் பதிலாக தனி நபர் தாக்குதல்களிலும், பொய்ப் பிரசாரத்திலும் ஈடுபட்டு வருகின்றன. எனவே அவற்றின் எதிர்ப்பு முனை மழுங்கிப் போய் விடுகிறது என்பதுதான் உண்மை. அந்த வகையில் தான் தி.மு.கவும் அதன் தலைவர் கருணாநிதியும் செயல்பட்டு வருகிறார்கள்" என்கிறார் அ.தி.மு.க.வின் மருத்துவ அணிச் செயலாளரும், ராஜ்யசபா உறுப்பினருமான டாக்டர் மைத்ரேயன்.

"எந்த ஓர் ஆளும் கட்சியும் தன்னைப் பற்றிய விமர்சனங்களை வரவேற்கும்; எதிர்கொள்ளும். ஆனால் எதிர்க்கட்சிகளும், பத்திரிகைகளும் செய்யும் விமர்சனங்கள் ஆக்கபூர்வமாகவும், அறிவு பூர்வமாகவும் இருக்க வேண்டும். அரசு எதைச் செய்தாலும் எதிர்க்க வேண்டும் என்ற மனோபாவத்துடன் செயல்படக்கூடாது.

# மகனுக்கு மகுடம் சூட்டவே மாநாடு!

"தி.மு.கவின் விழுப்புரம் மாநாட்டினால் எந்தத் திருப்பு முனையும் தமிழகத்தில் ஏற்படாது. வேண்டுமானால் தி.மு.க.வினருக்குத் திருப்பு முனை மாநாடாக இருக்கலாம். 'இலக்கியப் பணிக்கே முதலிடம்' என்று சொன்ன கருணாநிதி, மகனுக்கு மகுடம் சூட்டவே இந்த மாநாட்டைக் கூட்டினார். ஆனால் அதிலும் பிரச்னை இருக்கிறது. மகன்களின் மோதலால்தானே கிருஷ்ணன் மரணம்! தி.மு.க.வின் பொய்ப் பிரசாரங்களுக்கு மக்கள் விழுந்து விடாமல் விழுப்புரம் 'விழாப்' புரமாகவே இருக்கும். இந்த மாநாட்டுக்குப் பிறகு தமிழர்கள் தி.மு.க.வுக்கு 'விடை'கொடுத்து விடுவார்கள். இன்றைய சூழலில் தி.மு.க. ஒரு வாலறுந்த பட்டம்.

"அரசியல் ரீதியாக எந்தத் திசையில் போவதென்று தெரியாமல் கருணாநிதி விழித்துக் கொண்டு நிற்கிறார். எந்த வகையில் பார்த்தாலும் தி.மு.க. எங்களுக்கு ஈடு கிடையாது.

"எதற்கெடுத்தாலும் மக்கள் விரோத ஆட்சி, மக்கள் விரோத ஆட்சி, என்று சொல்லுகிறார் கருணாநிதி. எது மக்கள் விரோத ஆட்சி? 1996 - 2001ல் தி.மு.க. நடத்தியதே அதுதான் மக்கள் விரோத ஆட்சி. அதனால் தானே 2001 தேர்தலில் 196 இடங்களில் எங்களை வெற்றி வாகை சூட வைத்து தி.மு.கவுக்குச் சம்மட்டி அடி கொடுத்தார்கள் மக்கள்? 2001 தேர்தலுக்குப் பின் நடந்த ஐந்து இடைத் தேர்தல்களிலும் வெற்றி பெற்று, மக்கள் ஆதரவைத் தொடர்ந்து தக்க வைத்துக் கொண்டிருக்கிறார் புரட்சித் தலைவி. தி.மு.க.வின் பொய்ப் பிரசாரங்களுக்கு மயங்காமல், தமிழக மக்கள் முதல்வரது ஒவ்வொரு நடவடிக்கையையும் பாராட்டுகிறார்கள். ஏன்! தமிழகத்துக்கு வெளியேயிருந்தும் பாராட்டு மழை. அரசு ஊழியர் வேலை நிறுத்தத்தைத் திறம்படக் கையாண்டு, உச்சநீதி மன்றத்தின் பாராட்டைப் பெற்றார் முதல்வர். 2001ல் ஆட்சியிலிருந்து கருணாநிதி விரட்டப்பட்டபோது, கஜானாவை காலியாக்கி, அரசு திவாலாகும் நிலையில் வைத்து விட்டுச் சென்றார். கடந்த இரண்டு ஆண்டுகளில் பொருளாதாரச் சிக்கலிலிருந்து தமிழகத்தை மீட்டு, மீண்டும் அதை வளர்ச்சிப் பாதையில் கொண்டு விட்டிருக்கிறார் முதல்வர். தே.ஜ.கூ. அரசின் திட்டக் கமிஷனே, அம்மாவை இந்தச் சீரிய பணிக்காக பாராட்டியிருக்கிறது:


• மைத்ரேயன்

**சென்ற வாரம் வெங்கையா நாயுடு "அயோத்தி விவகாரத்தில் வி.ஹெச்.பி.யின் பாதையே பா.ஜ.க.வின் பாதை" என்று சொல்லி விட்டாரே!**

"காவிரிப் பிரச்னையில் அம்மாவைக் குறை கூறுவது என்பது கருணாநிதிக்கு வாடிக்கையாகப் போய்விட்ட ஒன்று. அந்தப் பிரச்னை மிகச் சிக்கலாகித் தீர்க்க முடியாமல் போனதற்குக் காரணத்தை ஆராய்ந்தால், குற்றவாளி கருணாநிதி என்று தெரியவரும். "96 - 97ல் ஐக்கிய முன்னணி அரசை

**-மைத்ரேயன்**

நடத்திச் சென்றவனே நான்தான்'' என்று மார்தட்டிக் கொண்ட கருணாநிதி, அப்போது சூழ்நிலை மிகச் சாதகமாக இருந்தும் பிரச்னையைத் தீர்க்க ஏன் முயலவில்லை? சரி, அது போனால் போகட்டும். உச்சநீதி மன்றத் தீர்ப்பைக் கூட மதித்துச் செயல்படாமல் இருக்கும் கிருஷ்ணா அரசு, பதவி விலக வேண்டும் என்று மாநாட்டில் தீர்மானம் போட்டிருக்கலாமே! ஏன் செய்யவில்லை? செய்ய மாட்டார். காரணம், அவர்தான் காங்கிரஸ் உறவுக்காகத் துடித்துக் கொண்டிருக்கிறாரே! அன்று மகன் ஸ்டாலின் விரித்த கையோடு சாத்தான் குளத்தில் பிரசாரம் செய்தார். இன்று 'கல்கி' பேட்டியில் மூடிய கையோடு காங்கிரஸ் உறவுக்காக ஏங்கியிருக்கிறார் கருணாநிதி.

"இன்றைய பொருளாதாரச் சூழலில் மானியங்களைக் குறைக்க வேண்டும் என்பது ஒரு வழிகாட்டு நெறி முறையாகவே இருக்கிறது. இந்த நிலையில்தான் ஐயாயிரம் ரூபாய்க்கு மேல் சம்பளம் வாங்குபவர்களுக்கு, கௌரவ ரேஷன் அட்டை என்று அரசு அறிவித்திருக்கிறது. ரேஷன் அரிசிக்காக அரசு கொடுத்து வந்த மானியம் ஆயிரத்து ஐந்நூறு கோடி. இந்த மானியம் வறுமைக் கோட்டுக்குக் கீழே உள்ளவர்களுக்கு மட்டுமே பயனளிக்கக் கூடியதாக இருக்க வேண்டும். எனவேதான் ஐயாயிரம் ரூபாய்க்குக் கீழே மாத வருமானம் உள்ளவர்களுக்கு மட்டும் ரேஷனில் அரிசி என்று அரசு அறிவித்திருக்கிறது. அதே போல மின்சாரத் துறையிலும் பல சீர்திருத்தங்களைச் செய்து வருகிறது தமிழக அரசு. கருணாநிதியைப் போல் சில குறிப்பிட்ட பிரிவினருக்கு மட்டும் கஜானாவைத் திறந்து விடாமல், எதிர்காலத் தமிழகத்தின் ஏற்றத்தை மனத்தில் கொண்டு, பல தைரியமான, உறுதியான முடிவுகளை எடுத்து செயல்படுத்தி வருகிறார் முதல்வர்.

''மன்னா? மழைநீர் சேகரிப்புக்கு எதிராக, மக்கள் கண்ணீரும், கம்பலையுமாக, கோட்டையை நோக்கி வருகிறார்கள்.''

''மந்திரியாரே? அவர்களது சொட்டுக் கண்ணீர் கூட வீணாகாமல் உடனே மடக்கிச் சேகரியுங்கள்!''

— ஆர்.எஸ். சந்திரசேகர்



"புதிய தலைமைச் செயலகம் கட்டுவதையும் எதிர்க்கிறார்கள்! இப்போதுள்ள நாமக்கல் கவிஞர் மாளிகை கருணாநிதி ஆட்சியில்தான் கட்டப்பட்டது. அது பாதுகாப்பற்றது என்று சொல்லி விட்டார்கள். இது தவிர அதை நிர்வகிக்கவே ஏகப்பட்ட செலவாகிறது. சட்ட மன்றத்தில் இது பற்றிய புள்ளி விவரங்களை முதல்வர் சொன்னாரே! அமைச்சரவை மாற்றங்களைக் கிண்டலாக விமர்சிக்கிறார்கள். அரசியல் சட்டப்படி தேவைக்கேற்ற, சூழலுக்கு ஏற்ப, அமைச்சர்களை மாற்றம் செய்வது, புதியவர்களை நியமிப்பது என்பது பிரதமருக்கும் முதல்வருக்கும் உள்ள தனிப்பட்ட உரிமை! மத்திய அமைச்சரவை எத்தனை முறை மாற்றப்பட்டது? இது பற்றி பிரதமரை விமர்சனம் செய்வார்களா? இந்திய அரசியல் வரலாற்றிலேயே ஓர் அமைச்சர் இலாகா இல்லாமல் பதினொரு மாதங்களுக்கு மேல் இருந்ததாகச் சரித்திரம் கிடையாது. அந்த அமைச்சருடைய உடல்நிலை, செலவுக் கணக்கு, ஆகியவற்றைப் பற்றி அதிகார பூர்வ தகவல் எதுவும் கிடையாது. இந்த விஷயத்தில் மக்களுக்குத் தகவல் சொல்லும் பொறுப்பு மத்திய அரசுக்கு உண்டு.

"அயோத்தி பிரச்னையை எழுப்ப மாட்டோம் என்று வாக்குறுதி தந்ததால் தான் தே.ஜ. கூட்டணியில் அங்கம் வகிக்கிறோம் என்கிறார் கருணாநிதி. சென்ற வாரம் வெங்கையா நாயுடு "அயோத்தி விவகாரத்தில் வி.ஹெச்.பி.யின் பாதையே பா.ஜ.கவின் பாதை" என்று சொல்லி விட்டாரே! என்ன செய்யப் போகிறார் கருணாநிதி! அவர் எந்த முடிவு எடுத்தாலும் அது சுயநலம் சார்ந்ததாகவே இருக்கும். அவரது இப்போதைய ஒரே லட்சியம், கட்சியை மகன் கையில் ஒப்படைப்பதுதான். எனவே விழுப்புரம் மாநாடு பட்டாபிஷேகத்துக்கான முன்னோட்டமே தவிர, அதற்கு வேறு எந்த முக்கியத்துவமும் கிடையாது" என்று கோடமாகக் கூறுகிறார் மைத்ரேயன்.

சந்திப்பு : ப்ரியன்
படங்கள் : ராஜன்

போடா
வழக்குகள் பற்றி
இவ்ளோ கேள்விகள்
இருக்கு... சீக்கிரம்
விளக்கம்
கொடுங்க....

கொர்ர்..
கொர்ர்

# மானியங்கள் ஒரு பக்கம்; கிடுக்கிப்பிடி மறுபக்கம்!

தமிழக முதல்வர் வெளியிட்டுள்ள புதிய தொழில் கொள்கையில் பல சீரிய அம்சங்கள் காணப்படுகின்றன. தொழில் துறையில் எட்டு சதவிகித வளர்ச்சி என்கிற கவர்ச்சிகரமான இலக்கு நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது.

தொழில்துறை முன்னேற வேண்டுமானால், அடிப்படைக் கட்டமைப்பு வசதிகள் (infrastructure) முதலில் பெருக வேண்டும். இதைக் கருத்தில் கொண்டு, கட்டமைப்பு அபிவிருத்தி வாரியம் ஒன்று நிறுவப்பட இருக்கிறது. அபிவிருத்தியைச் சுலபமாக்கும் சட்டமும் புதிதாக இயற்றப்படவிருக்கிறது. கட்டமைப்புத் துறையில் தனியார் முதலீடு ஊக்குவிக்கப்படவிருக்கிறது. விமான நிலையங்களும் துறைமுகங்களும் மேம்படுத்தப்படும் என்று அறிகிறோம்.

அரசுத்துறை இனி உற்பத்தியில் ஈடுபடாது. அரசுத்துறை உற்பத்தி நிறுவனங்கள் தனியார் மயமாக்கப்பட உள்ளன.

தொழிற் சட்டங்களைத் திருத்துவதன் மூலம், தனியார் துறையில் ஆரோக்கியமான தொழில் போட்டிக்கு வழி செய்யப்படும் என்று அறிகிறோம்.

முதலீட்டாளர்களுக்குச் சலுகைகளும், மானியங்களும் நிர்ணயிக்கப் பட்டுவிட்டன. மாசு கட்டுப்பாடுக்கெனச் செய்யப்படும் முதலீடுக்கும், பேடன்ட் உரிமை பெறுவதற்கு ஆகக் கூடிய செலவுக்கும், கணிசமான மானியங்கள் ஒதுக்கப்படும்.




கல்கி



2003 செப்டெம்பர் 28
சுபானு புரட்டாசி 11
மலர் : 62
இதழ் : 9


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




தனியாக ஒரு சிறப்புப் பொருளாதார மண்டலம் நிறுவப்பட்டு, அதனுள் இயங்கும் நிறுவனங்களுக்குக் கூடுதல் சலுகைகள் தரப்படும்.

இவை அனைத்துமே படிப்பதற்கும் கேட்பதற்கும் மிக ஆனந்தமாக இருக்கின்றன. ஆனால், போட்ட திட்டத்தின்படி எட்டு சதவிகித வளர்ச்சி காண வேண்டுமானால், வேறு பல உறுதியான நடவடிக்கைகளும் அவசியமாகின்றன.

முதலாவதாக, அனைத்துத் திட்டங்களையும் சென்னையைச் சுற்றி வரவே அமைப்பதில் அர்த்தமில்லை. ஜனத்தொகைப் பெருக்கத்தினாலும், தண்ணீர்க் கஷ்டத்தினாலும் ஏற்கெனவே தலைநகரம் திணறிக் கொண்டிருக்கிறது.

சிறுசேரியில் தொடங்கியுள்ள புதிய மின்னணு நகரம் சென்னையிலிருந்து அதிக தொலைவில் இல்லை.

என்னதான் கடல்நீரைக் குடிநீராக்கும் திட்டங்கள் போட்டாலும், அவை ஏற்கெனவே உள்ள தண்ணீர்ப் பஞ்சத்தைக் குறைப்பதற்குத்தான் ஓரளவு உதவுமேயொழிய, புதிய தொழிற்பேட்டைகளுக்குத் தேவையான குடிநீர் மற்றும் தொழில் சார்ந்த தேவைகளுக்குப் போதுமானதாக இராது.

கிராமப் பகுதிகளிலும் சிறிய நகரங்களைச் சுற்றியும், உற்பத்தியுடன் வேலை வாய்ப்புகளையும் பெருக்கக்கூடிய தொழிற்திட்டங்களே இன்று அவசர, அவசியத் தேவை.

முதல்வரின் புதிய தொழிற் கொள்கை, இவற்றின் பால் அதிக கவனம் செலுத்தவில்லை. பிற்பட்ட, மிகவும் பிற்பட்ட பகுதிகளின் மேம்பாடு குறித்து மௌனமே காக்கிறது. அன்னிய நேரடி முதலீடுக்கு நகர்ப்புறங்களில் வசதி செய்துவிட்டு, இவ்வாறு ஊரகப் பகுதிகளைக் கண்டுகொள்ளாமல் இருப்பது புதிய பிரச்னைகளுக்கு வழி வகுக்கும்.

இதனினும் கவலை தருகிற விஷயம், முன்னூறு கோடி முதலீடு செய்வோருக்கு உதவியும் மானியங்களும், அரசின் 'விருப்ப' அடிப்படையில் வழங்கப்படும் என்கிற முடிவு. இந்த மானியங்கள், விருப்பு - வெறுப்பின்றி, தகுதியுள்ள முயற்சிகளுக்கு மட்டுமே வழங்கப்படும் என்பதற்கு உத்தரவாதம் என்ன...? இந்த அம்சம் மிகவும் கவனமாக மறுபரிசீலனை செய்யப்பட்டு முறைகேடுகளுக்கு இடமளிக்காத வகையில் வடிவமைக்கப்பட வேண்டும்.

தொழிலாளர்களுக்குக் கூடுதல் சுதந்திரம் வழங்கும் வகையிலும், அதேசமயம்




அவர்களுடைய பொறுப்புணர்ச்சியை அதிகரிக்கும் வகையிலும், தொழிற்சட்டத் திருத்தங்கள் வரும் என்கிறது முதல்வரின் அறிக்கை.

இந்த சொல்ஜாலத்தின் பின்னணியில் தொழிலாளர்களின் உரிமைகள் பறிக்கப்படாவிட்டாலும் குறைக்கப்படும் என்பது உறுதி. அதே தினத்தில் அரசு ஊழியர்களைப் பணி மாற்றம் செய்யும் அதிகாரத்தை அபரிமிதமாகப் பெருக்கும் வகையில், ஒரு அவசரச் சட்டத் திருத்தம் கொண்டு வருகிறார் முதல்வர். ஆளுநர், திருத்தங்களுக்குச் சம்மதம் தருகிறார்!

ஒரு பக்கம் உற்பத்திப் பெருக்கத்துக்கான முயற்சிகள்; மறுபக்கம் அரசுத் துறை ஊழியர்கள், தொழிலாளர்கள் மீது அதீதமான கிடுக்கிப்பிடி...! இந்தப் போக்கு, தொழில்துறை முன்னேற்றத்துக்குத் தடையாக விளங்கும் என்பதை முதல்வர் உணர வேண்டும்.

தனியார் துறையினர் எதற்கெடுத்தாலும் அரசின் அனுமதி அல்லது அங்கீகாரத்துக்குக் கைகட்டிக் காத்திருக்கத்தான் வேண்டியிருக்கிறது. தொட்டதற்கெல்லாம் படிவங்களை நிரப்பி, கட்டணங்கள் செலுத்துவதே பெரிய வேலையாக இருக்கிறது.

இத்தகைய சூழ்நிலையில் அரசுத் துறை ஊழியர்கள் ஒத்துழைக்க வேண்டுமானால், அவர்களுடைய மனோநிலை உற்சாகமாக இருக்க வேண்டும். அரசின் கையில் அதிகாரங்களைக் குவித்துக் கொள்வதன் மூலம், அரசு ஊழியர்களின் ஒத்துழைப்பைப் பெற்றுவிட முடியாது; அவர்களைத் தட்டிக் கொடுத்து, உற்சாகப்படுத்திதான் வேலை வாங்க வேண்டும். அரசுத் திட்டங்களில் அவர்களுக்கும் பங்கு உண்டு என்பதை உணரச் செய்து, திட்டங்களை அமல்படுத்துவதில் அவர்களையும் ஈடுபடுத்த வேண்டும். இல்லாவிட்டால், இப்போதே அவதிப்படுத்தும் சிவப்பு நாடாவின் முடிச்சு மேலும் இறுகும்!

என்னதான் கவர்ச்சிகரமான தொழில் கொள்கை வரையப்பட்டாலும் அதனை நடைமுறைப்படுத்தும்போது, தமிழகம் எங்கும் எத்தனை புதிய நிரந்தர வேலை வாய்ப்புகள் உருவாகி, அதனால் வேலை இல்லாதோர் எத்தனை பேர் பயன்பெற்றார்கள், என்ற அடிப்படையில்தான் அதன் வெற்றி தோல்வி அமையும்.

புதிய தொழில் கொள்கை இந்த நோக்கில் சிந்தித்துத் திருத்தி அமைக்கப்படுவது நல்லது.

# ஸ்கேனிங்

* பிறந்து வளர்ந்தது?
— கடவுளின் தேசம்.

* வயது?
— பட்டாம்பூச்சி படபடக்கிறது.

* ஆண்கள்...
— கண்களில் மின்சாரம் எடுப்பவர்கள்...



* தாலி...?
— நான் புரட்சிப் பெண்.

* அழகு?
— டேவிட் பெக்காம்.

* நடிப்பு?
— சக்ஸஸ்.

* பணம்?
— தற்போதைய கடவுள்.

* கடவுள்?
— என்ட குருவாயூரப்பா!

* பயம்...?
— சாமியார்கள்!

* மறக்க முடியாதது?
— முதல் காதல்.

* முதல் காதல்?
— மறந்து போச்சே!

* ஆசை?
— ஆஸ்கர் (கொஞ்சம் ஓவர்தான்!)

* ஸ்ஸ்ஸ்...?
— உப்பு, புளி, மிளகாய்.

* பிடித்தவர்?
— அந்த அழகான வில்லன் (வருங்காலக் காதலனாம்!)

* பிடிக்காதவர்?
— மொக்கராசு.

ச்சே, இனிமேல் என்ன பேச்சு?




— மொக்கராசு





* ஃபிர்தௌஸ்



* இரவி



* செல்ல கணபதி

# "அங்கீகாரமல்ல அவமானம்!"

## -நாஞ்சில் நாடன் குமுறல்

* நாஞ்சில் நாடன்

மொத்தம் இரண்டு லட்சம் புத்தகங்கள். அத்தனையும் பத்து நாட்களில் விற்றுத் தீர்ந்தன. கடந்த ஆண்டு நடைபெற்ற கோவை புத்தகக் கண்காட்சியில்தான் இந்தப் புயல் வேக விற்பனை! அதிக எழுத்தறிவு பெற்ற இந்திய நகரங்களின் வரிசையில், கோவைக்கு ஐந்தாவது இடம்! சாட்டிலைட் சேனல்களின் தாக்குதல், பிஸியான தொழில் நகர வாழ்க்கை - இரண்டுக்குமிடையிலும் புத்தக வாசிப்பை தனிக் காதலோடு தக்க வைத்திருக்கிறார்கள் கோவை வாசகர்கள்.

"கோவைக்காரர்கள் நேரத்தை மதிக்கிறவர்கள். ஒரு புத்தகம் படித்தால் என்ன பயன் கிடைக்கும் என்று எடை போட்டுப் படிக்கிறவர்கள். தரமான இலக்கியம் வாசிப்பதில் அதிகம் ஆர்வம் காட்டும் அதே நேரம், தொழில் மற்றும், சுய முன்னேற்ற நூல்களையும் விரும்பிப் படிக்கிறவர்கள்" என்கிறார் அப்துல் கலாமின் 'அக்னிச் சிறகுகள்' புத்தகத்தை ஒரு லட்சம் பிரதிகள் விற்று, குடியரசு தலைவரின் கையால் சாதனை விருது பெற்றிருக்கும் விஜயா பதிப்பகம் மு. வேலாயுதம்.

"கோவையைப் பொறுத்தவரை இளம் வாசகர்கள் அதிகம். இவர்களில் பெரும்பாலானவர்கள் சிறு தொழிலதிபர்கள். இவர்களுக்குத் தன்னம்பிக்கை தருவது புத்தகங்கள்தான்" என்கிறார் கோவை வாசகர் இரவி.

ஆனால் கோவையில் வசித்து வரும் எழுத்தாளர் நாஞ்சில் நாடனோ, ஒட்டுமொத்தத் தமிழ் வாசகர்கள் குறித்து பெரிதும் வருந்துகிறார். "முப்பது ஆண்டுகளாக எழுதி வருகிறேன். ஆனால் எனது நாவலான 'தலைகீழ் விகிதங்கள்', 'சொல்ல மறந்த கதை' என்ற



• மு. வேலாயுதம்



• சி.ஆர். இரவீந்திரன்



• சிற்பி

திரைப்படமாக வெளி வந்த பின்னரே, நான் அறியப்படுகிறேன். இது எனக்கு அங்கீகாரமல்ல, அவமானம்! இந்த அவமானத்தில் ஒவ்வொரு தமிழ் வாசகனுக்கும் பங்குண்டு'' எனக் குமுறும் இவர், 'நாஞ்சில் நாட்டு வெள்ளாளர் வாழ்க்கை - காலம் நிகழ்த்திய மாற்றங்கள்' என்ற தலைப்பில் ஆய்வு நூல் எழுதி வருகிறார்.

தமிழ் கவிதைக்காக சாகித்ய அகாதமி விருது பெற்ற கவிஞர் சிற்பி, இராமானுஜரின் சீர்திருத்தக் கருத்துகளை மையமாக வைத்து, அவரது முழு வாழ்க்கை வரலாற்றை புதுக்கவிதையாக வடித்து வருகிறார். தவிர காந்தியின் வாழ்வில் நடந்த நிகழ்வுகளையும், புதுக்கவிதை வடிவில் எழுதி வருகிறாராம்.

கோவை வாழ் குழந்தை கவிஞரான செல்ல கணபதி, அறுபத்து இரண்டு வயதுக் குழந்தையாக, அதே புன்னகையோடு சிறிதும் அயராமல், குழந்தைப் பாடல்களைப் படைத்து வருகிறார். தற்போது புது முயற்சியாக, பதினாறு குழந்தைப் பாடல்களைக் கொண்ட மல்டி மீடியா குறுவட்டினை (சிடி) உருவாக்கியுள்ளார். ''இந்தக் குறுவட்டினை வெளிநாடுகளில் வசிக்கும் தமிழ்க் குடும்பங்கள் அதிகம் வாங்குகிறார்கள். குழந்தைப் பாடல்களுக்கு காட்சி வடிவம் கொடுத்தால், எதிர்காலத் தலைமுறையின் அறிவு, கருணை வறட்சியைப் போக்கலாம்'' என்கிறார்.

எழுதுவதையே முழுநேர வேலையாகச் செய்து வரும் பல கோவை இலக்கிய கர்த்தாக்களுக்கு மத்தியில், விவசாயியாக இருந்துகொண்டு ஈரம் கசியும் கொங்கு மண் வாசனை எழுத்துகளை எழுதி வரும் சி.ஆர். இரவீந்திரன், தற்போது சாகித்ய அகாடமியின் தமிழ்மொழி ஆலோசனைக் குழுவில் இடம் பெற்றுள்ளார்.

கோவையில் நம்பிக்கையூட்டும் புதிய படைப்பாளிகளுக்கும் பஞ்சமில்லை. தர முத்திரையோடு சிறுகதைகளை எழுதி வரும் ஃபிர்தௌஸ் ராஜகுமாரன் (இயற் பெயர் நசீர்) தற்போது தனது முதல் நாவலை எழுதி வருகிறார். ''இந்த நாவல் இஸ்லாமிய வழிபாட்டு முறைகளில் இளந் தலைமுறையினர் செய்து வரும் பலவித தவறுகள் மற்றும் இஸ்லாமிய மூடப் பழக்க வழக்கங்களையும் வெளிச்சம் போட்டுக் காட்டும். இதனால் எதிர்ப்புகள் வரும். மதத்திலிருந்து நான் வெளியேற்றப் படலாம். ஆனால் ஒரு எழுத்தாளனாக இந்த நாவலை வெளிக் கொணர்வதை எனது கடமையாக நினைக்கிறேன்'' என்று அதிர்ச்சி தருகிறார் இந்தப் படைப்பாளி.

கட்டுரை, படங்கள்:
**திருநாவு**






**உங்களின் கனவு இல்லம்**
**நினைவாகி மலர்ந்திட...**

- கவர்ச்சிகரமான வட்டி விகிதங்கள்
- வசதியான நீண்டகால தவணைத் திட்டங்கள்
- உடனடி பரிசீலனை - விரைவான சேவை

மேலும் விவரங்களுக்கு அருகில் உள்ள கிளையை அணுகுங்கள்.

FORTUNE-CH



## Bharat Overseas Bank Ltd.

**A bank owned by 7 banks.**

H.O: Habeeb Towers, 196, Anna Salai, Chennai 600 002. Tel: 2852 2983, 2852 0748.
E-mail : help@bharatoverseasbank.com Visit us at : www.bharatoverseasbank.com

*We'll be with you, right through*



பெயர் தெரியாத பறவையொன்று காயத்ரி ஜெபம் உச்சரிக்க, கிராமம் கண் விழித்தது. அதிகாலையின் ரேகைகள் மெல்ல மெல்ல இரவின் கறுத்த விரலிலிருந்து விடுபடத் தொடங்கின. வயல்வெளிகளில் கொக்குகள் பூக்கத் தொடங்க, சோளக்காட்டு பொம்மைகள் நனைந்த வைக்கோல் உடம்புடன் இன்னுமொரு நாளுக்கான பறவை விரட்டலை ஆரம்பிக்கத் தொடங்கின.

கிழக்கே வாழைத் தோட்டங்களுக்கு மேலாகச் சூரியன் எட்டிப் பார்க்கிறது. பம்புசெட்டுகளில் குளித்துக் கொண்டிருக்கும் இளைஞர்கள் சூரியனைப் பார்த்து "என்னப்பா இன்னிக்கு ரொம்ப லேட்டா வர்றே?'' என்கிறார்கள். சூரியன் செஞ்சிவப்பிலிருந்து மஞ்சள் வெளிச்சத்திற்கு மாறியபடி "கொஞ்சம் கண் அசந்துட்டேன். அது சரி, காயத்ரி வந்தாச்சா?'' என்கிறது. "வர்ற நேரம் தான்'' என்றபடி கண்களில் ஆர்வம் மினுங்க, தோளில் துண்டோடு இளைஞர்கள் வரப்புகளின் வழியாக நடக்கத் தொடங்குகிறார்கள். வேப்ப மரமும் ஒரு டீக்கடையும் இருக்கும் கிராமத்தின் பேருந்து நிறுத்தம், நன்றாக, பார்வைக்குத் தெரியும்படியான ஒரு கோணத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு, அடிக்கடி மறைக்கும் மேகங்களைக் கடிந்தபடி, "காயத்ரி இப்ப வந்திருவா" என்று தனக்குள் பேசிக் கொண்டு, சூரியன் காத்திருக்கத் தொடங்குகிறது.

எங்கள் கிராமத்தின் ஒரே ஒரு அழகி காயத்ரி. அழகு என்றால் அப்படி ஒரு அழகு. கடவுள் மழையையும் வெயிலையும் ஊற்றி அவள் கண்களைப் படைத்திருந்தான். கறுப்பு வெள்ளை நிறத்திலும் பூக்கள் இருக்கும் என்று அவள் கண்களைப் பார்த்துத்தான் நாங்கள் அறிந்து கொண்டோம். ஒரே நேரத்தில் வண்டாகவும் பூவாகவும் அவள் கண்கள் மாறி மாறி விஸ்வரூபம் கொள்ளும். வண்ணத்துப் பூச்சியின் சிறகைப் போல் இமைகள் படபடக்க, அவள் புருவச் சுழிப்பில் அலைக்கழிந்தவர்கள் அநேகம். பாலும் தேனும் பக்குவமாகக் கலந்து அவள் நிறமாகியிருந்தது. பிரபஞ்சத்தின் பங்கிற்கு வெண்ணிலா தன் துண்டுகளைக் கொஞ்சம் அவள் கன்னத்திற்குக் கொடுத்திருந்தது. ரம்பா ஊர்வசியின் வியர்வையுடன், பூக்களின் மகரந்தம் கலந்து, அத்தர் தெளித்தால் என்ன வாசனை வருமோ, அந்த வாசனையை அவளுக்கு இயற்கை அளித்திருந்தது. கடவுள் ஒரு கைதேர்ந்த கவிஞன் என்பதற்கும், சிற்பி என்பதற்கும், ஓவியன் என்பதற்கும் அவளே சாட்சியாக இருந்தாள்.

அவளை முன்னிறுத்தி கிராமத்தில் நிறைய கிளைக்கதைகள் உருவாகியிருந்தன. அவற்றில் எனக்குப் பிடித்த ஒரு கிளிக்கதையை உங்களுக்குச் சொல்கிறேன். கிறிஸ்துவுக்கு முன்பு (கி.மு); கிறிஸ்துவுக்குப் பின்பு (கி.பி.) என்று பிரிப்பதைப் போல, காயத்ரிக்கு முன்னால் (கா.மு) காயத்ரிக்குப் பின்னால் (கா.பி) என்று பிரித்துக் கொள்வது கதை சொல்ல வசதியாக இருக்கும். கா.மு.வில் எங்கள் ஊரில் கிளிகள் முழுக்க முழுக்க நூறு சதவிகிதம் பச்சை நிறத்திலேயே இருந்தன. மூக்கு கூடச் சிவப்பு கிடையாது. அதுவும் பச்சை நிறம்தான். ஒருநாள் கிளிக் கூட்டம் ஒன்று காயத்ரி வீட்டுத் தோட்டத்தின் மகிழ மரத்தில் அமர்ந்தபடி கதை பேசிக் கொண்டிருந்தது. காயத்ரி தன் பதினைந்தாவது அகவைக்கு அடியெடுத்து வைத்த புண்ணிய வருடம் அது. அப்போதெல்லாம் கிராமத்தின் குளியலறை மேலே கூரையற்று திறந்த வெளியில் இருக்கும். காயத்ரி குளித்துக் கொண்டிருக்கிறாள். கிளிகளுக்கும் கண் உண்டு அல்லவா! காயத்ரியின் அழகில் அவற்றின் சிறகுகள் தந்தி அடிக்கத் தொடங்குகின்றன. காயத்ரியின் உதடுகள் சிவந்த கனியைப் போல இருக்க, புதுவிதமான கனி என்று நினைத்து, கிளிகள் அவற்றை அலகுகளால் கொத்திப் பார்க்கின்றன. அன்று முதல் அவற்றின் மூக்குகள் சிவந்து விட்டன. இப்படி காக்கைகள் கறுப்பான கதை; கொக்குகள் வெள்ளையான கதை, வானவில் உடைந்து விழுந்த கதை, என நிறையக் கதைகளை உருவாக்கிய படி காயத்ரியின் இருப்பு கிராமத்தை உலுக்கிக் கொண்டிருந்தது.

9

அந்தக் காலத்தில் பத்தாம் வகுப்பு, பன்னிரண்டாம் வகுப்பு. அரசு பொதுத் தேர்வு எழுதும்



# கிராமம் நகரம் மாநகரம்

இளைஞர்கள் பெயிலாவதற்கு இரண்டே காரணங்கள்தான் இருந்தன. ஒன்று ஆங்கிலம் அல்லது கணிதப் பாடம், அடுத்தது காயத்ரி.

காயத்ரி அப்போது ப்ளஸ் டூ படித்துக் கொண்டிருந்தாள். அருகில் உள்ள நகரத்தில் அவள் படிக்கும் அரசினர் பெண்கள் மேல்நிலைப்பள்ளி இருந்தது. காலையில் எழுந்ததும் தலை குளித்து, சுருட்டை முடியில் சூரியன் அலையடிக்க கண்ணாடி முன் வந்து நிற்பாள். அவள் அழகில் வெப்பமாகி கண்ணாடிக்குப் பின் பாதரசம் உருகும். பட்டுப் பாவாடை தாவணி உடுத்தி பேருந்து நிலையத்திற்கு வருவாள். நாங்களெல்லாம் எத்தனை முறை கைகாட்டினாலும் நிற்காத பிரசன்னா பஸ் சர்வீஸ், அவளது சுண்டு விரல் அசைவிற்கே வழுக்கிக் கொண்டு நிற்கும். தன் அழகு குறித்த ஒட்டுமொத்த கர்வத்துடன், எங்களை ஒரு தூசிப் பார்வை பார்த்துவிட்டுப் பேருந்தில் ஏறுவாள். எங்களை அவள் கடந்து செல்லும் போது காற்றில் ஈரப்பதம் குறைந்து வேர்க்கத் தொடங்கிவிடும்.

பள்ளியிலும் அவளே நாயகி. சக தோழிகளின் மனத்தில் அழகு குறித்த தாழ்வு மனப்பான்மையைக் கிளப்பி அவர்களின் தோல்வியிலிருந்து தன் வெற்றியைச் சுவீகரித்துக் கொள்வது அவளுக்குப் பிடித்தமான ஒன்று. ஒவ்வொரு நாளும் தன் அழகால் அலைக் கழிந்தவர்களின் பட்டியல் ஏறிக் கொண்டே போவது குறித்து, ஆழ்மனத்தில் காயத்ரிக்கு ஒரு குரூர சந்தோஷம் இருந்தது. இரவு தூங்கும் போது கண்ணாடி முன் நின்று அதைப் பகிர்ந்து கொள்வாள். "இன்னிக்கு நூற்றி இருபத்தியொரு பசங்க காலி!" கண்ணாடிக்குப் பின், வழக்கம் போல் வெப்பத்தால் பாதரசம் உருக்கும்.

காயத்ரியை நாங்கள் எல்லாருமே காதலித்தோம். நாங்கள் என்றால் எங்கள் கிராமம்; பக்கத்து கிராமம், அவள் படிக்கும் நகரம் என எல்லாம் சேர்த்து குறைந்தபட்சம் ஆயிரத்து சொச்ச இளைஞர்கள் என்று அர்த்தம். யாராவது ஒருவரைக் காதலித்தால் தன் ரசிக பட்டாளத்தை இழந்து விடும் அபாயம் இருப்பதால், காயத்ரி யாரையுமே காதலிக்கவில்லை. நிலவின் பிம்பம் எல்லா நதிகளிலும் விழுகிறது. அதற்காக எல்லா நதிகளையும் நிலா காதலிக்க வேண்டுமா என்ன?

வெள்ளிக்கிழமைகளில் காயத்ரி கோயிலுக்கு வருவாள். நாங்கள் பிள்ளையாருக்குப் பக்தனாகி விடுவோம். பிள்ளையாரின் கணக்கில் எங்கள் வேண்டுதலான நூற்றியெட்டுத் தேங்காய் அப்படியே இருக்கும். ஒரு காலமும் அந்தத் தேங்காய்கள் உடைக்கப் படப் போவதில்லையென்று பிள்ளையாருக்கும் தெரியும். காயத்ரி, கோவிலை வலம் வந்து, நமஸ்கரிப்பாள். ஒருமுறை தீபாராதனைத் தட்டின் கற்பூர வெளிச்சத்தில் காயத்ரியைப் பார்க்க நேர்ந்தது. கோயில் பிராகாரங்களின் வௌவால் வாசனை, விபூதி வாசனை, குறு குறுக்கும் புறாக்களின் வாசனை என எல்லாம் கலந்து, கற்பூர ஒளியில் காயத்ரியைப் பார்க்கும் போது ஒரு அமானுஷ்யத் தோற்றம் புலனானது. அவளது அழகின்

நா. முத்துக்குமார்

சுடர் முன் நாங்கள் பயந்து போய் கண்களை மூடிக் கொண்டோம். தைரியமாய் அவளைப் பார்த்த நண்பன் ஒருவன் பைத்தியமாகி விட்டான். படுபாவி. தாங்கக்கூடிய அழகா அது? ஆயிரம் கோடி மின்னல்களின் ஒரு நொடி தரிசனம் அல்லவா அது! காயத்ரி சென்ற பிறகும் அந்த நண்பன் பிரக்ஞையற்று புலம்பிக் கொண்டே இருந்தான். அவனது ஞாபகத்தில் அந்தத் தருணம்; அந்தக் காட்சி மட்டுமே உறைந்து விட்டது. இன்றைக்கும் ஏதோ ஒரு தெருவில் அந்தக் கடைசிக் கணத்துடனும், கிழிந்த ஆடைகளுடனும் அவனை எதிர்கொள்ள நேர்கிறது. அழகுக்குப் பின்னால் இப்படியெல்லாம் ஆபத்து இருக்குமா? தன் கண்ணாடியிடம் சொல்லிப் பெருமைப்பட காயத்ரிக்கு ஒரு புதிய பைத்தியம் கிடைத்து விட்டது.

எங்களை மையம் கொண்ட புயல் ஒருவழியாகக் கரையைக் கடந்தது. காயத்ரியின் அப்பாவுக்கு மாநகரத்திற்கு வேலை மாற்றம் வந்தது. ஒரு வாரம் கிராமமே சலனமற்று இருந்தது. ஒருவர் கண்ணீர் மற்றவருக்குத் தெரியாமல் காயத்ரியை வழியனுப்பி வைத்தோம்.

மாநகரத்தில் காயத்ரி கல்லூரியில் சேர்ந்தாள். கல்லூரி திறக்கும் முதல் நாள் கண்ணாடி முன்பு நின்றாள். ஒரு கிராமத்தின் ஆண்கள் பட்டியலே கண்ணாடிக்குள் மங்கிப் போயிருந்தது. தனக்கு ராசியான பட்டுப் பாவாடை தாவணியில், காயத்ரி கண்களுக்கு மை தீட்டியபடி கண்ணாடியிடம் சொன்னாள்: "இன்னிக்கு பசங்க சாகப் போறாங்க பாரு."

மாநகரத்துப் பேருந்து நிலையத்தில் கூட்டம் அதிகமிருந்தது. ஷேர் ஆட்டோக்கள் வேறு அடிக்கடி பயணிகள் பக்கம் நின்று ஹாரன் அடித்துக் கொண்டிருந்தன. காயத்ரி சுற்றுமுற்றும் பார்த்தாள். யாருமே அவளைக் கவனிப்பதாகத் தெரியவில்லை. அவள் செல்ல வேண்டிய பேருந்துகளை விட்டு விட்டு அப்படியே நின்று கொண்டிருந்தாள். இப்போது கூட்டம் கொஞ்சம் குறைவாக இருந்தது. நோஞ்சானா சோடா புட்டி போட்டிருக்கும் பையன் கூட காயத்ரியைத் திரும்பிப் பார்க்கவில்லை. "டேய் புட்டி... பார்றா... எவ்வளவு அழகா இருக்கேன்'' மனத்துக்குள் அவனைத் திட்டிக் கொண்டாள்.

கல்லூரியில் மிடி, சுடிதார், ஜீன்ஸ் என்று விதவிதமான உடைகளில் பெண்கள். எதற்கெடுத்தாலும் சிரிப்பு. "த்தோடீ.. தாவணி... செந்தமிழ் நாட்டு தமிழச்சி" என்று காயத்ரியைக் காட்டி ஒரு சிரிப்பு. காயத்ரிக்கு அழுகை அழுகையாக வந்தது. எல்லாப் பெண்களுமே அழகாய் இருந்தார்கள். நுனி நாக்கு ஆங்கிலத்தில் தடுமாறச் செய்தார்கள். முதன் முதலாகத் தாழ்வு மனப்பான்மையின் கதவைத் திறந்து உள்ளே நுழைகிறாள் காயத்ரி. மதியம் விடுப்பு எடுத்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்பி விட்டாள். பேருந்து காலியாக இருந்தது. அந்த ஓட்டைப் பல் கண்டக்டர் கூட டிக்கெட் கொடுத்து விட்டு, வேறெங்கோ வேடிக்கை பார்க்கத் தொடங்கி விட்டான். இந்த நாள் மட்டும் இல்லை, இனிவரும் எந்த நாளுமே தனக்கான நாள் இல்லை என்று காயத்ரிக்குப் புரியத் தொடங்கியது. இரவு, கண்ணாடி முன்பு நின்று அழத் தொடங்கினாள். உருக்குவதற்கு பாதரசம் தீர்ந்த நிலையில் கண்ணாடி அவளையே முறைத்துக் கொண்டிருந்தது. மாநகரம் தன் ரகசியக் குறிப்பேட்டைத் திறந்து கிராமத்திலிருந்து ஒரு லட்சத்து பதிமூன்றாயிரத்து நாற்பதாவது காயத்ரி, என்று எழுதி விட்டு அடுத்த காயத்ரிக்காகக் காத்திருக்கத் தொடங்கியது.

(சந்திக்கிறேன்)



# ஆசையா இருக்கா இங்கிலீஷ் பேச?



**இங்கிலீஷ்ல பேசணும்னு ஆசையாத் தான் இருக்கு. ஆனால்... ஏதாவது தப்பா பேசிடுவோமோன்னு பயமா இருக்கு. இதுதானே உங்க ப்ராப்ளம்?**

**இனி NO PROBLEM!**

விவேகானந்தா இன்ஸ்டிட்யூட்டின் **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்** சேர்ந்து நீங்கள் ஈஸியாக இங்கிலீஷ் பேசக் கற்றுக் கொள்ளலாம்.

இனிய தமிழ் விளக்கங்களுடன் எளிய முறையில் அமைக்கப்பட்டுள்ள **ஸ்போக்கன் இங்கிலீஷ் கோர்ஸ்** பாடங்களை, உங்களது ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் படித்து, பிராக்டிஸ் செய்தால் போதும். தயக்க மின்றி இங்கிலீஷில் சரளமாகப் பேச ஆரம்பித்து விடுவீர்கள்.

கடந்த **22** ஆண்டுகளில் **15** லட்சத் திற்கும் மேற்பட்டவர்கள் இப்பயிற்சி யின் மூலம் பயனடைந்துள்ளனர்.

***சரளமாக இங்கிலீஷ் பேச வேண்டும் என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் இப்பயிற்சியின் மூலம் நிச்சயம் நிறைவேறும்.***

**எழுதப் படிக்கத் தெரிந்தால் போதும்!**

இங்கிலீஷ் வார்த்தைகளை ஓரளவு எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்** சேர்ந்து, சரளமாக இங்கிலீஷ் பேசப் பயிற்சி பெறலாம்.

**இலக்கணம்** மற்றும் **உரையாடல்** பயிற்சிப் பாடங்கள் அடங்கிய இக் கோர்ஸின் கட்டணம் **ரூ. 395/-** மட்டுமே.

***அடிப்படையிலிருந்தும் ஆரம்பிக்கலாம்!***

இங்கிலீஷ் வார்த்தைகளை எழுதப் படிக்க இயலாதவர்கள் அடிப்படையி லிருந்து தொடங்கி ஆங்கில வார்த்தை களை ஸ்பெல்லிங் மிஸ்டேக் இல்லாமல் எழுதப் படிக்க கற்றுக்கொண்டு இங்கிலீஷில் மிகச் சரளமாகப் பேசப் பயிற்சி பெறலாம்.

**அடிப்படை** மற்றும் **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸின்** கட்டணம் **ரூ. 525/-** மட்டுமே.

கீழே உள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து இன்றே அனுப்புங்கள். பாடங்களை **V.P.P.** மூலம் உடனே அனுப்பு கிறோம். தபால்காரரிடம் பணத்தைச் செலுத்திப் பெற்றுக் கொள்ளுங்கள். பாடங்களை தினசரி அரைமணி நேரம் பிராக்டிஸ் செய்து மடமடவென இங்கிலீஷில் பேச ஆரம்பியுங்கள்.

**இதோ கூப்பன்**

☐ நான் விவேகானந்தாவின் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். பாடங்களை **V.P.P.**யில் அனுப்புங்கள். ரூ. **395/-** செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

☐ நான் அடிப்படை (Basic) மற்றும் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். பாடங்களை **V.P.P.**யில் அனுப்புங்கள். ரூ. **525/-** செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

(தேவையான கட்டத்தில் ✓ குறியிடுங்கள்)

AMR

பெயர் : ..............................

முகவரி : ..............................

..............................

..............................பின்கோடு..............................

**விவேகானந்தா இன்ஸ்டிட்யூட்**
9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை - 600 017.

கூப்பனை 15 நாட்களுக்குள் அனுப்பி பாடங்களுடன் 416 பக்கங்கள் கொண்ட இங்கிலீஷ் - தமிழ் டிக்ஷனரி ஒன்றினைப் பரிசாகப் பெறுங்கள்.

06/TAM/03/NAGA

தக்ஷின் சித்ராவிலுள்ள ஒரு கலை நயமான வீட்டின் முன்பு அபிநயம் பிடித்துக் கொண்டிருந்தார் சதா! 'ஜெயம்' சதா!

'போய்யா, போ!' என்று ஜெயத்தில் கையை ஒரு மாதிரி நீட்டுவாரே அதே போல நாமும் நீட்ட, 'என்ன கிண்டலா?' என்று கண்களை உருட்டிய சதாவிடம், "கிண்டலில்லை, ரொம்ப அழகாயிருக்கு" என்றோம். இலேசாகச் சிரித்தவரிடம் "என்ன இந்தப் பக்கம்?" என்று கேட்டதும், 'விளம்பர படம்' என்றார்.

"விளம்பர படமா?"

"நான் இதுவரை ஃபோட்டோ செஷன்கூட பண்ணினதில்லை. இப்பதான் ஃபோட்டோ செஷன் முடிஞ்சு முதன் முதலா விளம்பர படத்துல நடிக்கிறேன். 'என்ன இதுல இறங்கிட்டே; படமில்லையா?'ன்னு கேட்காதீங்க? சினிமான்னா தியேட்டர்ல போய்ப் பார்க்கணும். விளம்பரம்னா யாரும் கேட்காம எல்லார் வீட்டுக்குள்ளேயும் தினமும் நுழையலாம். சினிமாவை விட இதுல அதிகமா பப்ளிசிட்டி வேற கிடைக்கும், எல்லாம் ஆசைதான். நான் விளம்பர படத்துல நடிக்கறதுக்கு முழு முதற் காரணம் நித்யஶ்ரீயின் பாடலும், அங்க நிற்கறாங்க பாருங்க, அவங்களும் தான்" என்று மரத்தினடியில் டிஸ்கஷனிலிருந்த இருவரைக் கை காண்பித்தார். ஓடிப் போய் பார்த்தால், அட, 'ஜேடி-ஜெர்ரி'. 'விசில்' பட இயக்குனர்கள்.

"ஜெயச்சந்திரன் ஸ்டோர்ஸ்'காக ரொம்ப புதுசா யோசிச்சு விளம்பரம் பண்ணியிருக்கோம். 'சதா'ட்ட ஒரு ஹோம்லியான லுக் இருக்கு. அது

• ஜெர்ரி - ஜேடி



• சதா

பதினாறு

நம்ம மக்கள்ட்ட நல்லா ரீச் ஆகும்னு ட்ரை பண்ணினோம். இந்த விளம்பரத்துக்காக நித்யஸ்ரீ பாடிய பாட்டைக் கேட்டதுமே ஓ.கே. சொல்லிட்டாங்க சதா. விளம்பரம் பார்த்துட்டு நீங்களும் சொல்லுங்க" என்ற வர்களின் காட்டில் இப்போது விளம்பர மழை!

சென்னை சில்க்ஸ்காக இவர்கள் எடுத்த 'ஆடியிலே அதிர்ஷ்ட காத்து' நல்ல ரீச் ஆக, அதிக நிறுவனங் கள் இவர்களை மொய்க்கிற தாம்!

"சினிமாவை விட ரொம்ப அதி கமா மூளையைக் கசக்க வேண்டிய விஷயம் விளம்பரம். பதினாறு செகண்ட்ல ஒரு கதை சொல்லணும். அது ஒரு சவால் தான். அந்தக் கதை மக்களுக்குப் பிடிச்ச மாதிரி இருக்கணும்... ஒரு நிறுவனத்தி லிருந்து விளம்பரம் பண்ணணும்னு வர்ற வங்க, தெளிவாச் சொல்ல மாட்டாங்க.

# தொழிக் கதை!

அவங்க மனசுல என்ன இருக்குன்னு நமக் குப் புரியறதுக்குள்ள ஒரு வழியாயிரு வோம்.

"நல்ல மாடல்கள். வித்தியாசமான சிந்தனை இருந்தா நிச்சயம் விளம் பரங்கள் மக்களைச் சென்ற டையுங்கறது எங்க நம்பிக்கை. 'ஆடியில அதிர்ஷ்டக் காத்து'



• ஆடியிலே...



• சென்னை சில்க்ஸ் விளம்பரத்தில்....

தியேட்டர்ல போடறப்போ ஒன்ஸ்மோர் கேட்கறாங் கன்னு கேள் விப் பட்டோம்.



ஒரு விளம்பரத் துக்கு இதைவிட வேறென்ன வெற்றி வேணும்?..." என்கிறார்கள் ஜேடி யும் ஜெர்ரியும்.

— மிஸ்டர் லீ

# 'கல்கி'யிலும் என்றால் என்ன?

● டி.எஸ்.டி. ராயன்,
மயிலாடுதுறை.

? பிரபல தேசிய வார இதழில் 'பாய்ஸ்' படம் பற்றி காரமாக ஞாநி விமர்சனம் செய்திருப்பதுடன் ஷங்கரும் சுஜாதாவும் பகிரங்கமாக மன்னிப்புக் கோர வேண்டும் என்று கருத்துத் தெரிவித்திருப்பது குறித்து...?

! 'அப்படிப் பார்க்கப் போனால், இந்தியப் பெண்கள் 'அந்த' விஷயத்தில் எப்படி என்று மெகா விரச சர்வே செய்த 'இந்தியா டுடே'தான் முதல் மன்னிப்புக் கோர வேண்டும்.

● பி. ஜெயப்பிரகாஷ்,
சர்க்கார்பதி.

? வாஜ்பாய் மந்திரிசபை மாற்றம் - ஜெயலலிதா மந்திரிசபை மாற்றம் - என்ன வித்தியாசம் ஸார்...?

! முன்னது 'தடு'மாற்றம். பின்னது 'ஏ' மாற்றம்! நிற்க, மந்திரிகள் ஏன் போகிறார்கள் ஏன் திரும்பவும் பதவி ஏற்கிறார்கள் என்பதற்குக் காரணம் அறியும் உரிமை மக்களுக்கு உண்டு. அந்த உரிமையை மதிக்கும் பிரதமர், முதல்வர்கள் தான் இன்று இல்லை.

● எஸ். சுவாமிநாதன்,
மன்னார்குடி.

? ஓர் ஆசிரியரிடம் மட்டும் ஏன் இத்தனை எதிர்பார்ப்புகள்? அவர் மட்டும் மனிதரில்லையா? அவர் செய்யும் தொழிலும் மற்ற தொழில்களைப் போலத் தானே...?

! மற்ற தொழில்களில், செய்யும் தொழிலே தெய்வம் என்றால், ஆசிரியர் தொழிலில் செய்யும் தொழிலும் தெய்வம், தொழிலாளியும் தெய்வம் - குரு சாக்ஷாத் பரப்பிரும்மா; எழுத்தறிவித்தவன் இறைவன் ஆவான்!

● ரஞ்சனிப்பரியன், ஈரோடு - 10.

? வீடுகளில் இனி சந்தன மரம் வளர்க்க தமிழக அரசு அனுமதி வழங்கியுள்ளதே?

! காதைக் கொடுங்க... ஒரு ரகசியம்! இந்த யோசனையைச் சொன்னதே வால்டர் தேவாரம் தானாம்! வீடுகளில் சந்தன மரம் வளர்த்தால் அதை வெட்ட வீரப்பன் ஊருக்குள் வருவானில்லையா? அப்போ 'கபால்'னு ஒரே அமுக்கா... ஹி-ஹி!



* ஏமாற்றம்



* அலுவலக ஆசை!

● துரை முருகன்,
திருப்பாச்சேத்தி.

? மனதை எப்போதும் சந்தோஷமாக வைத்துக் கொள்ள எதைப் பின்பற்றலாம்...?

! எதையும் பின் 'பற்றாமல்' தள்ளியே இருந்துவிட்டால் போதுமே!

● அழகன், மதுரை - 8.

? புதிய தலைமைச் செயலகம் அண்ணா பல்கலைக் கழக வளாகத்தில் அமைவது எங்களுக்குப் பெருமை என்று துணை வேந்தர் பாலகுருசாமி கூறியுள்ளாரே...?

! 17.9.05 ஹிந்து நாளிதழில் ஐந்தாம் பக்கத்தில் இடம் பெற்றுள்ள 'Whose Secretariat is it Anyway?' என்ற கட்டுரையை பாலகுருசாமிக்குச் சிபாரிசு செய்கிறோம். துணை வேந்தர் போன்ற பொறுப்பான பதவிகளில் மேலிட ஆணையை மீற முடியாமலிருக்கலாம்; அதற்காக அடிமைகளாக இருக்க வேண்டியதுமில்லை.

● ஒய்.எஸ். ப்ரீதா, சென்னை - 12.

? 'அடக்க ஒடுக்கம்' என்பதில் அடக்கம் சரி... அதென்ன சார் ஒடுக்கம்?

! அடக்கம் - மனம் சார்ந்த எளிமை. ஒடுக்கம் - உடல் சார்ந்த ஆடம்பரமின்மை.

● எம். சிவகுருநாதன், தஞ்சை.

? சமூகத்தை எல்லோரும்தான் போட்டோ எடுத்தார்கள்; ஆனால் செல்வி ஜெயலலிதா மட்டுமே சமூகத்தை 'எக்ஸ்ரே' எடுத்தவர் என்று காளிமுத்து பேசியிருப்பது பற்றி...?

! எக்ஸ்ரே எடுத்துவிட்டுப் போகட்டும். அதன்பிறகு நடக்கும் சிகிச்சை முறை, அவர் எக்ஸ்ரேயைச் சரியாகப் பார்த்துப் புரிந்து

கொண்டிருக்கிறாரா என்று சந்தேகத்தை எழுப்புகிறதே?

● பி.எஸ். ஈஸ்வரன், திருநெல்வேலி.

? கல்கியிஸம் என்றால் என்ன...?

! கௌரவமாகப் பத்திரிகை நடத்துவது. அரசியல், சமுதாயக் கருத்துகளை தேச நலன் கருதி ஆணித்தரமாகச் சொல்வது. நடுநிலை காப்பதால் அனைத்து தரப்பினரின் அதிருப்தியையும் சம்பாதித்துக் கொள்வது!

● ராதா ராமஸ்வாமி, திருநெல்வேலி - 11 ✱

? இன்றைய உலகில் உடனடி விமோசனம் யாருக்குத் தேவை...?

! பள்ளிக் குழந்தைகளுக்குத்தான்... புத்தகச் சுமையிலிருந்து மட்டுமல்ல, அபாயகரமாக வேன் ஓட்டும் ஆட்கொல்லி ஸ்கூல் வேன் ஓட்டுனர்களிடமிருந்தும் விமோசனம் தேவை. சென்னையில் அண்ணனை வழியனுப்ப வந்த தம்பிப் பாப்பாவை ஒரு வேன் கொன்றுவிட்டதே!

● இ.யுவராணி, குடியாத்தம். ❒

? ஈ.வி.கே.எஸ். இளங்கோவன் மீதான அவதூறு வழக்கை அரசு வாபஸ் பெற வேண்டும் என்று ஹைகோர்ட் நீதிபதி கருத்து தெரிவித்துள்ளது பற்றி...?

! அவ்வாறு வாபஸ் பெறப்பட வேண்டிய அவதூறு வழக்குகள் ஏராளமாக உள்ளன. ஒன்றை வாபஸ் பெற்றால் மற்றவற்றுக்கும் அதே கதியாகிவிடுமோ என்ற அச்சம், நீதிபதியின் கருத்தை ஏற்பதற்குத் தடையாக நிற்கலாம்.

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

? எந்தத் தீய சக்தியாலும் என்னை எதுவும் செய்துவிட முடியாது என்கிறாரே ஜெயலலிதா...?

! மக்கள் சக்தி என்பது தீயசக்தி அல்ல!

● கு. கணேசன், மறைமலை நகர்.

? 'இலாகா ஏதும் ஒதுக்கப்படாததால் கவலைப்படவில்லை; ஒட்டு மொத்த இந்தியாவே எனது அலுவலகம்தான்' என்ற மமதா பானர்ஜியின் பெருமிதம் குறித்து...?

! இது மமதாவின் மமதை அல்ல; சமாளிப்பு!

● கே. என். பாலகிருஷ்ணன், சென்னை - 91.

? பத்திரிகை சுதந்திரத்தைக் காக்க சட்டத் திருத்தம் தேவை என 'ஹிந்து' ராம் கூறியுள்ளாரே...?

! பத்திரிகைகள் மீது போடப்படும் அவதூறு வழக்குகள் கிரிமினல் சட்டத்தின் கீழ் அமைகின்றன. அவை சிவில் சட்டத்தின் கீழ் மாற்றியமைக்கப்பட வேண்டும் எனச் சுட்டிக் காட்டி கோரிக்கை விடுத்திருக்கிறார். மிக நியாயமான கோரிக்கை. குறிப்பாக, அரசு சார்பில் வழக்குத் தொடர வாய்ப்புத் தரும் சட்டங்கள் இன்னும் உன்னிப்பாகக் கவனித்துத் திருத்தப்படுதல் நலம்.

● லெநா. சிவகுமார், சென்னை - 33.

? சமீபத்தில் பிரதமர் சென்னை வந்தபோது ஜெ. ஊட்டியில் இருந்தது சரியாகப் படுகிறதா...?

! அரசியல் ரீதியாகவும் தனிப்பட்ட முறையிலும் பண்பாடற்ற செயல்தான். பிரதமர், கட்சி, அரசியலெல்லாம் கடந்த மரியாதைக்குரியவர்.



✱ வாபஸ் சிந்தனை!



✱ தடுமாற்றம்!



✱ நியாயமான யோசனை!

❒ ரூ.100 பரிசு பெறுபவர்
இ. யுவராணி
அக்ரஹாரம் (அஞ்சல்)
குடியாத்தம் 632602

✱ ரூ.50 பரிசு பெறுபவர்:
ராதா ராமஸ்வாமி,
43. எல்.ஐ.ஸி காலனி, மகாராஜா நகர்,
திருநெல்வேலி - 11

# 25 தொலைக்காட்சித் தொடர்

# ஜீவநதி



காட்சி : 64

**மாலை / மொட்டை மாடி. வெளிச்சமும் பிறகு சற்றே இருளும் பரவும் காலம். பாத்திரங்கள்: கீதா, கண்ணன், அம்மா. பிரம்பு நாற்காலியில் கீதா அமர்ந்திருக்கிறாள். கட்டைச் சுவரில் சாய்ந்து கொண்டு கண்ணன்.**

**கீதா:** உங்க ஊர் ஜனங்களுக்கெல்லாம், நாளைக் காலையிலே தலை வெடிச்சுடும்பா.

**கண்ணன்:** ஏன்?

**கீதா:** நான் உனக்கு யார், என்ன உறவுன்னு அவங்களுக்குத் தெளிவாகலை. ஒரு வயசுப் பையன், வயசுப் பொண்ணோட, சொந்த ஊருக்கு, அதுவும் அம்மா வீட்டுக்கு வர்றான்னா, எதுவும் இல்லாமே இருக்குமாங்கிற புழு மண்டையைக் குடையுது. அனேகமாக, நான் ஓடியாந்திட்டேன். அல்லது நீ என்னை இழுத்துக்கிட்டு வந்துட்டேன்னுதான் நினைச்சிருப்பாங்க.

**கண்ணன்:** ரயிலேறி, பஸ் ஏறித்தான் வந்தோம்னு சொன்னா போச்சு.

**கீதா:** என் கேள்வி வேறே. அப்படி நினைக்கிறதுக்கான சூழல், காரணம் என்ன, என்கிறது தான்.

**கண்ணன்:** காலம், நகராமே, நம் ஜனங்க சிந்தனையில கெட்டியா இருக்கு. ஒரு இருநூறு முந்நூறு வருஷத்துக்கு முந்தியெல்லாம், ஒரு பெண்ணுக்கு, அவ குடும்பத்தாரைத் தவிர, பேசிப் பழகற வாய்ப்புக் கிடைச்ச ஆண்மகன், ஒண்ணு காதலனா இருப்பான், அல்லது புருஷனா இருப்பான். வயசுக்கு வரும் முன்பாவே கல்யாணம் ஆயிடும். அந்த இறந்த காலமே இன்னும் நம்ம ஜனங்ககிட்ட இருக்கு. கிராமத்துல மட்டும் இல்லை. நகரத்துல இது அதிகமாகவே இருக்கு. அன்னைக்கு, ரயில், பஸ் இல்லை. வசதியான ராஜாக்கள், குதிரைமேல, பட்டாக்கத்தியோட வந்து பெண்ணைத் தூக்கிக்கிட்டு போவான். இல்லாதவன், கையைப் பிடிச்சு இழுத்துக்கிட்டு ஓடுவான்... எங்கிட்டயே, ஒருத்தன் கேட்டான். என் சினேகிதன், பள்ளிக்கூட நண்பன், 'என்னடா, அம்மா ஒப்புத்துக்கிட்டாங்களா'ன்னு. என் அத்தைக்கு, நீ என்ன சாதிங்கறதுதான் ஒரே கவலை.

**கீதா:** நீ என்ன சொன்னே? (அம்மா, தட்டில் முறுக்கு, சீடை, எள்ளடை, காபி சகிதம் படியேறி வருகிறாள்.)

**கண்ணன்:** விவகாரம் இல்லாத சினேகிதம்னு சொன்னேன். அவன் கிட்ட, அத்தைக்கு, தெரியாதுன்னு சொன்னேன். சாதிக்கும், சினேகத்துக்கும் சம்பந்தம் இல்லேன்னு சொன்னேன்.

**கீதா:** வாலாம்பா கேட்டாளாடா?

**கண்ணன்:** ஆமாம்மா. பொண்ணு என்ன சாதின்னாங்க. அது பொண்ணு இல்லை, கீதான்னேன்.

**அம்மா:** நல்லா சொன்னே.

**கண்ணன்:** இதெல்லாம், க்யூரியாசிடி... தெரிந்து கொள்ளணும்கிற ஆவல்லே கேட்கிறதுதான். இந்த மாதிரி உறவு புதுசு, இல்லையா?

**அம்மா:** என்னடா புதுசு? எங்க காலத்துல இல்லையா? எங்களுக்கெல்லாம், முறை மாமன், அத்தான்மாரைப் பார்த்தாதான் வெட்கம் வந்துடும். ஏதோ, அவன்ல ஒருத்தன்தான் நமக்கு மாப்பிள்ளையா வரப் போறான்னு. வெட்கம் கூட, ஏழெட்டு வயசுலயே வந்துடும். ஒன்பது பத்து வயசுக்கெல்லாம் தாவணி கட்டாயம். பதினாறு ஆனா, புடைவை. கோயில் குளம்

**பிரபஞ்சன்**

தான் எங்களுக்கு அவுட்டிங். நான் பேசின முதல் அந்நிய ஆம்பிளையே இவன் அப்பா தாம்மா... பயம்னா... பயம், அப்படி ஒரு பயம், அவர்கிட்ட...

**கண்ணன்:** இது முதல் பகுதி. ஃப்ளாஷ் - பேக். அடுத்த பகுதி. அப்பா அம்மாகிட்ட பயந்தது. (எல்லோரும் சிரிக்கிறார்கள்.)

**அம்மா:** கணவன் மனைவி, குடும்பம், உறவுன்னு வாழ்க்கை கெட்டிப் பட்ட பிறகு, பயம் என்னத்துக்கு? ஆம்பிளைகள், வெளியே தப்பு பண்ணா, வீட்டுக்குள்ளே பயம் வரும். இவன் அப்பா, தப்பு பண்ணினார். இவனுக்குச்



சின்னம்மாவா, ஒரு அம்மா வாய்ச்சா, அதனால அவர், மனசுக்குள்ள குறுகிட்டார். அந்த அம்மாவுக்குப் பொறந்த பெண்ணுக்குத்தான், இவன், தன் சொத்தையே கொடுத்தான்.

*(கீதா அவனை பெருமை பொங்கப் பார்க்கிறாள்...)*

**கீதா:** இவ்வளவு நல்ல மனுஷனா இருக்கே. எல்லாரையும் புரிஞ்சுக்கிறே, அம்மாவைப் புரிஞ்சுக்க முடியலை, உன்னாலே...

**கண்ணன்:** என்ன சொல்றே, கீதா?

**கீதா:** பின்ன என்ன கண்ணன்? உன் கல்யாணத்தைப் பத்தி அவங்களுக்குக் கவலை இருக்காதா? ஏதாவது பதிலைச் சொல்லு. என்ன முடிவில் இருக்கேன்னு அவங்களுக்குத் தெரிய வேண்டாமா? எல்லாத்துக்கும் மேல, அவங்க இப்போ தனி. அப்பா இல்லை. இந்தச் சூழ்நிலையில, அவங்களுக்கு மனசளவில, ஒரு மாறுதல் வேணாமா?

**கண்ணன்:** (யோசித்தபடி இருக்கிறான். பிறகு... அம்மாவைப் பார்த்து...)

அன்மையில, உனக்கு மார்வலி வந்திருக்குமே. அப்போ, பிள்ளைக்குக் கல்யாணம் பண்ணிப் பார்க்காமே போய்ச் சேர்ந்திடுவேனோன்னு பிரலாபிச்சிருப்பியே.

**கீதா:** கண்ணன். பி சீரியஸ். ஜோக் வேணாம்.

**கண்ணன்:** ஓ.கே.ஓ.கே. நான் சீரியஸாவே பேசறேன். எனக்குக் கல்யாணத்தில் நாட்டமோ, ஆர்வமோ இல்லையே. அம்மா இஷ்டத்துக்குக் கல்யாணம் பண்ணிக்க முடியுமா? அம்மா இஷ்டத்துக்கு முடி வெட்டிக்கலாம், சட்டை போட்டுக்கலாம், சிகரெட்டைக் குறைச்சுக்கலாம், சிக்கனமா வாழலாம்... கல்யாணம்? அது இன்னொரு உயிரோட, மனசோட சம்பந்தப்பட்டது இல்லையா? ஒரு வேளை, அந்தப் பெண், என் துணையை, நான் சந்திக்கவே இல்லைங்கிறது காரணமா

இருக்கலாம். சந்திக்கணும். கல்யாணமே பண்ணிக்கப் போறதில்லைன்னு எனக் கொன்றும் விரதம் இல்லை. அது இப்ப வேணாம். அதுக்கான காலம் வரட்டும்னுதான் சொல்றேன்.

**அம்மா:** நீ என்னம்மா சொல்றே, கீதா?

**கீதா:** அவர் சொல்றது சரின்னுதான் எனக்குத் தோணுதும்மா. வலுக்கட்டாயம் பண்ணி ஒருத்தருக்குக் கல்யாணம் பண்ணி வைக்கிறது சரின்னு படலை. கண்ணன் மேல, உங்களுக்கு நம்பிக்கை இருக்கில்லையா?

**அம்மா:** என்ன கேள்வி இது கீதா. நம்பிக்கை இல்லாமலா? என் பிள்ளை தப்பே பண்ண மாட்டான்.

**கீதா:** இந்த நம்பிக்கைதாம்மா முக்கியம். எங்க அப்பா, என் கல்யாணத்தைப் பேசறப்போ, நானும் இப்போ கல்யாணம் வேண்டாம்னேன். கண்ணனை நீ விரும்பறியா? விரும்பறதா இருந்தா, எனக்கு ஆட்சேபணை இல்லை. நான் பெரியவங்களோட பேசறேன் னாங்க. இல்லப்பா. கண்ணனோட இருக் கறப்போ, எனக்கு வேறு மாதிரியான சிந்தனை வரலே. ஒரு நண்பராத்தான் அவரை என்னால பார்க்க முடியுது. நான் கல்யாணம் பண்ணிக்கப் போறது இவர் இல்லை. என் கணவர்கிட்ட, கண்ணன்கிட்ட இருக்கிற நல்ல குணங்கள்லே, நல்ல அம்சங்கள்லே பாதி இருந்தாக் கூட, அவர் உத்தமமான மனுஷரா இருப்பார்ன்னு சொல்லிட்டுக் கேட்டேன். என் மேல உனக்கு நம்பிக்கை இருக்காப்பான்னு. இல்லாமயா? என் பொண்ணைப் பத்தி நானே தப்பா நினைச்சா, நான் என்ன தகப்பன்? உன்னால தப்பா நினைக்கவும் முடியாது, நடக்கவும் முடி யாதுன்னு சொன்னாங்க.

*(ஒரு அழுத்தமான மௌனம் கவ்வுகிறது. இலேசாக இருட்டிக் கொண்டு வருகிறது. வானத்தில் நிலவு தோன்றுகிறது. அவர்கள் காபி குடித்து, அவ்வப்போது கொறித்து முடிக் கிறார்கள்.)*

**அம்மா:** உத்தமமான அப்பா. உத்தமமான பொண்ணு.

**கீதா:** ஏன். உத்தமமான பையன்னு சொல்லலைம்மா? *(சிரிப்புடன்)*

**அம்மா:** உத்தமமான பையன்தான். என் மனக் கலக்கம் தீர்ந்து போச்சும்மா. இனிமே, ஏன் கல்யாணம் பண்ணிக்கலைன்னு அரிக்க மாட்டேன். காலம் கனியும் போது தானா நடக் கட்டும்.

**கீதா:** கரெக்ட். அத்தைப் பொண்ணு இருந்தாக்ககூட, அவங்க பக்கமா பிரச்னை வரும். அதுவும் இல்லை.

**அம்மா:** மறந்துட்டனே. கசிலா விஷயமா போனீங்களே, என்ன ஆச்சு?

**கண்ணன்:** ஏஜென்சி தரதாச் சொல்லிட் டாங்க. அட்வான்ஸ் அதிகமா எதிர்பார்த் தாங்க. நான் பொறுப்பேத்துக்கிட்டேன். அதனால குறைச்சுக்கிட்டாங்க.

**அம்மா:** பணம் தேவையாடா? என்கிட்ட கொஞ்சம் இருக்கு.

**கீதா:** கொஞ்சம் இருக்கிறவங்கதான் கொடுக்கிறாங்க. அதிகம் இருக்கிறவங்க, பெட்டியில வச்சுப் பூட்டறாங்க.

*(காட்சி மாற்றம். அவர்கள் பஸ்ஸில் திரும்புகிறார்கள். ஓர் இருக்கையில் அருகருகே அவர்கள் அமர்ந்திருக்கிறார்கள்.)*

**கீதா:** ரொம்ப இனிமையான பயணம்.

**கண்ணன்:** எனக்கும்தான் கீதா. அம்மா, இனி கல்யாணம் பத்திப் பேச மாட்டாங்க.

> "என்னய்யா மீட்டிங்குக்கு கூட்டத்தையே காணோம்."
>
> "நேத்து நைட்டு எதிர்க்கட்சிக்காரங்க நம்ம பேரைப் போட்டு நிதி தருவீர் நீதி பெறுவீர்னு அடிச்சு ஒட்டிட்டாங்க தலைவா..."
>
> — எஸ். ஆர். ஸ்வாமி

கவலை இல்லாமே, வீட்டுக்கு வரலாம்.

**கீதா:** உன்னை ஒண்ணு கேட்கணும்.

**கண்ணன்:** கேளேன்.

**கீதா:** நீ சந்தோஷமா இருக்கியா? வேலை இல்லேன்னு சொன்னே. கிடைச்சிருச்சு. அப்புறமும், ஏதோ, எப்போதும் 'நெர்வசா', உனக்குள்ள நீயே சண்டை போட்டுக்கிட்டு இருக்கியே, அது என்னத்துக்கு? உனக்கு என்ன தான் பிரச்னை? *(அவன் கையை லேசாகப் பற்றுகிறாள். அது அவள் அன்பை வெளிப் படுத்துகிறது.)*

**கண்ணன்:** உனக்குச் சொல்லாமே, வேறு யார்கிட்ட சொல்லப்போறேன். உனக்கு மட்டும் தெரிஞ்சாப் போதும். எனக்கு, என் தகுதிக் கேத்த வேலையை நான் செய்யலையோன்னு ஒரு நினைப்பு. வேறு ஏதோ செய்ய வேண்டியவன், இதுல மாட்டிக்கிட்டேன்னு அடிக்கடி ஒரு நினைப்பு வரும். சோர்வாயிடும். சரி, வேறு எதுதான் என் கனவு? வேறு என்ன தான் நான் செய்ய வேண்டியது? அந்தச் செய்ய வேண்டியதுக்குத் தகுதியா நான் என்னை அமைச்சுக்கிட்டேனா? என் தோளுக்கு அந்தப் பலம் இருக்கா? நான் பொதுமக்கள் தொடர்பு

படிச்சேன். ஃபோட்டோ கிராபியும் படிச்சேன்.

**கீதா:** சினிமா ஆசை இருக்கா?

**கண்ணன்:** இல்லை. தனியா, சின்னப் படம், குறும்படம் இது மாதிரி ஏதேனும் பண்ணனும்.

**கீதா:** இதுக்கு முன்னால முயற்சி பண்ணி இருக்கியா?

**கண்ணன்:** என் பக்கத்து கூத்து _ ஓசகவதம் எடுத்தேன். எனக்குத் திருப்தியாதான் வந்துச்சு. ஆனா - ஒரு டீ.வி.காரன் அதை நல்லா இல்லைன்னு ஒதுக்கிட்டான். எனக்கு - என்ன சொல்றது - தோல்வி மனப்பான்மை - அப்புறம் அந்தப் பக்கமே போகலை.

**கீதா:** இத்தனைக் காலம் எனக்கே சொல்லலையே. இப்பத்தான் தெரியுது, நீ ஒரு முட்டாள்னு.



**கண்ணன்:** என்ன கீதா?

**கீதா:** பின்னே என்ன? எவனோ ஒரு டீ.வி. காரன், உனக்குச் சங்கப் பலகையா? அவன் ஒதுக்கிட்டா, நீ உன் தொழிலை விட்டுடணுமா? என்ன முட்டாள்தனம்? பைத்தியக்காரத்தனம்? அதே டீ.வி. காரன் உன்னை வந்து வேண்டிக்கிற மாதிரி, உன்னை மதிக்கிற மாதிரி, இன்னும் வேகமா, இன்னும் சிறப்பா, நீ இயங்கி இருக்க வேண்டாமா?

**கண்ணன்:** வீட்டை நம்பி இருக்கக் கூடாது. ஏதாவது வேலைக்குப் போகணும்னு நினைச்சேன். வேலை கிடைச்சது. அதுலயே உக்காந்துட்டேன்.

**கீதா:** இப்ப நீ செய்யற வேலை, உனக்கு சந்தோஷமா இருக்கா?

**கண்ணன்:** இல்லை.

**கீதா:** வேற வேலை, நீ விரும்பற வேலை கிடைச்சா, அதுலே சாதனை செய்யலாம்ங்கிற நம்பிக்கை இருக்கா?

**கண்ணன்:** இருக்கு. நிச்சயமா, நான் சிறப்பா வருவேன்கிற நம்பிக்கை இருக்கு.

**கீதா:** ஏன், இது பற்றி என்கிட்ட பேசலை?

**கண்ணன்:** நான் சோம்பேறி, வேலை செய்யப் பிடிக்காதவன், மற்றவரைச் சுரண்டி சாப்பிடறவன்னு நீ நினைப்பியோன்னு சொல்லலை.

**கீதா:** என் நல்ல அபிப்பிராயம் உனக்கு என்னத்துக்கு? மற்றவங்க அபிப்பிராயத்தை எந்த அறிவாளியும் எந்தக் காலத்திலேயும் மதிக்கலை, தெரியுமா? மத்தவங்களுக்காகவா நாம் வாழறோம்? எதுக்கு அப்படி வாழணும். ஒண்ணு செய்,

**கண்ணன்:** என்ன?

**கீதா:** வேலையை விடு.

**கண்ணன்:** விட்றதா? நீ வாங்கித் தந்த வேலை.

**கீதா:** நானே சொல்றேன், வேலையை விடு.

**கண்ணன்:** சாப்பாட்டுக்கு அம்மாவைக் கேட்கணும், கீதா.

**கீதா:** சாப்பாடுதான் உன் பிரச்னைன்னா, நான் சோறு போடறேன்.

**கண்ணன்:**.........

*(மௌனம். வெளியே பார்த்துக் கொண்டிருக்கிறான்)*

**கீதா:** மெய்தான். எல்லாவற்றையும் யோசிச்சே சொல்றேன். என் சம்பாத்தியத்தில் பாதி எனக்குப் போதும். பாதி உனக்கும் போதும். மேலும் தேவைன்னா, சுசிலாக்கா கிட்ட உனக்கு உதவி கிடைக்கும். அந்த ஏஜென்சிக்கு உழை. அதுக்குச் சம்பளம் எடுத்துக்கோ. எது உனக்கு லட்சியமோ, அதைச் செய். எதை முன்னிட்டும், மனசுல இருக்கிற நெருப்பை அணைய விட்டுடாதே. அந்த நெருப்புதான் நமக்கு உயிர். அதுக்காகத்தான் இந்த வாழ்க்கை.

**கண்ணன்:** ரொம்பத் தெம்பா இருக்கு, கீதா. இப்படி இதுவரையும் எனக்கு யாரும் சொல்லலை.

**கீதா:** சொல்லணும்னு எதிர்பார்க்காதே. எதுக்கு எல்லாரும் அவங்கவங்களும் வேலை வெட்டியை விட்டுட்டு, உன்கிட்ட வந்து, உனக்குப் பிடிச்சதைப் பேசணும். தனித்தே இரு! நீயேதான், உனக்கான இருப்பைத் தேடிக்கணும்.

**கண்ணன்:** புரியது, கீதா. *(அவன் முகத்தில், அவன் முகத்தில் மகிழ்ச்சி)*

(அடுத்த இதழில் நிறையும்)

'சண்டியர்' மாதிரியான பிரச்னை ஹாலிவுட்டிலும் கதிகலக்கிக் கொண்டிருக் கிறது. மெல் கிப்ஸனின் 'தி பேஷன்' (The Passion) தான் பிரச்னைக்குள்ளாகியிருக்கிற படம்.

ஏசுநாதரின் கடைசிப் பன்னிரண்டு மணி நேரங்களை விளக்கும் திரைப்படம் இது. படத்தின் தயாரிப்பாளரும் கிப்ஸன்தான்.

ஏசுநாதருக்கு சிலுவை தண்டனையை அளித்ததும், அவரை சிலுவையில் ஆணியடித்துக் கொன்றதும் ரோமானியர்கள்தான். என்றாலும், யூதர்கள்தான் இந்தச் சதிக்குப் பொறுப்பேற்க வேண்டும் எனும் எண்ணம் கத்தோலிக்க கிறிஸ்தவர்களிடையே பரவலாக உண்டு. இதன் எதி



# ஹாலிவுட்டிலும் 'சண்டியர்?'

ரொலி பலமுறை வன்முறையில் முடியவே, 1965ல் 'ஏசுநாதர் இறப்பதற்கு யூதர்களின் கூட்டுச் சதிதான் காரணம் என்பதை எமது அமைப்பு நிராகரிக்கிறது' என்றே கத்தோலிக்க தலைமைப் பீடமான வாடிகனிலிருந்து அறிக்கை வெளியிடப்பட்டது.

மெல்கிப்ஸனும் ஒரு கத்தோலிக்கர்தான். ஆனால் 'அல்ட்ரா கன்ஸர்வேடிவ்' என்ற பிரிவைச் சேர்ந்தவர். வாடிகனை தலைமைப் பீடமாக ஏற்காத பிரிவு இது.

'தி பாஷன்' தொடர்பான பிரச்னை முற்றிப் போகவே, தாம் இது வரை எடுத்திருக்கும் படத்திலிருந்து சில பகுதிகளைக் குறிப்பிட்ட சிலருக்குத் திரையிட்டுக் காட்டியிருக்கிறார் மெல் கிப்ஸன். அப்படி அழைக்கப்பட்டவர்களிடம் முதலில் ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்து வாங்கப்பட்டது. அதாவது, தாங்கள் பார்க்க விருக்கும் படத்தின் பகுதிகள் குறித்து ஒட்டு மொத்தமான கருத்தை அவர்கள் வெளியிடலாமே தவிர, காட்சிகளை விளக்கக்கூடாது என்பதுதான் அந்த ஒப்பந்தம். பார்த்தவர்கள் அனைவருமே 'ஆஹா, ஓஹோ' என்று கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள்.

மெல் கிப்ஸன் ஒரு தீவிர கிறிஸ்தவர் என்பதில் இருவேறு கருத்துக்கள் இல்லை. சொல்லப் போனால், கலிஃபோர்னியாவில் இவரே ஒரு மாதா கோவிலை எழுப்பிக் கொண்டிருக்கிறார்.

எந்த ஒரு கலைஞருக்கும் படைப்பு சுதந்திரம் இருக்கிறது. மறுக்க முடியாது. ஆனால், முன்னோர்கள் செய்த தவறுக்காக இன்றைய தலைமுறையைக் குற்றம் சாட்டுவது நியாயமாகுமா? ஹிட்லர் ஆட்சி புரிந்த கொடுமைக்காக இன்றைய ஜெர்மானிய இளைஞனைப் பொறுப்பேற்கச் சொல்வது முட்டாள்தனம் இல்லையா? அதே போல் முன்னொரு காலத்தில் (இருபது நூற்றாண்டுகளுக்கு முன்!) யூதர்கள் ஏசுநாதரின் முடிவுக்குச் சதி செய்தார்கள் என்றே இருந்தாலும், இப்போது அதை விரிவாகப் படமெடுத்து வன்முறைக்கு வித்திடலாமா? அதுவும் யூதர்களின் நாடாகிய இஸ்ரேல், பல பெரும் சிக்கல்களைச் சந்தித்து கொண்டிருக்கும் இன்றைய காலகட்டத்தில் இப்படி ஒரு படம் எதற்கு...? என கேள்விகள் எழுகின்றன.



• மெல் கிப்ஸன்

இந்தப் படத்தில் லத்தீன் மொழி வசனங்கள் மட்டுமே என்பதும், ஆங்கில சப்டைட்டில் போடும் எண்ணம் தமக்கு இல்லை என்று மெல்கிப்ஸன் கூறியிருப்பதும், சஸ்பென்ஸை அதிகரித்திருக்கிறது!

- ஜி.எஸ்.எஸ்



# திருடா திருடி

அப்பாவின் அத்தனை வசவுகளையும் மொத்தமாய் டேப் ரிக்கார்டரில் பதிவு செய்து வைத்துக் கொள்கிறார் தனுஷ். ''உன்னைத் திட்டித் திட்டியே எனக்கு இரத்தக் கொதிப்பு ஏறிப் போச்சு'' என்று அவர் கொதிக்கும்போது, 'அதுக்கொரு ஏற்பாடு பண்ணியிருக்கிறேன்பா' என்று டேப் ரிக்கார்டரைப் போட்டு விடுகிறார். தியேட்டரே கொல்லென்று சிரிக்கிறது. கையில் ஏகப்பட்ட அரியர்ஸ் தேர்வுகளோடு, வீட்டுக்கு அடங்காத விடலைப் பையனாக வெளுத்து வாங்குகிறார் தனுஷ்.

பொறுப்பான அண்ணன் லாக்-அப்பில் இருந்துவிட்டு வர தானே காரணமாகி விட்டதை நினைத்து, அவர் முன்னால் சாரி சொல்லி, டயலாக் பேசிக் கொண்டிருக்காமல், மௌனமான அழுகையிலேயே தனது பாசத்தின் அளவுகோலைக் காட்டும்போது, 'நல்லா நடிக்கிறான்ப்பா' என்று தியேட்டரில் கமெண்ட்.

புரூஸ்லி பாணியில் சண்டையிடும்போது, ''குச்சி உடம்பை வெச்சுகிட்டு பிச்சி உதர்றான்ய்யா'' என்று பாராட்டுகிறார்கள்.

படுமட்டமான நடன அசைவுகள் கொண்ட 'மன்மத ராசா' பாடல் வரும்போது, தியேட்டரில் பாதிப்பேர் வெறி கொண்டு ஆடுகிறார்கள். கடவுளே, தமிழ் ரசனை எதை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது என நாம் பொங்க வேண்டியிருக்கிறது! மலேசியா வாசுதேவன், எஸ்.பி.பாலசுப்பிரமணியத்திற்குப் பிறகு, பின்னணிப்பாடகர் மாணிக்க விநாயகம் நல்ல நடிகராக வருவார் என்று சொல்லும்படி, மிடில் கிளாஸ் அப்பா கேரக்டரில் அற்புதமாய்ப் பொருந்தி இருக்கிறார்.

அறிமுகக் கதாநாயகி சாயாசிங்கிற்கு நடிக்கவும், நடனமாடவும் தெரிந்திருப்பதால், படம் முடியும்போது இளம் ரசிகர்களின் இதயங்களைத் திருடி விடுகிறார்.

அப்புறம் படத்துல யாரு புதுமுகம்? ஆங், தஞ்சாவூரிலிருந்து வந்திருக்கும் அறிமுக இயக்குநர் சுப்ரமண்யம் சிவா. பொறுப்பற்ற நடுத்தரக் குடும்பத்துப் பையன். சென்னைக்கு ஓடி வந்து, பொறுப்பாக வேலை தேடிக் கொண்டு, தன்னிடம் பேசாத அப்பாவிடம் நல்ல பெயர் வாங்கும் கதை. காதலை மசாலா மாதிரி வைத்துக் கொண்டு துள்ளலான திரைக்கதை அமைத்திருக்கும் இயக்குநருக்கு, துடிப்பாக வசனமும் எழுதத் தெரிந்திருக்கிறது. ஆனால் பாவம், தயாரிப்பாளரின் வற்புறுத்தலா, இல்லை தனது கிரியேட்டிவிட்டி மீது சந்தேகமா தெரியவில்லை. இடையிடையே வக்கிரம் துருத்திக் கொண்டு தெரியும் காட்சிகள், பாடல்கள். இது போதாதென்று ''கசி'' என்ற பாத்திரத்தைத் தேவையில்லாமல் காத்து வாங்கவிட்டு, நல்ல படைப்பில் நஞ்சைக் கலந்திருக்கிறார்.

— விஷுவல்தாசன்

- ஆவரெஜ்

மருத்துவப் பரிசோதனையின்போது, எல்லாம் ஓ.கே. கண்ணைப் பரிசோதித்தபோது, "கண்ணாடி போட வேண்டும் போல இருக்கு. கண் டாக்டரிடம் காட்டி சர்டிபிகேட்டுடன் வர வேண்டும். அப்போதுதான் வேலைக்குச் சேர முடியும்" என்று சொல்லி விட்டார்கள்.

கண் டாக்டரைப் பார்த்தேன். அவர் கொடுத்த சர்டிபிகேட்டுடன் போய், ரயில்வேயில் வேலைக்குச் சேர்ந்தேன்.

ரயில்வேயின் கமர்ஷியல் ஆபீசில் சரக்குப் போக்குவரத்துப் பிரிவில் என்னை நியமித்தார்கள். மத்திய சர்க்கார் வேலையில் சேர்ந்தது எனக்குச் சந்தோஷத்தையும், நிம்மதியையும் கொடுத்தது. இனிமேல் சாப்பாட்டுக்குக் கஷ்டம் இருக்காது என்று நினைத்தபோதே என் வயிறு நிறைந்தது போல ஓர் உணர்வு.

இன்னொரு விஷயம் என்னவென்றால், ஆபீசில் வேலை செய்ய வேண்டிய கட்டாயமான சூழ்நிலை ஏதும் கிடையாது. சும்மாவாவது ஆபீசுக்குப் போய் உட்கார்ந்திருக்க வேண்டியதுதான். நாமாக நினைத்துக் கொண்டு ஏதாவது வேலை செய்தால்தான் உண்டு. இல்லையென்றால், ஏன் வேலை செய்யவில்லை என்று யாரும் கேட்க மாட்டார்கள். அவ்வளவு ஏன்? உன் சீட்டில் நீ இருக்கிறாயா? இல்லை வெளியில் போயிருக்கிறாயா? என்று பார்க்கக்கூட ஆளில்லை. (இன்றைக்கு ரயில்வேயில் அதேமாதிரி இருக்கிறதா இல்லை மாறி விட்டதா என்று எனக்குத் தெரியவில்லை.) "இத்தனை நாள் பட்ட கஷ்டங்களைப் பார்த்து, மனசு இரங்கி, ஆண்டவனாகப் பார்த்து நமக்கு இந்த வேலையைக் கொடுத்திருக்கிறான்" என்று ஆண்டவனுக்கு நான் நன்றி சொன்னேன்.

**"என் டீ காலைசக் ஆகிடா!"**

நான் வேலைக்குச் சேர்ந்த புதுசில், தி. நகரில் தீனதயாளு தெருவில் ஒரு வீட்டில்தான் தங்கியிருந்தேன். அங்கிருந்து மாம்பலம் ஸ்டேஷனுக்கு வந்து, ரயில் பிடித்து தினமும் ஆபீசுக்குப் போவேன். மாம்பலத்தில் ரயில் ஏறினால், சென்ட்ரல் ஸ்டேஷனை அடுத்த ரயில்வே ஆபீசுக்கு, பார்க் ஸ்டேஷனில் இறங்கி, நடந்து போகலாம். ஆனால் நான் அப்படிச் செய்யமாட்டேன். அதற்கு அடுத்த 'கோட்டை' ஸ்டேஷனில் இறங்கி, ரயில்வே ஆபீசுக்கு நடந்து வருவேன்.

பார்க் ஸ்டேஷனில் என்னை இறங்க விடாமல், கோட்டை ஸ்டேஷன் வரை இழுத்தது என்ன தெரியுமா? வெள்ளை உடை தேவதைகள்! அது யார் வெள்ளை உடை தேவதைகள் என்று கேட்கிறீர்களா? நர்ஸ்கள்தான்! கோட்டை ஸ்டேஷனில் இறங்கி, ரயில்வே ஆபீசுக்கு வரும் வழியில்தான் நர்ஸ் ஹாஸ்டல். அங்கே நர்ஸிங் படிக்கும் பல இளம்பெண்களைப் பார்க்கலாம். இத்தனைக்கும் வெறுமனே ஹாஸ்டல் பக்கம் தலையைத் திருப்பி பார்த்தபடி நடப்பேன் அவ்வளவுதான்! ஈவ் டீசிங் போன்ற ஈனமான விஷயங்களில் எல்லாம் ஈடுபடமாட்டேன்! இளம் வயசல்லவா? இது போன்ற விஷயங்களில் ஒரு த்ரில்! தட்ஸ் ஆல்!

ஆபீசில் குறும்புத்தனங்களுக்குக் குறைவிருக்காது. எனக்கு அடுத்த நிலையில் 'சப் ஹெட்' என்ற பதவியில் அதிகாரியாக சீனுவாச ஐயங்கார் என்பவர் இருந்தார். அவர் சாதுவான மனிதர். அதே சமயம் மனுஷர் வெகு சுவாரசியமான கேரக்டர். தம்முடைய மனைவியின் சமையலைப்



* படம்: நன்றி: பிலிம் நியூஸ் ஆனந்தன்

பற்றி தினமும் புகழ்ந்து தள்ளுவார். அத்தனை அற்புதமாகச் சமைப்பார் என்றால், நாமும் ஒருநாள் சாப்பிட்டுப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் எனக்கு ஏற்படும்.

ஒருநாள் வழக்கம் போல மனைவியின் சமையலைப் புகழ்ந்து பேசினார்.

"இன்றைக்கு என்ன சாப்பாடு?" என்று அவரிடம் கேட்டேன்.

"ஃபர்ஸ்ட் கிளாஸ் மோர்க்குழம்பு."

"டேஸ்ட்டுக்காவது, எனக்குக் கொஞ்சம் கொடுங்களேன்! என் நாக்கு ரொம்ப காய்ந்து போயிருக்கிறது; வாய்க்கு ருசியாய்ச் சாப்பிட ஏங்குகிறது!" என்று கொஞ்சம் மிகைப்படுத்திச் சொன்னேன்.

"ஸாரி! இன்றைக்கு எனக்கு மட்டும்தான் கொண்டு வந்திருக்கேன். இதிலே கொஞ்சம் மிச்சம் வைத்து, சாப்பாடு கொண்டு வரும் கூடைக் காரிக்கு வேறு கொடுக்க வேண்டும். (இல்லையெனில் கடும் விமர்சனத்தைச் சந்திக்க வேண்டி யிருக்கும்.) இன்னொரு நாள் இரண்டு பேருக்குப் போதுமான அளவு கொண்டு வருகிறேன்."

அவருடன் பேசிக் கொண்டே இருந்த நான், சிறிது நேரத்தில் வெளியே நழுவினேன். பத்துப் பதினைந்து நிமிடங்கள் கழித்துத் திரும்பி வந்து, நான் பாட்டுக்கு சீரியஸாக ஒரு ஃபைலைப் புரட்ட ஆரம்பித்தேன். லஞ்ச் டைம் வந்ததும், சீனுவாச ஐயங்கார், "என்ன! சாப்பிடப் போகலையா?" என்று கேட்டபோது, "பசி இல்லை. கொஞ்ச நேரம் கழித்துப் போய் ஒரு வாழைப்பழம் சாப்பிட்டால் போச்சு!" என்றேன்.

குனிந்து தன் சாப்பாட்டுக் கேரியரை எடுத்தவருக்கு ஏதோ சந்தேகம். அவசரம் அவசரமாய் கேரியரைத் திறந்து பார்த்தால், உள்ளே ஒன்றுமே இல்லை! சுத்தமாகக் கழுவி வைக்கப்பட்டிருந்த காலி டிபன் கேரியரைப் பார்த்தவுடன் அவருக்கு ஷாக்!

"எந்த திருட்டுப் பய என் சாப்பாட்டைச் சாப்பிட்டான்?" என்று சத்தம் போட்டார்.

"யாருக்காவது பசிச்சிருக்கும்! சாப்பிட்டிருப்பாங்க! விடுங்க! வாங்க நாம ரெண்டு பேரும் போய் வாழைப்பழம் சாப்பிடலாம்" என்று அழைத்தேன்.

அவர் ரொம்ப பெருமையாய்ச் சொன்ன மோர்க் குழம்பு, என் வயிற்றில் ஜீரணமாகிக் கொண்டு இருந்தது. அவருக்கு எப்படித் தெரியும்?

ரயில்வே ஆபீசில் வேலை பார்க்கிறவர் அவர் பியூனாக இருந்தாலும் சரி, அதிகாரியாக இருந்தாலும் சரி, சம்பளம் வாங்கியவுடன் சந்தோஷமாக, சௌகரியமாக இருக்கும். பதினைந்து தேதியாகிவிட்டால் சம்பளம் காலியாகி, அடுத்து எப்போ முதல் தேதி வரும் என்று காத்துக் கொண்டிருக்க வேண்டியதுதான். சீனுவாச ஐயங்கார் மட்டும் இதற்கு விதிவிலக்காக இருக்க முடியுமா என்ன?

ஒருநாள் லஞ்ச் நேரத்தின்போது நானும் அவரும் டீ வாங்கிச் சாப்பிட்டோம். நான் என் பாக்கெட்டில் கைவிட்டேன். கொஞ்சம் சில்லறை தட்டுப்பட்டது. அதை எடுத்து, இரண்டு பேருக்கான டீக்காசை நானே கொடுத்து விட்டேன்.

ஒரு மணி நேரம் ஆகியிருக்கும். அப்போது, எங்களுக்குள் ஏற்பட்ட ஏதோ ஒரு சிறு பிரச்னை, வாக்கு வாதமாகி, ஒரு கட்டத்தில் நான் ஆபீஸ் என்பதையும் மறந்து, ஐயங்காரை நோக்கிக் கத்தினேன்: "என் டீக்காசை குடுடா!" அதிர்ந்து போனார் ஐயங்கார்.

அப்புறம்? அடுத்த வாரம் சொல்கிறேன்.

(சிரிப்பு தொடரும்)



**நாகேஷ்**

• படம்: யோகா

**அமரர் கல்கி நினைவு இளமைச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகதை**

# பூர்வீக வீடு

**வி.ஜி.செல்வகுமார்**

**ந**ம்பிக்கையும், எதிர்பார்ப்பும்தானே வாழ்க்கையின் பலம். ஆசைகளின் தீவிரம் எதிர்பார்ப்பு, எதிர்பார்ப்பின் சுயமுகம் நம்பிக்கை. எதிர்பார்ப்புகள் பொய்த்துப் போகலாம்; நம்பிக்கை?...

"நான் பொறந்து, தவழ்ந்த வீடு" என்று பூர்வீக வீட்டைப் பற்றி அம்மா ஆதங்கத் தோடு சொன்னது.

'நான் வலது காலெடுத்து வெச்சு, விளக் கேத்தின வீடு, புகைக்கு நடுவுல நாக்குக்கு ருசியா சமைச்சிப் போட்ட கூடம், புள் ளைக விழுந்து, தவழ்ந்த பூமி' என்று பாகம் பிரிக்கப்பட்ட போது, விலை பேசிக் கொண்டு இருந்த சமயம், அம்மாவின் அம்மா (அம்மாச்சி) சொன்னது.

தங்களின் இள வயது நினைவுகளையும், நிகழ்காலத்தின் ஆசைகள் புதைந்து போன தையும் என்னிடம் சொல்லி, எனக்குள் உறவுகளின் பந்தம், பாசம் பற்றிய கனவு களையும், நிகழ்வுகளையும் விதையாக ஊன்றினர்.

விடுப்பு முடிந்து வேலைக்குச் செல்ல நான் கோயமுத்தூருக்குப் புறப்பட்ட போது கடைசியாக பஸ் புறப்படும் முன் அம்மா சொன்னவை இவை:

"காயத்ரிக்கு நல்ல இடத்துல கல்யாணம் முடியட்டும், அடுத்து என்னைப் பத்தி யோசிக்கலாம்னு சொன்னே... அவ தான் இப்ப சந்தோஷமா புருஷனோட இருக் குறாளே... அடுத்து உனக்கு ஏற்பாடு பண்ணலாமாப்பா... தரகர்கிட்ட வேணும்னா சொல்லி வைக்கவா?" என்றாள் அம்மா.

"யோசிச்சு ஃபோன் பண்றேன்" என்று சொன்னதும் பஸ் பயணமானது. நான் சொன்ன பதிலால் அம்மாவின் முகம் வாடிப் போனது.

**நா**ன் கோவையில் ஒரு பெரிய நிறு வனத்தில் இஞ்சினீயர் பதவியிலிருக் கிறேன். என்னுடைய சம்பளம், படிப்பு, என் சுய குறிப்புகளுடன் நாளேடுகளில் மணமாலை பகுதிக்கு விளம்பரம் கொடுத் தேன். நிறைய புகைப்படங்கள் ஜாதகங் களுடன் வந்து குவிந்து விட்டன. நண்பன் பெண்களின் புகைப்படங்களைப் பார்த்து செலக்ட் செய்து கொண்டிருந்தான். அப் போதுதான் ஊரிலிருந்து ஃபோன் வந்தி ருப்பதாக பக்கத்து அறை நண்பன் சொன் னான். தொலைபேசியில் அம்மா அழைத் தாள்.

"அம்மா, என்னம்மா? நல்லாயிருக்கி யாம்மா...!"

"நான் நல்லாயிருக்கேம்ப்பா...!"

"அய்யா ஊருலேர்ந்து உன் அம்மாச்சி வந்திருக்காங்க பொறப்புட்டு வர்றியாப்பா, பாக்கணும்னு சொல்றாங்கப்பா... அப்புறம் ஒரு முக்கியமான விஷயம். நீ வா, நான் சொல்றேன். ஞாயிறு லீவுதானே. சனிக் கிழமை ஒரு பொழுது லீவு எடுத்துக்கிட்டு வா. ரெண்டு நான்ல போயிடலாம். இது ஃபோன்ல பேசற விஷயமில்லை. நேர்ல பேசலாம், நீ வாப்பா...."

"சரிம்மா."

ஃபோனை வைத்து விட்டு யோச னையாய் வந்தேன்.

அறையில் கட்டிலின் விரிப்பில் புகைப் படங்கள் பரப்பியிருந்த இடத்தில் பயணப் படுவதற்குத் தயாராக பேக் இருந்தது.

"டேய்... சிவா.. யார் வேலைடா இது?"

"நான்தான், சுகுமார்."

"எதுக்கு இப்ப...."

"ஊர்ல இருந்து ஃபோன் வந்ததுமே எனக்குத் தெரியும். அம்மா ஊருக்கு வரச் சொல்லியிருப்பாங்கன்னு."

"இல்லடா."

"நீ எதுவும் பேசாதே... உனக்காக படிப்பு, வசதி, அந்தஸ்து, குடும்பம் இதை வெச்சி நாலு ஃபோட்டோ செலக்ட் பண்ணி வெச்சிருக் கேன். ஊர்ல அம்மாகிட்ட காட்டு. முடிவு பண்ணுங்க. எடுக் கற முடிவு நல்லதா இருக்கணும். திரும் பறப்போ நல்ல முடிவோட வரணும்."




**பே**ருந்துக்கு முன் பதிவு செய்து கொள்ளவில்லை. ஆனாலும் சீட் கிடைத்தது. இரவு நேரப் பயணம். ஜன்னல் அருகே ஓரத்து இருக்கை. குளிர்ந்த காற்று முகத்தில் அப்பிக் கொள்ள எனக்குள் சிலிர்த்தது. போதாததற்குப் பழைய இனிமையான பாடல் வேறு ஒலித்துக் கொண்டிருந்தது.

மீண்டும் கட்டிலின் மேல் பரப்பி வைக்கப்பட்டிருந்த புகைப்படங்களின் ஞாபகம் கண்முன் நிழலாடிச் சென்றது. சந்தோஷத்திலும், துக்கத்திலும் உறவுகள் கை கொடுக்கும் என்பார்கள். எனக்கு அப்படி யாரும் எந்த ஒரு உதவியும் செய்ததில்லை.

"தாயைப் போல பிள்ளை, நூலைப் போல சேலை. அப்பன் புத்தி தானே இருக்கும்" என்று மாமா என்னைத் திட்டியது, நினைவில் வர, எனக்குள் தீ வெகுவாகப் பற்றி எரிந்தது.

"உனக்கு முன்னால வாழ்ந்து காட்டறேன்ய்யா... இப்பிடி ஒரு பிள்ளையான்னு மெச்ச வைக்கிறேன். வக்கிரமா பேசின வாயாலேயே வாழ்த்த வைக்கிறேன் பாருய்யா!" என்கிற வைராக்கியம். 'நீயே என்னைக் கொண்டாடணும். உன் தவறை நீ உணரணும்' என்கிற உத்வேக வெறி எனக்குள் படர்ந்து பரவியது.

'அது முடிவுக்கு வரும் நாள் வெகு தூரத்தில் இல்லை. என் வார்த்தையின் வடிவிலேயே உள்ளது. இப்படி மலரும் நினைவுகளில் மூழ்கிக் கிடந்து உறங்கிப் போய், விடிந்து, இறங்க வேண்டிய பேருந்து நிலையம் வந்ததும் பேக்குடன் இறங்கி, தண்ணீர் பாட்டிலில் முகம் கழுவி, டீ குடித்து, வீட்டை நோக்கி நடந்தேன்.

இப்போது வீட்டில் இன்னொரு டீ. அம்மாச்சியின் அன்பான விசாரிப்பு.

"என்னப்பா ஃபோட்டோ ஜாதகமெல்லாம் வந்துச்சாம். எங்கே கொண்டா" என்றாள் அம்மா முகம் பூக்க.

"உங்களுக்கு..."

"ராத்திரி ஃபோன் பண்ணி லீவு கிடைச்சதா, இல்ல நானே வரவான்னு கேட்கலாம்கறப்போ... சிவா சொன்னான்" என்றாள் அம்மா.

'அவனை ஊருக்குப் போய் கவனித்துக் கொள்கிறேன்' என்று எனக்குள் கறுவிக் கொண்டேன்.

"என்ன விஷயம்மா?"

"அத்தை வந்தாப்பா!" என்றாள் அம்மா!

நான் பார்க்கக் கொடுத்த புகைப்படங்களை அலட்சியமாகக் கீழே வைத்து விட்டு,

"விசாரிச்சா...பேப்பர்ல நீ குடுத்த விளம்பரத்தைப் பத்தி மாமா சொன்னதாகச் சொல்லிட்டு, நம்ம வீட்ல ஒரு பொண்ணு இருக்குற போது ஏன் நேரத்தையும், நாளையும் செலவு பண்ணிட்டு அலையணும்னு கேட்டா."

"அப்போ எங்க வீட்ல பொண்ணு இருக்கே, வந்து கேக்க வேண்டியதுதானே... நாங்க என்ன தரமாட்டோம்னு சொன்னோமா அப்பிடீன்றாங்களாம்மா?"

"ஆமாம்ப்பா... எனக்குச் சந்தோஷம், புள்ளை வரட்டும், பொறப்பட்டு வர்றோம்னு சொல்லியனுப்புனேன். என்னப்பா சொல்றே?"

"என்ன பேசறீங்க, அவங்க முன்ன பேசினது, நடந்து கிட்டதை மறந்துட்டீங்களா?" என்றேன்.

"போனதை விட்டுடுப்பா... எப்பவோ விவரங்கெட்டத்தனமா நடந்துகிட்டது. பேசினதை பெரிசா எடுத்துக்கலாமா?



சொந்த பந்தத்துக்குள்ள அதெல்லாம் பார்க்கக் கூடாதுப்பா! அப்ப அவங்க தான் அப்படி நடந்துகிட்டாங்க. இப்ப அவங்களே தேடி வர்றாங்க." அம்மா பார்வையில் கெஞ்சல் இருந்தது.

"என்னம்மா நீ, பரமேஸ்வரியை அத்தை பொண்ணுங்கிற உரிமையில கையத் தொட்டு பேசினதுக்கு எத்தனை அசிங்கமா பேசினாரு? அப்பாவுக்குக் குடிப்பழக்கம் இருக்குங்கறதை வெச்சி என்னை எவ்வளவு கேவலமாப் பேசினாரு. எல்லாம் அவர் கிட்ட காசு நிறைய இருக்குங்கிற திமிர் தானே!"

"அது சரிப்பா!"

"எது சரி? அம்மா... அன்னைக்கு நான் படிச்சிக்கிட்டு இருந்தேன். வசதி இல்லை. நம்மகிட்ட இல்லைங்கறதுக்காக பசிக்கு ஒரு வேளை சாப்பாட்டுக்குத்தான் ஒதுங்கி இருப்போமா?"

"என்னப்பா பண்றது?"

"இன்னைக்கு கோயம்புத்தூர்ல பெரிய கம்பெனில வேலை. நல்ல சம்பளம் னவுடனே வளைச்சுப் போடணும்னு ஆசை."

"அப்படி சொல்லாதேப்பா வயசில பெரியவரு..."

"வயசில பெரியவரு சரி, அவரை விட வயசில மூத்தவரு, உங்க அண்ணன் பூர்வீக சொத்துல பாகத் தகராறுல, அடிக்கப் போற அளவுக்கு பிரச்னை பண்ணி, சொத்தை பிரிச்சிக்கிட்டாரு... அப்ப அவருக்குச் சொந்தம், பந்தம், ஒட்டு உறவு கண்ணுக்குத் தெரியலை, மத்தவங்களை மதிக்கத் தெரியாதவங்க வீட்டு வாசலை நான் எதுக்கு மிதிக்கணும்?"

"டேய்... போனது போகட்டுண்டா... இனி நடக்க வேண்டியதை பாப்போம்ப்பா... எல்லாருக்கும் ஒரு சந்தர்ப்பம் வரும்."

**நா**ன்கரை வருடங்களுக்கு முன்பு புது வீட்டின் கிரஹப்பிரவேசத்திற்கு ஒரு நாள் விடுப்பில் வந்து சென்றது. அதன் பிறகு இன்றுதான் மாமா வீட்டு வாசலை மிதிக்கிறேன். அம்மா, நான், அம்மாச்சி, சித்தி சகிதமாக. பரமேஸ்வரியை எனக்குப் பெண் கேட்பதற்கு இப்போது அவர்கள் வீட்டு வாசலை மிதித்திருந்தோம்.

அத்தை, மாமா அழைத்த விதம் அவர்களிடையேயான மாற்றத்தையும், பண்பாட்

டையும், திருந்தி விட்டார்கள் என்பதையும் காட்டியது. வழக்கமான டீ, காபி, சிற்றுண்டி பரிமாறலுக்குப் பிறகு, பரமேஸ்வரி உள்ளே தனது அறையில் ஒளிந்து நின்று என்னை ரசித்தாள்.

"சொந்தத்துக்குள்ள முறைப்பையன், பொண்ணா இருந்தா ஜாதகம் பாக்க வேண்டியதில்லைம்பாங்க! அதனால சம்பிரதாய முறைப்படி நிச்சயம் பண்ணிக்கலாம்... நல்ல நேரம்... ஜோஸியரைப் பார்த்துடலாம். சரிக்கா... பையனுக்கு எத்தனை பவுனு எதிர்பார்க்கறீங்க."

"சொந்தத்துக்குள்ளேயே சீர் செனத்தி எதிர்பார்க்க முடியுமா? அதனால உன் பொண்ணுக்கு நீ என்ன பண்ணுவியோ, அதை மட்டும் செய்ப்பா போதும்" என்று அம்மா சொல்லிவிட்டு, என்னை ஒரு பார்வை பார்த்தாள்.

"நான் பேசுகிறேன்" என்றேன். மாமாவும் அத்தையும் அம்மாட்சியும் என்னையே பார்த்தார்கள்.

"ம்... என்னோட சம்பளம் பன்னிரண்டாயிரத்திச் சொச்சம். அது இருக்கட்டும். உங்க பொண்ணுக்கு இருபத்தஞ்சு சவரன் நகை பண்ணிப் போட்டுடுங்க. ரொக்கமா ஒரு லட்சம் பணம் குடுத்துடுங்க. பைக் ஒண்ணு வாங்கிக் குடுத்துடுங்க. இத்தனையும் சும்மா விளையாட்டுக்குச் சொல்லலை..." என்றதும்,

அனைவரது முகமும் அதிர்ச்சியில் உறைந்து போயின.

"ஆனா, அத்தனையும் வாங்கிட்டு தான் நான் தாலிகட்டுவேன்னு சொன்னா, அது எனக்குப் பெருமை இல்லை. பெருமையான விஷயமும் இல்லை. அந்த அளவுக்கு மனசாட்சி இல்லாத கேவலமானவனும் இல்லை."

இப்போது அனைவரது முகத்திலும் குழப்ப ரேகை.

"இப்ப ஒண்ணே ஒண்ணு கேட்கிறேன் அதை மட்டும் குடுங்க போதும். ஒவ்வொருத்தரும் நல்லவங்கதான். நல்ல மனசு உள்ளவங்கதான். அதனால... மாமா, நீங்க பெரிய மாமா கூட சண்டை போட்டுக்கிட்டு பாகம் பிரிச்சதில, பூர்வீக வீட்டையும் பிரிச்சி எழுதி வித்திட்டீங்க. உங்க கூடப் பொறந்த அக்கா, தங்கச்சிகளுக்கு எதுவும் செய்யலை. அது எனக்குத் தேவையும் இல்லை. அதை யாரும் எதிர்பார்க்கலை. ஆனா, உங்க ஈகோவை விட்டுக்குடுத்து,




"என்னய்யா இது... ஸ்டேஷன் சுவர்ல கூட்டல் கழித்தல் கணக்கு எழுதி வைச்சிருக்கு...?"

"மாமூல் குடுக்க வந்த கபாலி கணக்குப் போட்டுப் பார்த்தான்!"

— அம்பை தேவா

வீம்பை விட்டுக்குடுத்து, பெரிய மாமா கூட மறுபடி சேரணும். சொந்தங்கள் பிரியக் கூடாது. உறவு அறுந்திடக் கூடாது. மறுபடி பூர்வீக வீட்டை வாங்கணும். எல்லோருமா அதுல கூடணும், எனக்கும், பரமேஸ்வரிக்கும் அங்க பெரிய மாமா தலைமையில கல்யாணம் நடக்கணும்.

"நான் சின்ன வயசில பார்த்த மாதிரி திருவிழா, விசேஷம்னா அந்த வீட்ல அத்தனை சொந்தமும் கூடணும். அந்த நேரம் ஒவ்வொருத்தர் மனசிலயும் கொஞ்ச நேரம் சந்தோஷம் நிக்கும். அதுதான் எனக்குத் தட்சிணை, காசோ, பணமோ, நகையோ இல்லை" என்றேன்.

அனைவரது முகத்திலும் மகிழ்ச்சி அலை. மாமாவுக்குள் சிறியதொரு தயக்கம்.

"ராசா.... என் தங்கமே, உன்னை என்னென்னமோ நினைச்சேண்டா, நீ ஆயுசுக்கும் நல்லா இருப்பேடா" என்றாள் அம்மாச்சி.

'மாமாவின் பதில் என்னவாக இருக்கும்?'

இப்போது 'நா' தழுதழுக்க... குரலை டைக்க என்னை அணைத்துக் கொண்டு 'சரி' என்றார் மாமா. பின்னால் அறையில் நின்று பரமேஸ்வரி புன்னகைத்து வெட்கப்பட்டாள். ○

---







# சிவகாமியின் சபதம்

இருபத்து ஒன்பதாம் அத்தியாயம்

## தேசத் துரோகி

நதிக்கரைப் பாறையில் புலிகேசிக்கும் புத்த பிக்ஷுவுக்கும் நடந்த சம்பாஷணை மேலும் மேலும் குரோதம் நிறைந்ததாகிக் கொண்டு வந்தது.

சிவகாமியின் விஷயத்தில் நாகநந்திக்கு ஏற்பட்டிருந்த மதிமயக்கத்தைப் போக்கப் புலிகேசிச் சக்கரவர்த்தி முயன்றார். ஆனால் இது சம்பந்தமாகச் சக்கரவர்த்தி சொன்னதெல்லாம் நாகநந்தியின் குரோதத்தை இன்னும் அதிகமாக்கி வந்தது.

சிவகாமியைப் பற்றிப் புலிகேசி குறைவுபடுத்திப் பேசப் பேசப் புத்தபிக்ஷு ஆவேசத்துடன் அவளை உயர்த்திப் பேசலானார்.

சகோதரர்களுக்கிடையில் மேற்படி விவாதம் ரொம்பவும் காரமடைந்து அவர்கள் ஒருவரையொருவர் தாக்கிக் கொள்ளுவதற்கும் ஆயத்தமாகி விட்ட சமயத்தில், அவர்கள் உட்கார்ந்திருந்த இடத்துக்குச் சிறிது தூரத்தில் நடந்த ஒரு கோரமான சம்பவம் அவர்களுடைய கவனத்தைக் கவர்ந்தது.

கேட்பவர்களின் இருதயம் நின்று போகும்படியான பயங்கரக் குரலில் "ஐயோ! ஐயோ!" என்று அலறிக் கொண்டு ஒரு மனிதன் ஓடி வந்து வாதோரா நதியின் செங்குத்தான கரையின் மீது ஒரு கண நேரம் நின்றான். மறுபடியும் "ஐயோ!" என்று அலறி விட்டு விரைந்தோடிய நதிப் பிரவாகத்தில் குதித்தான். குதித்தவுடனே தண்ணீரில் மூழ்கினான். சில வினாடி

அமரர் கல்கி

நேரத்துக்கெல்லாம் அவன் குதித்த இடத்துக்குச் சற்றுத் தூரம் கிழக்கே அவனுடைய தலை மட்டும் மேலே எழுந்தது. பாறையே பிளந்து போகும்படியான ஒரு பயங்கரக் கூச்சல் கேட்டது. மறுபடியும் தண்ணீரில் முழுகியவன் அடியோடு முழுகியவன்தான். அவன் முழுகியதற்கு அடையாளம்கூட அங்கே காணப்படவில்லை.

மலை வீழ் நதியான வாதோரா சலசல சப்தத்துடன் விரைந்து பாய்ந்து கொண்டிருந்தது.

சில வினாடி நேரத்துக்குள் நடந்து முடிந்துவிட்ட மேற்படி சம்பவத்தைப் புலிகேசிச் சக்கரவர்த்தி கண்கொட்டாத பிரமிப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார். நதிப்பிரவாகத்தில் விழுந்த மனிதன் மேலே எழும்பி அலறிவிட்டு மறுபடியும் நீரில் மூழ்கியபோது, புலிகேசியின் இருதயத்தை யாரோ இரும்புக் கிடுக்கியினால் இறுக்கிப் பிடித்தாற்போலிருந்தது.

சற்று நேரம் அந்த மனிதன் முழுகிய இடத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டுப் புலிகேசி திரும்பி நாகநந்தியைப் பார்த்தார். பிக்ஷுவின் முகத்தில் அப்போது தோன்றிய புன்னகை புலிகேசியின் உடம்பைச் சிலிர்க்கச் செய்தது.

“அண்ணா! அந்தச் சைத்திரிகனை நீ என்ன செய்துவிட்டாய்?” என்று புலிகேசி கேட்டதும், புத்த பிக்ஷு ஒரு பேய்ச் சிரிப்புச் சிரித்து விட்டுச் சொன்னார்:

“அவனையா? நானா? வேறொன்றும் செய்யவில்லை! அப்பேர்ப்பட்ட அற்புதமான சித்திரத்தை வரைந்தவனுக்கு ஆசி கூறினேன். என்னுடைய ஆசியைப் பெறுவதற்காக அவன் தலையைக் குனிந்தபோது அவனுடைய பின் கழுத்தில் இந்தச் சுண்டு விரல் நகத்தினால் ஒரு கீறல் கீறினேன். இந்த நகத்திலுள்ள விஷம் அவனுடைய உடம்பின் இரத்தத்தில் கலந்ததும் அவனுக்கு எரிச்சல் எடுத்திருக்கும். சற்று நேரத்துக்கெல்லாம் அவன் உடம்பு முழுவதும் அக்கினியால் தகிக்கப்படுவது போல் இருந்திருக்கும். அவனுடைய மூளையும் கொதிப்பெடுத்திருக்கும். உடம்பையும் மூளையையும் குளிரச் செய்வதற்காகவே அப்படி விரைந்து ஓடி வந்து நதியில் குதித்தான். அவனுடைய உடம்பும் மூளையும் குளிர்ந்ததோடு உயிரும் குளிர்ந்து போய்விட்டது!..”

“ஐயோ! அண்ணா! நீ எப்போது இத்தகைய கொடூர ராட்சஸன் ஆனாய்? கருணையே வடிவமான புத்த பகவானுடைய சங்கத்தில் சேர்ந்து காவி வஸ்திரம் அணிந்து கொண்டு இப்படிப்பட்ட கோர கிருத்தியங்களைச் செய்ய எப்படி உன் மனம் துணிகிறது?'' என்று புலிகேசி கேட்டார்.

நாகநந்தி புலிகேசியை உற்றுநோக்கிச் சீறலுடன் கூறினார்: ''ஓஹோ! நான் கருணையற்ற ராட்சஸன் என்பது இப்போதுதான் தெரிகிறதோ? உனக்காகவும் உன் இராஜ்யத்துக்காகவும் இதைவிட ஆயிரம் மடங்கு கோர கிருத்தியங்களை நான் செய்யவில்லையா? அப்போதெல்லாம் நீ ஏன் எனக்குத் தர்மோபதேசம் செய்ய முன்வரவில்லை? காஞ்சி நகரத்துக் குடிதண்ணீரில் விஷத்தைக் கலந்து அந்நகர மக்களையெல்லாம் கொன்று விடுவதாக நான் சொன்னபோது நீ சந்தோஷத்துடன் சம்மதித்ததை மறந்து விட்டாயா...?”

“ஆம், ஆம்! அதையெல்லாம் நான் மறக்கவில்லை. ஆனால், அது ஒரு காலம்!” என்று கூறிப் புலிகேசிச் சக்கரவர்த்தி பெருமூச்சு விட்டார். சற்று நேரம் நதியின் பிரவாகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு நாகநந்தியின் முகத்தை ஏறிட்டு நோக்கினார்.

''அண்ணா! நீ எனக்குச் செய்த உதவிகளையெல்லாம் நான் மறந்துவிடவில்லை. இந்த உயிர் உன்னுடையது. ராஜ்யம் உன்னுடையது. நீ எனக்குச் செய்திருக்கும் உதவிகளுக்கெல்லாம் இத்தனை காலமும் நான் பிரதியொன்றும் செய்யவில்லை. இப்போது செய்ய உத்தேசித்திருக்கிறேன். வாதாபி சிம்மாசனத்தில் வீற்றிருந்து சாம்ராஜ்யம் ஆளும் சுகத்தை முப்பத்தைந்து வருஷ காலம் நான் அனுபவித்து விட்டேன். எனக்குப் போதும் போதும் என்று ஆகிவிட்டது. சாம்ராஜ்யத்தின் பொறுப்பையும் சிம்மாசனத்தின் சுகத்தையும் இனிமேல் நீ ஏற்றுக் கொள். இத்தனை காலமும் நீ அணிந்திருந்த காவி

வஸ்திரத்தை நான் அணிந்துகொண்டு இந்த அஜந்தா சங்கிராமத்திலேயே மீதியுள்ள என் வாழ்நாளைக் கழித்து விடுகிறேன். பிரகிருதிதேவியும் கலைத் தேவியும் பூரண சௌந்தரியத்துடன் கொலு வீற்றிருக்கும் இந்த அஜந்தா மலையில் நீ உன்னுடைய இளம்பிராயத்தைக் கழித்தாய். நான் என்னுடைய முதுமைப் பிராயத்தை இவ்விடத்தில் கழிக்கிறேன். சாம்ராஜ்ய பாரத்தை, இனிமேல் நீ ஏற்றுக் கொண்டு நடத்து..."



வ்விதம் புலிகேசிச் சக்கரவர்த்தி சொல்லி வந்தபோது, அவருடைய வார்த்தை ஒவ்வொன்றும் உண்மையான உள்ளத்திலிருந்து வருவது என்பதைப் புத்த பிக்ஷு தெரிந்துகொண்டார். இத்தனை நேரமும் குரோதம் கொதித்துக் கொண்டிருந்த அவருடைய முகம் இப்போது மலர்ந்தது. புலிகேசி பேச்சை இடையில் நிறுத்தி மௌனமாயிருந்த சிறிது நேரத்தில் பிக்ஷுவின் உள்ளம் வருங்காலத்தைப் பற்றிய எத்தனையோ இன்பக் கனவுகளைக் கண்டது. அந்தக் கனவுகளின் அறிகுறி ஒருவாறு அவருடைய முகத்திலே காணப்பட்டது.

"அண்ணா! என்ன சொல்லுகிறாய்? உனக்குச் சம்மதந்தானே?" என்று புலிகேசி கேட்டபோது, அவருடைய வார்த்தையில் புத்த பிக்ஷுவுக்குப் பூரண நம்பிக்கை ஏற்பட்டிருந்தபோதிலும் இன்னும் நன்றாக உறுதிப்படுத்திக் கொள்ளும் பொருட்டு, "தம்பி! இப்போது நீ சொன்ன வார்த்தையெல்லாம் உண்மையா? அல்லது காவி வஸ்திரம் தரித்த பிக்ஷுதானே என்று என்னைப் பரிகாசம் செய்கிறாயா?" என்று கேட்டார்.

"அண்ணா! நமது பாட்டனார் சத்யாச்ரயப் புலிகேசியின் திருநாமத்தின் மீது ஆணை வைத்துச் சொல்லுகிறேன். நான் கூறியதெல்லாம் உண்மை. இதோ இந்தக் கணமே அதை மெய்ப்பிக்கச் சித்தமாயிருக்கிறேன். இன்றைக்கே நான் பிக்ஷு விரதம் மேற்கொள்கிறேன். ஆசாரிய பிக்ஷுவினிடம் சொல்லி உனக்கும் விரதத்திலிருந்து விடுதலை வாங்கித் தருகிறேன். ஆனால், இதற்கெல்லாம் ஒரே ஒரு நிபந்தனை மட்டும் இருக்கிறது. அந்தக் காஞ்சி நகரத்து நாட்டியப் பெண்ணை நீ தியாகம் செய்துவிட வேண்டும்!"

பெண் புலியின் மீது வேலை எறிந்து கொன்ற வேடனை ஆண் புலி எப்படிப் பார்க்குமோ, அப்படி நாகநந்தி புலிகேசியைப் பார்த்தார்!

'நடனப் பெண்ணின் சரணாகதி' சித்திரத்தை எழுதிய கலைஞனுக்கு என்ன கதி நேர்ந்ததோ, அதே கதி ஒருவேளை புலிகேசிக்கும் நேர்ந்திருக்கக்கூடும். ஆனால், அச் சமயம் வாதோரா நதியின் மறுகரை வழியாக ஏழெட்டுப் பேர் விரைவாய் வந்து கொண்டிருந்தது தெரிந்தது; அந்த ஏழெட்டுப் பேரும் சாமான்ய மனிதர்கள் அல்ல; மந்திரிகள், தளபதிகள் முதலியோர், ஏதோ முக்கியமான, அவசரமான விஷயத்தைச் சக்கரவர்த்தியிடம் தெரிவிப்பதற்காக அவரைத் தேடி வருவதாகவும் தோன்றியது.

இதைக் கவனித்த பிக்ஷு தம் உள்ளத்தில் பொங்கிவந்த குரோதத்தை ஒருவாறு அடக்கிக் கொண்டு, "ஆ! உன்னுடைய சாம்ராஜ்ய தானத்தில் ஏதோ ஒரு இழிவான சூழ்ச்சி இருக்கிறது என்று சந்தேகித்தேன். அது உண்மையாயிற்று!" என்றார்.

"அண்ணா! நன்றாக யோசித்துச் சொல்லு! சத்யாச்ரயப் புலிகேசி வீற்றிருந்த சளுக்க குலத்துச் சிம்மாசனத்தில் ஒரு சிற்பியின் மகள் ஏறலாமா? அதற்கு ஒரு நாளும் நான் சம்மதிக்க முடியாது. உனக்கும் எனக்கும் மன வேற்றுமை உண்டு பண்ணிய அந்த மோகினிப் பிசாசைத் துரத்திவிட்டு, வாதாபி சிம்மாசனத்தில் ஏறி ஆயுள் உள்ளவரையில் இராஜ்ய பாரத்தை நடத்து!" என்று புலிகேசி உருக்கமான குரலில் கூறினார்.

நாகநந்தியோ பழையபடி நாக ஸர்ப்பத்தைப் போல் சீறிக் கொண்டு, "சண்டாளா! பாதகா! நீ நாசமடைவாய்! உன் தலைநகரம் எரிந்து சாம்பலாகும்! உன் சாம்ராஜ்யம் சின்னா பின்னமாகி, அழியும்! தேவேந்திரனுடைய பதவி கிடைப்பதாயிருந்தாலும் சிவகாமியை என்னால் தியாகம் செய்ய முடியாது. கேவலம் இந்தச் சளுக்க ராஜ்யத்துக்காகவா அவளைத் தியாகம் செய்யச் சொல்கிறாய்? ஒருநாளும் இல்லை! இப்படி நன்றிகெட்ட வஞ்



சகத்துடன் என்னிடம் நடந்து கொண்டதற்குக் கூடிய சீக்கிரம் நீ பலன் அனுபவிக்கப் போகிறாய்! உனக்கும் எனக்கும் இந்த விநாடியோடு எல்லா வித பந்தமும் அற்றுவிட்

டது. இனி உன் முகத்திலேயே நான் விழிப்பதில்லை. இதோ நான் போகிறேன். போய்ச் சிவகாமியையும் அழைத்துக் கொண்டு உன் இராஜ்யத்தை விட்டே போய் விடுகிறேன். அதோ வருகிறார்கள் பார்! அவர்கள் உன்னுடைய விநாசச் செய்தியைக் கொண்டு வருகிறார்கள்!" என்று கூறினார்.


ப்படி நெருப்பைக் கக்கும் வார்த்தைகளை நாகநந்தி கூறிக் கொண்டிருக்கும் போது நதியின் மறு கரையோடு விரைந்து வந்தவர்கள் மேற்கே சற்றுத் தூரத்திலிருந்த மூங்கில் மரப்பாலத்தின் வழியாக நதியைக் கடந்து சக்கரவர்த்தியும் பிக்ஷுவும் இருந்த பாறையை அணுகினார்கள்.

நாகநந்தி தமது சொல்லைக் காரியத்தில் நடத்தி வைக்கும் பொருட்டு இரண்டு அடி எடுத்து வைத்தவர், புனராலோசனை செய்து தமது எண்ணத்தை மாற்றிக் கொண்டவர் போலத் தயங்கி நின்றார். வருகிறவர்கள் என்ன செய்தி கொண்டு வருகிறார்கள் என நிச்சயமாய்த் தெரிந்து கொள்ளும் பொருட்டு அவர் அவ்விதம் நின்றார் போலும்.

வந்தவர்கள் எல்லாருடைய முகத்திலும் கவலையும் பீதியும் குடி கொண்டிருப்பதைப் பார்த்த சக்கரவர்த்தி மிக்க வியப்படைந்து "எல்லோரும் கும்பலாக வந்திருக்கிறீர்களே? என்ன விசேஷம்? ஏதாவது முக்கியமான செய்தி உண்டா?" என்று கேட்டார்.

"ஆம், பிரபு! மிகவும் முக்கியமான செய்திதான். ஆனால் நம்பவே முடியாத செய்தி. சொல்லுவதற்கும் தயக்கமாயிருக்கிறது!" என்று சளுக்க சாம்ராஜ்யத்தின் பிரதம மந்திரி கூறினார்.

"அதென்ன அவ்வளவு முக்கியமான செய்தி? எங்கிருந்து யார் கொண்டு வந்தார்கள்! ஏன் எல்லோரும் இப்படிப் பயந்து சாகிறீர்கள்? யாராவது பகைவர்கள் சளுக்க சாம்ராஜ்யத்தின் மீது படையெடுத்து வருகிறார்களா? சீக்கிரம் சொல்லுங்கள்!"

"மகாப் பிரபு! தாங்களே சொல்லி விட்டீர்கள்!"

"இது என்ன பிதற்றல்? நான் என்ன சொன்னேன்!"

"பகைவர்கள் சளுக்க ராஜ்யத்தின் மீது படையெடுத்து வருவதாகச் சொன்னீர்களே!"

"அதுவா உண்மை?"

"ஆம், சக்கரவர்த்தி!"

"அதிசயமான செய்திதான். யார் அந்தச் சத்துரு? வடக்கே ஹர்ஷராயிருக்க முடியாது; அவரிடமிருந்து சமீபத்திலே சிநேகம் நிறைந்த அழைப்புக் கடிதம் வந்திருக்கிறது. மற்றபடி மேற்கேயும் கிழக்கேயும் சத்துருக்கள் இல்லை. வந்தால் தெற்கேயிருந்துதான் வர வேண்டும். யார், காஞ்சி மாமல்லன் படையெடுத்து வருகிறானா?"

"அப்படித்தான் தகவல், பிரபு!"

"ஒரு நாளும் நான் நம்ப மாட்டேன். அப்படியேயிருந்தாலும் எதற்காக நீங்கள் இப்படிக் கலக்கமடைந்திருக்கிறீர்கள்? என்ன முழுகிப் போய்விட்டது?"

"பெருமானே! நம்முடைய சைனியத்தில் பெரும் பகுதி நர்மதைக் கரையில் இருக்கிறது. இன்னொரு பெரும் பகுதி வேங்கியில் இருக்கிறது..." என்று பிரதம மந்திரி தயக்கத்துடன் கூறினார்.

"அதனால் என்ன? மாமல்லன் காஞ்சியிலிருந்து வருவதற்குள் நம்முடைய சைனியங்களை வாதாபிக்குக் கொண்டு வர முடியாதா?"

"மாமல்லன் காஞ்சியில் இல்லை பிரபு! பல்லவ சைனியம் வடபெண்ணையைக் கடந்து ஒரு வாரம் ஆகிறது. இப்போது துங்கபத்திரையை நெருங்கியிருக்க வேண்டும்!"

"இது என்ன விந்தை? செய்தி யார் கொண்டு வந்தது?"

"இதோ இவர்கள் வாதாபியிலிருந்து கொண்டு வந்திருக்கிறார்கள். இரவு பகல் எங்கும் தங்காமல் விரைந்து வந்திருக்கிறார்கள்!" என்று பிரதம மந்திரி சொல்லி இரு தூதர்களை முன்னால் நிறுத்தினார்.

"உங்களை யார் அனுப்பினார்கள்? ஓலை ஏதாவது கொண்டு வந்திருக்கிறீர்களா?" என்று புலிகேசி திகைப்புடன் கேட்டார்.

"இல்லை, பெருமானே! ஓலை எழுதுவதற்குக்கூட நேரமில்லை. வாதாபிக் கோட்டைத் தலைவர் வாய்மொழியாகச் செய்தி சொல்லி அனுப்பினார். நாங்கள் ஆறு பேர் ஐந்து நாளைக்கு முன்பு கிளம்



பினோம். வழியில் நாலு பேர் விழுந்துவிட்டார்கள். இரண்டு பேர்தான் மிஞ்சி வந்து சேர்ந்தோம்."

"மந்திரி! இவர்கள் பேச்சு உண்மையாயிருக்க முடியுமா? மாமல்லன் இலங்கைப் படையெடுப்புக்காகக் கப்பல்கள் கட்டிக் கொண்டிருப்பதாகவல்லவா

நாம் கேள்விப்பட்டோம்?"

"ஆம், பிரபு! நம்புவதற்குக் கஷ்டமாகத் தான் இருக்கிறது. ஆயினும் இவர்கள் வாதாபிக் கோட்டைத் தலைவரின் இலச் சினையைக் கொண்டு வந்திருக்கிறார்கள். இவர்களுக்குப் பின்னால் விவரமான



ஓலையோடு வேறு தூதர்களும் வருகிறார் களாம். இவர்கள் சொல்லுவது உண்மை யாயிருந்தால், பல்லவ சைனியம் இப் போது துங்கபத்திரையைக் கடந்திருக்க வேண்டும். துங்கபத்திரைக் கரையிலிருந்த சைனியத்தை அந்தப் பிரதேசத்தில்



பஞ்சம் என்று கொஞ்ச நாளைக்கு முன்பு தான் வேங்கிக்கு அனுப்பினோம்.

புலிகேசி சற்று நேரம் ஸ்தம்பித்து நின்றார். சட்டென்று அவர் மனத்தில் ஏதோ ஒரு உண்மை உதயமாகியிருக்க வேண்டும். சற்றுத் தூரத்தில் நின்று மேற்படி சம்பாஷணையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த நாகநந்தியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார்.

மறுபடியும் பிரதம மந்திரியை நோக்கி, "மந்திரி! நமது ஒற்றர் படை என்ன செய்து கொண்டிருந்தது? மாமல்லன் படையெடுப்பைக் குறித்த செய்தி நமக்கு ஏன் முன்னாலேயே வரவில்லை? காஞ்சியிலிருந்து பல்லவ சைனியம் புறப்பட்ட செய்திகூட நமக்கு ஏன் வாதாபியிலிருக்கும்போதே கிடைக்கவில்லை!" என்றார்.

பிரதம மந்திரி வணக்கத்துடன், "பிரபு! ஒரு வருஷத்துக்கு முன்னால் நம் ஒற்றர் படைத் தலைவர் வேலையிலிருந்து நீக்கப்பட்டார். அவர் வகித்த பொறுப்பை, நமது பிக்ஷு ஏற்றுக் கொண்டார். அடிகளைத்தான் கேட்க வேண்டும்!" என்றார்.

சக்கரவர்த்தி உள்பட அங்கிருந்த அனைவருடைய கண்களும் அப்போது பிக்ஷுவை நோக்கின.

புலிகேசி, "அடிகளே! மாமல்லனுடைய படையெடுப்புச் செய்தி தங்களுக்கு முன்னாலே தெரியுமா? வேண்டுமென்றே என்னிடம் சொல்லாமல் மறைத்து வைத்திருந்தீர்களா?" என்று கேட்டார்.

"தம்பி! உன் கேள்விக்கு இவர்கள் எல்லாருடைய முன்னிலையிலும் நான் மறுமொழி சொல்ல வேண்டுமா?" என்றார் பிக்ஷு.

"அடிகளே! சற்று முன்னால் சொன்னதை மறந்து விட்டீர்களா! தங்களுக்கும் எனக்கும் இனி யாதொரு உறவும் இல்லையென்று சொல்லவில்லையா? இப்போது என்னத்திற்காக உறவு கொண்டாட வேண்டும்? உண்மையை உடனே சொல்லுங்கள்!"

"அப்படியானால் சொல்லுகிறேன். மாமல்லன் படையெடுப்புச் செய்தி எனக்கு முன்னமே தெரியும். நன்றியில்லாத பாதகனாகிய உனக்குத் தண்டனை கிடைக்கும் பொருட்டே உன்னிடம் சொல்லவில்லை!" என்று நாகநந்தி கர்ஜித்தார்.

"இந்தத் தேசத் துரோகியைப் பிடித்துக் கட்டுங்கள்" என்று சக்கரவர்த்தி கட்டளையிட்டதும், அங்கு நின்ற எட்டுப் பேரும் பிக்ஷுவைச் சூழ்ந்துகொண்டார்கள்.

பிக்ஷு மடியில் செருகியிருந்த வளைந்த சிறு கத்தியைப் பளிச்சென்று எடுத்துக் கொண்டு, "ஜாக்கிரதை! அருகில் நெருங்கியவன் உடனே யமலோகம் போவான்!" என்றார்.

எட்டுப் பேரும் தம்தம் உடைவாள்களை உறையிலிருந்து விரைவாக எடுத்துக் கொண்டார்கள்.

"அப்படிச் செய்யுங்கள்! சூர சிகாமணிகள் எட்டுப் பேர் சேர்ந்து ஒரு பிக்ஷுவைக் கத்தியால் வெட்டிக் கொல்லுங்கள். புலிகேசிச் சக்கரவர்த்தியின் பெருமை உலகமெல்லாம் பரவும். மாமல்லன்கூடப் பிரமித்துத் திரும்பிப் போய் விடுவான்!" என்று பிக்ஷு பரிகாசக் குரலில் கூறினார்.

அதைக் கேட்ட புலிகேசி, "நில்லுங்கள்! அந்த நீசத் துரோகியைக் கொன்று உங்கள் கத்தியை மாசுபடுத்திக் கொள்ள வேண்டாம். விலகுங்கள்!" என்று கூவினார்.

அவ்விதமே எட்டுப் பேரும் விலகிக் கொண்டார்கள். எனினும் சக்கரவர்த்தியின் பேரில் பிக்ஷு பாய்ந்து விடக்கூடும் என்று எண்ணி ஜாக்கிரதையாகவே நின்றார்கள்.

பிக்ஷுவைப் பார்த்துப் புலிகேசிச் சக்கரவர்த்தி கூறினார்: "அடிகளே! உம்முடைய உயிரை வாங்குவது தவறு. உம்மை நம்பிய சகோதரனுக்கும் உமது நாட்டுக்கும் நீர் செய்த மகா துரோகத்துக்கு அது தக்க தண்டனையாகாது. நீண்ட காலம் நீர் உயிர் வாழ்ந்து உம்முடைய பாவத்துக்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும்; உம்முடைய துரோகத்தை நினைத்து நினைத்துக் கண்ணீர் விட வேண்டும்; மனித உருக் கொண்ட துஷ்டப் பைசாசே! போ! வாதாபிக்குச் சென்று உன்னுடைய மோகினியையும் அழைத்துக் கொண்டு போ! உன் வாக்கை இந்த விஷயத்திலாவது நிறைவேற்று! இனி என் உயிர் உள்ளவரையில் என் முகத்தில் விழிக்க வேண்டாம்! ஒரு

## அருள்வாக்கு

வினோபா 'ச்ரம்தான்' (ச்ரமதானம்) என்று சொல்லி வந்தாரே, இதைத்தான் பூர்த்த தர்மம் என்று நம் சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறது. வாரத்தில் ஒருநாளாவது இந்த சரீர கைங்கர்யத்தை ஸகல ஜனங்களும் பண்ண வேண்டும் என்பது என் ஆசை. யாராயிருந்தாலும் வாரத்துக்கு ஒருநாள் 'ஹாலிடே' இருக்கிறதல்லவா? அன்றைக்கு லோகோபகாரமாக சரீரத்தால் ஒரு பொதுப் பணி செய்ய வேண்டும். மனப் பூர்த்தியுடன், அல்லது மனப் பூர்த்திக்காக, பூர்த்த தர்மம் பண்ண வேண்டும்.

பாதை போடுவது ஒரு தர்மம். வ்ருக்ஷம் வைப்பது இன்னொரு தர்மம். புதிதாக வைப்பதோடு, இருக்கும் வ்ருக்ஷங்களை வெட்டாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். புதிதாக வைக்கிற செடிக்கு தினம் ஜலம் விட்டு, அது விருக்ஷமாக வளரப் பண்ண வேண்டும்.

ஒருத்தன் ஏதோ ஒரு ஒற்றையடிப் பாதையில் உள்ள முள்ளை, கண்ணாடியை அப்புறப்படுத்தி வந்தால், அதுவே மற்றவர்களுக்கு வழியைச் சுத்தி பண்ணுவதோடு இவனுக்கும் சித்த சுத்தியைக் கொடுத்து விடும்.

அவரவருக்கும் எத்தனையோ குடும்பக் காரியங்கள் இருக்கும் என்பது வாஸ்தவம்தான். இந்தக் காரியங்களை லீவு நாளில் பார்த்துக் கொள்ளலாம் என்றுதான் வைத்திருப்பார்கள். ஆனாலும் இதோடு கூட பார்வதீ - பரமேச்வரனின் பெரிய லோக குடும்பத்துக்கும் தன்னாலானதை ஒரு 'ட்யூட்டி' (கடமை) யாகச் செய்யத்தான் வேண்டும். இதற்காக அதையும் விடக் கூடாது. அதற்காக இதையும் விடக் கூடாது. கொஞ்ச நேரமாவது பரோபகாரப் பணி புரிய வேண்டும்.



சரீர கைங்கர்யம் உடம்புக்கே ஒரு நல்ல exercise (அப்யாஸம்) அதோடு பரோபகாரமாகப் பண்ணுகிற போது மனஸுக்கும் அளாதியான உத்ஸாஹம் இருக்கும். முடிவில் சித்த சுத்தியைத் தரும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**

பெண்ணின் மோகத்துக்காக ஒரு ராஜ்யத்தையே விற்கத் துணிந்த நீசனே! போ! நெடுங்காலம் உயிரோடிருந்து உன்னுடைய துரோகத்தை நினைத்து அழுது கொண்டிரு."

ஆத்திரம் ததும்பிய குரலில் விம்மலோடு கலந்து புலிகேசி கூறிய மேற்படி சுடு மொழிகளைக் கேட்டுக் கொண்டு நாகநந்தி கற்சிலையைப் போல் நின்றார். புலிகேசி நிறுத்தியதும் ஒரு வார்த்தையும் மறுமொழி கூறாமல் நதிக்கரையோடு கிழக்கு நோக்கி நடக்கத் தொடங்கினார்.

பிக்ஷு போகும் திசையையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த புலிகேசி, அவர் மறைந்ததும் சட்டென்று திரும்பித் தம் கண்களில் ததும்பிய கண்ணீரைத் துடைத்துக்கொண்டார். பிறகு, அங்கு நின்றவர்களைப் பார்த்து, "மந்திரி! சேனாபதி! இந்தத் தூதர்கள் கொண்டு வந்த செய்தி உண்மையாகத்தான் இருக்க வேண்டும். இதில் சந்தேகம் வேண்டாம். புத்த பிக்ஷுவின் விஷயத்தில் நீங்கள் எல்லோரும் செய்த எச்சரிக்கையை நான் அலட்சியம் செய்துவிட்டேன். அதன் பலனை நானும் நீங்களும் அனுபவிக்கப் போகிறோம். என்றாலும், மோசம் ஒன்றும் போய்விடவில்லை. புலியின் வாய்க்குள்ளே வேண்டுமென்று தலையை விடுவது விளையாட்டான காரியம் அல்ல என்பதை மாமல்லனுக்குக் கற்பிப்போம். துங்கபத்திரையைக் கடந்து வந்த பல்லவ வீரன் ஒருவனாவது திரும்பிப் போகாமல் ஹதாஹதம் செய்வோம். என்னுடைய தென்னாட்டுப் படையெடுப்பு பூரண வெற்றியடையவில்லை என்ற குறை என் மனத்தில் இத்தனை நாளும் இருந்து வந்தது. அந்த மனக்குறை இப்போது தீர்ந்து விடப் போகிறது. பல்லவ நாடு சளுக்க சாம்ராஜ்யத்தோடு சேர்ந்து ஒன்றாகி விடப் போகிறது" என்றார்.

(தொடரும்)



# "ஏலேய் சித்தா..." "என்னலே சக்திவேலு!"

விக்ரமுக்கு 'சாமி' என்றால், சூர்யாவுக்கு 'காக்க... காக்க'. வசூலில் பாக்ஸ் ஆபீஸ் ஹீரோக்கள் ஆகிவிட்ட பிறகு இருவரும் ஒரே படத்தில் இணைந்திருக்கிறார்கள். ஒட்டு மொத்த கோடம்பாக்கமும் விக்கித்துக் கிடக்கிறது. தேனி, பெரியகுளம் பகுதியில் 'பிதாமகன்' படப்பிடிப்பை முழுவதுமாக முடித்துத் திரும்பிய கையோடு, சூட்டோடு சூடாக படத்திற்கு டப்பிங் பேச வந்த சூர்யாவிடம் கிடுக்கிப்பிடி போட்டோம்.

"இரண்டு ஹீரோன்னா இரண்டு பேருக்கும் தனித்தனியா ஃபைட் இருக்கணும். பாட்டு இருக்கணும். உனக்கு ஒரு ஸீன்னா, எனக்கு ஒரு ஸீன் வேணும்னு எதிர்பார்ப்பு இருக்கும். 'பிதாமக'னைப் பொறுத்தவரை துளி ஈகோ கிடையாது. எங்க இரண்டு பேருக்கும் ஹீரோங்கிற நினைப்பே இல்லை. டைரக்டர் என்ன சொல்றாரோ அதைச் செய்யறோம். எங்களுக்கு அவர்தான் எல்லாமே. எங்களை என்னவா காட்டணும்னு அவர் நினைக்கிறாரோ, அதுவா நாங்க பேசப்படுவோம்" என்று தெளிவாகப் பேசிக் கொண்டிருக்கும் போதே, விக்ரம் வந்து இறங்கினார். விக்ரமைக் கண்ட சூர்யா 'ஏய் சித்தா!' என்று கூவ, விக்ரமோ சூர்யாவைப் பார்த்து "ஏலே சக்தி வேலு!" பதிலுக்குக் கூவ, இருவரும் கைகுலுக்கிக் கொள்கிறார்கள். 'பிதாமகன்' படத்தில் இவர்களது பாத்திரங்களின் பெயர்கள் இவைதானாம். நாம் கிளப்பிய விவகாரம் பற்றிக் கேட்டதும், விக்ரம் ரொம்பவே உணர்ச்சிவசப்பட்டார்.

"நான் இப்போ கமர்ஷியல் ஹீரோ. ஆனால் சில படங்கள்தான் திருப்தியா இருக்கு. உதாரணமா 'சேது', 'காசி'யில் என்ன கிடைச்சதோ, அதைவிட அதிகமா, பத்து மடங்கு திருப்தி இதுலே கிடைச்சிருக்கு. தூக்கத்துலே கூட பிதாமகன் பத்தின நினைப்புத்தான் வருது. பாலா படத்துலதான் ஒரு நடிகனா நிறையக் கத்துக்க முடியுது. இந்த மாதிரிக் கதை அமைஞ்சா, இரண்டு ஹீரோ என்ன, நாலு ஹீரோ படத்துலே கூட நடிப்பேன்" என்று சூர்யாவை வழிமொழிந்து விட்டு, தமிழ் மொழியில் பேச டப்பிங் தியேட்டருக்குள் போனார்கள். அடடே! அடுத்த ஆள் கிடைக்கலியே என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தபோதே பால் கருணாஸ் ஆஜர்!

"நானெல்லாம் ஒரு நடிகன்னு சொல்லிக்கிட்டுத் திரியறேன்னா, அது பாலா அண்ணனாலதான். நந்தாவுலே என்னை லொடுக்குப் பாண்டியா காட்டினார். இப்போ வரைக்கும்



என்னை அப்படித்தான் எல்லோரும் கூப்பிடுறாங்க. பிதாமகன்லே கருவாயன்னு நாமகரணம் சூட்டியிருக்கார். அடுத்த இரண்டு வருஷத்துக்கு தமிழ் மக்கள் என்னை கருவாயான்னு கூப்பிடப் போறாங்க" என்று அடித்துச் சொன்னவர், "அய்யோ டயமாயிடுச்சி" என்று டப்பிங் தியேட்டருக்குள் தாவிக்குதித்தார். படத்தின் பிதாமகன் பாலா வருவார் என்று காத்திருந்தபோது, நம்மைக் கவனித்த அவரின் உதவி இயக்குனர், "இயக்குனர் காலையிலேயே வந்துட்டார். தியேட்டர் உள்ளே லைலாவுக்கு மதுரைத் தமிழ்ச் சொல்லிக் குடுத்துக்கிட்டு இருக்கார்'' என்றார். அவர் சொன்ன மாதிரியே மதுரை மாவட்ட பேச்சு வழக்கில், கொஞ்சம் வேறுமாதிரியான தனித்துவம் கொண்ட தேனி,





பெரிய குளம் வழக்கில், லைலாவுக்கு ட்யூஷன் எடுத்துக் கொண்டிருந்தார் இயக்குனர். அவர் சொல்லித் தருவதில் ஒரு ஆசிரியருக்குண்டான கண்டிப்பு இருந்தது. "என்ன சார், லைலாவை முதன் முதல்லே சொந்தக் குரல்லே பேச வைக்கிறீங்க போல இருக்கு" என்றபடி பேச்சுக் கொடுத்தோம்.

"டெல்லியிலே எந்த பார்ஷியாலிட்டியும் பார்க்காமல் நேர்மையா நடந்துகிட்டா, விக்ரம், சூர்யாவுக்கு மட்டுமில்லை, லைலாவுக்கும் விருது கண்டிப்பா கிடைக்கும். தமிழ் பேசக் கத்துக்கிட்டு சொந்தக் குரலில் பேசணும். இல்லேன்னா லைலாவுக்கு மார்க் குறைஞ்சிடும்" என்றவரிடம் பிதாமகன் கதையைப் பற்றிக் கேட்டோம்.

"இரண்டு கதாபாத்திரங்களைச் சுற்றி பின்னப்பட்ட கதை. சூர்யா லைலாவை லவ் பண்றார். இது விக்ரமுக்குப் பிடிக்காது. அவ்வளவு பொசசிவ்னஸ் உள்ள நண்பர்கள்" என்றவரை இடைமறித்து 'சேது, நந்தா ஹீரோக்களைப் போல இவர்களுக்கும் மனநிலை பாதிப்பு உண்டா?' என்றதும் சிரித்து விட்டார். "இதுலே அந்த மாதிரி கிடையாது. வளர்ந்த சூழ்நிலை ஒருத்தனை எப்படி பிஹேவ் பண்ண வைக்கும்கிறதைச் சொல்றேன். இதுலே எல்லோருமே இயல்பான மனுசங்க. மொத்த படமும் யதார்த்தமா இருக்கும். பாடல் காட்சியிலே கூட லிப் மூவ்மெண்ட்ஸ் கிடையாது" என்று சொல்லிவிட்டு, தனது உதவி இயக்குனர்களைப் பார்த்து, "எங்கப்பா இன்னும் ரசிகாவைக் காணோம்?" என்று கொஞ்சமாய்க் கோபப்பட, "சாரி சார் கொஞ்சம் லேட் ஆயிடுச்சு" என்று உள்ளே நுழைந்தார் அந்த நடிகை. நமது முகத்திலோ பட்டென்று ஆச்சர்யம் ஒட்டிக் கொண்டது. ராசியில்லாத நடிகை என்று முத்திரை குத்தப்பட்ட ரசிகாவா அது!

"அந்தப் பொண்ணை நடிக்க வைக்கலாம்ன்னு சொன்னப்போ ராசியில்லாத நடிகைன்னு சொன்னாங்க! எனக்கு சினிமாவில் பிடிக்காத கெட்ட வார்த்தை அது. உசிலம்பட்டி இளவட்டப் பொண்ணா அருமையா நடிச்சிருக்காங்க. படம் வந்ததும் நிறைய வாய்ப்புகள் தேடி வரும்" என்றபடி "ரெடி டேக்" சொல்லி பிஸியானார் பாலா.

பிதாமகனில் சிம்ரனும் நடித்திருக்கும் இரகசியம் பற்றி நாமும் கேட்கவில்லை, அவரும் சொல்லவில்லை! தீபாவளி வந்தால் தெரிந்து விடப் போகிறது!

— ஜெய்

படங்கள்: பிதாமகன் படத்திலிருந்து



குருஜி

அமெரிக்க நாட்டில், ஜியார்ஜியா மாநிலத்தில், அல்ஃபரெட்டா என்று ஓர் ஊர். அங்கு, தெருக்களை அகலப்படுத்துவதற்காக நகராட்சி, நூற்றி ஐம்பது ஆண்டுகள் பழைமையான பல மரங்களை வெட்டிவிட முடிவு செய்தது. பொறியியல் துறை, கேபிள் கம்பெனி மற்றும் தொலை பேசி கம்பெனி ஆகியவை, இத்திட்டத்திற்கு ஒப்புதல் அளித்தன.

மரங்களை எப்படியாவது காப்பாற்றிவிட வேண்டும் என்று பலருக்கும் எண்ணமிருந்தது. ஆனால் எப்படி என்றுதான் தெரியவில்லை. ஜுவானிடா ரோகா என்ற ஒரு பக்தர் என்ன செய்தார் தெரியுமா? ஒவ்வொரு மரத்திலும் குருஜியின் படத்தை மாட்டினார். பின்னர் நகர மன்ற அதிகாரிகளைத் தொலைபேசியில் அழைத்து, மரங்களை ஒரு துறவி பாதுகாத்துக் கொண்டிருப்பதாகக் கூறிவிட்டார்!

நகர் முழுதும் இச் செய்தி பரவியது. முந்நூறுக்கும் மேற்பட்ட எதிர்ப்பாளர்கள், நகராட்சி மன்றத்தின் முன் கூடினர். முடிவு! திட்டம் கைவிடப்பட்டது. மரங்கள் இப்போது மகிழ்ச்சியுடன் காற்றில் தலை யசைத்துக் கொண்டிருக்கின்றன!

## ஸ்ரீ ஸ்ரீ ரவிசங்கர்

இந்தப் பூமி ஏன் உருண்டை வடிவத்திலுள்ளது என்று தெரியுமா? அப்போது தான் அதை எட்டி உதைக்க முடியும்! அது உருண்டோடும்!

காலையில் விழித்து எழுந்ததிலிருந்து நீங்கள் எப்போதும் மக்களுடன் இருக்கிறீர்கள். உங்கள் மனம் இவ்வுலக வாழ்வுக்கு உரிய எண்ணங்களில் சிக்கியுள்ளது. ஆகையால் பகலில் ஏதாவது ஒரு சில நிமிடங்கள் அமைதியாக உட்காருங்கள். கண்களை மூடியபடி, உங்கள் இதயக் குகைக்குள் செல்லுங்கள். ஒரு பந்தை உதைப்பது போல் உலகத்தை எட்டி உதையுங்கள்.

ஆனால் கண்களைத் திறந்தவுடன் பந்தை மீண்டும் பிடித்துக் கொள்ளுங்கள். ஏனெனில், அடுத்த அமர்வில் நீங்கள் உதைப்பதற்கு அது வேண்டுமல்லவா?

பகல் பொழுதில் உங்கள் வேலையோடு நூறு சதவிகிதம் ஒன்றியிருங்கள். அதிலிருந்து உங்களை விலக்கிக் கொள்ள முயலாதீர்கள். ஆனால் தியானம் செய்ய அமரும் போது, உங்களை முழுமையாக விலக்கிக் கொள்ளுங்கள். எவரால் முழுமையாக விலக்கிக் கொள்ள முடிகிறதோ, அவரால் தான் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ள முடியும்.

முடிவாக, ஒரே சமயத்தில் உங்களால் ஒன்றிப் போகவும், விலகிக் கொள்ளவும் இயலும். பந்தை எட்டி உதையுங்கள்; பின்னர் பந்தாட்ட இலக்குக் குறியிடத்திலேயே இருந்து கொள்ளுங்கள். இதுதான் வாழும் கலை; வாழும் கைத்திறம்.



# உலகை உதையுங்கள்!

# தீபாவளி கொண்டாடுங்க! பரிசு தட்டுங்க!




**சந்தாதாரர் ஸ்பெஷல்!**

அறுபது ஆண்டுகளுக்கு மேலாக ஒவ்வொரு தீபாவளியன்றும் கல்கி வாசகர்களின் இல்லங்களில் மகிழ்ச்சியை இரட்டிப்பாக்கி வருகிறது **கல்கி தீபாவளி மலர்.**

இந்த ஆண்டு கல்கி சந்தாதாரரின் மகிழ்ச்சி மும்மடங்காகும்! காரணம், ஓராண்டுச் சந்தா ரூ 330 செலுத்தினால் ரூ 80 பெறுமானமுள்ள **கல்கி தீபாவளி மலர்** பரிசாக உங்கள் வீடு தேடி வரும்!

**கல்கி தீபாவளி மலர்** குறைந்த எண்ணிக்கையிலேயே சந்தாதாரருக்கு ஒதுக்கப்படுவதால், ஏமாற்றத்தைத் தவிர்க்க உடனடியாகச் செயல்படவும்.

ஏற்கெனவே எமது நேரடி சந்தாதாரராக இருப்போரும் ஓராண்டுச் சந்தா அனுப்பி தங்கள் சந்தாவை நீடிக்கச் செய்து பரிசைப் பெறலாம். சந்தா எண்ணைத் தவறாமல் குறிப்பிடவும். முழு விலாசத்தையும் தெளிவாக எழுதவும்.

முடிவு தேதி **அக்டோபர் 10, 2003**

முடிவு தேதியை ஒத்திப் போட இயலாது.

'**கல்கி**' என்ற பெயருக்கு சந்தாத் தொகையை DD, MO அல்லது cheque மூலம் அனுப்பலாம். வெளியூர் cheques ஏற்பதற்கில்லை.

**கல்கி** சந்தாத் தொகை அனுப்ப வேண்டிய முகவரி:

**சர்க்குலேஷன் மானேஜர், கல்கி காரியாலயம்,**
**47- NP, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097**




*தீபாவளி மலர்னா, கல்கிதான்!*





• ரவி

• ஜோதி கிருஷ்ணா

அந்தப் பொடிப் பையன் ஹீரோ. அடுத்தப் படமும் வெற்றிப்படமாக அமைந்தால், நாற்காலிக் கனவுகளுடன் வாழ்ந்து கொண்டிருக்கிற நாற்பது ப்ளஸ் ஹீரோக்கள் வி.ஆர்.எஸ். வாங்கிக் கொண்டு போய்விட வேண்டியதுதான்.

அடேங்கப்பா! யாருய்யா அந்தப் புது வரவு என்று நீங்கள் கேட்டால், தமிழ் சாட்டிலைட் சானல்களில் காட்டப்படும் சினிமா டிரெய்லர்களைக் கூட நீங்கள் பார்ப்பதில்லை என்று அர்த்தம்!

பத்தொன்பது வயது நிறையாத தனுஷ் தான் இளசுகளின் இப்போதைய பேட்டை மொழி!

விஜய், அஜீத், விக்ரம் போன்ற ஹீரோக்கள் தந்த மயக்கம் சினிமாத்தனங்களின் மொத்த உருவம் என்றால், தலைமுறை இடைவெளி, பொருளாதார பலவீனம், வேலையின்மை, பக்குவமற்ற காதல் என நசுங்கும் நடுத்தரக் குடும்பத்து இளைஞர்களின் பிம்பமாக முன்னிறுத்தப்படுவதே தனுஷ் மேனியாவுக்குக் காரணம்.

பெற்றோரின் கண்டிப்பை அடக்குமுறையாகக் கருதி பள்ளிக்கூடத்திலிருந்தே, புத்தகப் பையுடன் வெளியூருக்கு ஓட்டம் பிடிக்கிறது ஒரு பதின் பருவக் குழாம். அதில் சக மாணவி ஷெரின் மீது தனுஷுக்கு இனக்கவர்ச்சி. விளைவு, வெளியூர் தனிமை, ஷெரினுடனான

# பயம் கிளப்பும் விடலை ஹீரோக்கள்!



• எடிட்டர் மோகன்

**கொ**ஞ்சம் கனமாகக் காற்றடித்தால் ஒடிந்துவிடும் அபாயமுள்ள உடலமைப்பு, பலநாள் அரை வயிற்றுக்கு மட்டுமே சாப்பிட்டு வளர்ந்தது போல சாதாரணத் தோற்றம். இப்படிப்பட்ட தகுதிகளுடன் இதற்கு முன்பு வேறொரு கதாநாயகன் தமிழ்ப்பட உலகில் காலடி வைத்திருக்கிறாரா என்றால், இல்லையென்று கற்பூரம் அடித்துச் சத்தியம் பண்ணலாம். கதாநாயகன் என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற இலக்கணத்தைப் பொடிப் பொடியாய் உடைத்தெறிந்தது போதாதென்று, அடுத்தடுத்து மூன்று அதிரடி வெற்றிப்படங்களைக் கொடுத்திருக்கிறார்

முதல் பாலுறவில் முடிகிறது. இருவருக்கும் கொஞ்ச நேரம் குற்ற உணர்ச்சி. பசியும், சமூகமும் துரத்துகிறது. தங்கள் வீடுகளே ஒரே திசைவழி எனத்திரும்புகிறார்கள். பிள்ளைகள் கிடைத்துவிட்ட மகிழ்ச்சி பெற்றோர்களுக்கு. ஓடிப்போன பொடிசுகள் பழையபடி பள்ளிக்கூடத்துக்குத் திரும்புகின்றனர். இதுதான் தனுஷ் அறிமுகமான 'துள்ளுவதோ இளமை' படத்தின் கதை. சிறு வயதில் ஒடுக்குதலுக்குள்ளான ஆதரவற்ற ஹீரோவுக்கு, கல்லூரியில் பணக்கார வீட்டுப் பெண்ணின் நட்பு கிடைக்கிறது. அவள் தன்மீது காட்டும் அக்கறையை காதலென்று குழம்பிகொள்(ல்)வது, தனுஷ் நடிப்பில் வெளிவந்த 'காதல் கொண்டேன்' படம்.

இப்போது வெளிவந்து ஓடிக் கொண்டிருக்கும் 'திருடா திருடி'யில், பொறுப்பற்றுத் திரிகிற நடுத்தரக் குடும்பத்துப் பையன் பாத்திரம். மூன்று படங்களிலுமே கதை தான் ஹீரோ என்றாலும், தனுஷ் அலட்டல் இல்லாத வெகு இயல்பான நடிப்பால் கதைக்குப் பொருத்தமான ஹீரோவாகத் தன்னை மாற்றிக் கொண்டு விடுவதில்தான் இந்த வெற்றி.

தனுஷ் வெற்றிப் பின்னணியில் இன்னொரு பலவீனமான விஷயம், பச்சையான பாலியல் வக்கிர முத்திரை. பதின் பருவ பாலுணர்வுகளை, கொச்சையாகவோ, அல்லது நாகரிகமாகவோ, பல்வேறு சந்தர்ப்பங்களில் வெளிப்படுத்தும் விதமாக தனுஷ் பாத்திரத்தை இந்த மூன்று படங்களிலுமே கட்டமைத்திருக்கிறார்கள். தனுஷ் படமென்றால் இதே ரக பாலியல் வக்கிரக் காட்சிகளை ரசிகர்கள் எதிர்பார்த்து வருவார்கள், என்று முதல் வாய்ப்புத் தேடும் புதிய இயக்குனர்கள், அவருக்காக 'அந்த மாதிரி' கதைகளையே யதார்த்தப் போர்வையில் மீண்டும் மீண்டும் உருவாக்கும் ஆபத்து தொடரக்கூடும். ஆனால் வயதான ஹீரோக்களால் தூங்கி வழிந்த தமிழ் சினிமா, தனுஷ் போன்ற புயலைக் கிளப்பும், விடலை ஹீரோக்களால்தான் இளமை இரத்தத்தைப் பாய்ச்சிக் கொண்டிருக்கிறது என்கிறார்கள், கோலிவுட்டில் தொடர்ந்து புழங்கி வரும் சினிமாத் தயாரிப்பாளர்கள் சிலர். இனி விடலைப் பையன்களை போட்டு தைரியமாகப் படம் பண்ணலாம், நல்ல கதையும், திரைக்கதையும் கிடைத்துவிட்டால் போதும் என்ற புத்துணர்ச்சி வந்திருக்கிறது.



• யோகன்

• 'காதல் கொண்டேன்' • தனுஷ்

புத்துணர்ச்சி உருவாகக் காரணமான தனுஷ் சினிமாவுக்கு வந்தது பற்றி என்ன சொல்கிறார்: "சினிமாவாலேதான் அப்பா கடனாளி ஆனார். பி.ஈ. படிச்சு முடிச்சதும் அமெரிக்கா போயி சம்பளம் வாங்கி அனுப்பு. அரை வயித்துக்குச் சாப்பிட்டாவது கடனை அடைச்சுடுவேன்னு அண்ணனைப் பார்த்து அடிக்கடி அப்பா சொல்லிக்கிட்டே இருப்பார். அப்படிப்பட்ட அப்பாவும், அண்ணனும்தான் என்னை வலுக்கட்டாயமாக சினிமாவுக்குள்ளே இழுத்துக்கிட்டு வந்தாங்க. நடிக்க வர்றதுக்கு முன்னாடி, டான்ஸ்லே மட்டும் கொஞ்சம் விருப்பம் இருந்தது. கலா மாஸ்டர்கிட்டே கத்துக்கிட்டேன். இப்போ நான் புரூஸ்லீ மாதிரி ஃபைட் பண்றேன்னு சொல்றாங்க... கேட்க சந்தோஷமாகத்தான் இருக்கு" என்று சொல்லும் தனுஷ், அப்பா தயாரிப்பாளராகவும் அண்ணன் இயக்குநராகவும் இருப்பதால் என்ன சௌகரியம் என்கிறார்?

"என்னை மாதிரி ஒரு டப்பா மூஞ்சிக்கு வெளித் தயாரிப்பாளர்கள் துண்டு

ரோலைக் கூட நம்பித் தர மாட்டார்கள். அண்ணன் இயக்குநராக இருப்பதில் நெருக்கமா பல விஷயங்களைக் கேட்டு கத்துக்க முடியாது. நெருக்கமான காட்சிகளிலே நடிக்கும் போது கொஞ்சம் சங்கடமாகவும் இருக்கு. வேற என்ன செய்யறது. இப்போதைக்குப் பணத்துக்கான வழி மட்டுமில்லே, அப்பா, அண்ணன், நான் சேர்ந்த கூட்டணி இரண்டாவது முறையா ஜெயிச்சுட்டதுலே, எதிர்பார்ப்பு கூடியிருக்கு. இதை இப்போ பணமாக்கினாத் தானே உண்டு'' என்று தடாலடியாகப் பேசுகிறார் தனுஷ்.

இவர்களை அடியொற்றி அப்பா, அண்ணன், தம்பி கூட்டணியாக ஜெயித்திருக்கும் 'ஜெயம்' படக் கூட்டணியிலிருந்து வந்திருக்கிறார், இளம் ஹீரோ ரவி. இவருக்கு தனுஷ் வயதுதான் என்றாலும், கொஞ்சம் எடுப்பான கொழுகொழு தோற்றம். தனுஷுக்கு புருஸ்லியின் சாயல் உண்டென்றால், இவர் அமிதாப்பச்சனின் அண்ணன் மகன் போல பந்தாவாக இருக்கிறார். அறிமுகப்படம் தமிழகமெங்கும் நூறு நாட்களை நெருங்கி விட்டதில், ரவிக்கு ஏகப்பட்ட அழைப்புகள். இதுவரை ஐம்பது கதைகளைத் தனது மகனுக்காகக் கேட்டும் ஜெயம் பட திரைக்கதைபோல் எதுவும் அமையவில்லை என்கிறார் ரவியின் தந்தை யான எடிட்டர் மோகன். அப்படி என்ன தான் இருந்தது ஜெயம் படத்தில்.

நாயகிக்கு சிறு வயதிலேயே ஒரு முரட்டுப் பையனை (வில்லன்) நிச்சயம் செய்து விடுகிறார்கள். வில்லனை மீறி நாயகியை கைப் பிடிப்பதாக வழக்கமான கதை. ஆனால் வித்தியாசமான காட்சி அமைப்புகளால் தியேட்டர் அமர்க்களப்படுகிறது. ரவியின் நடனத்திறமை, நடிப்பு, சண்டை காட்சியில் காட்டும் வேகம், எல்லாவற்றையும்விட படத்தில் இருந்த நகாசு வேலைகள் ரவியை வெற்றிப்பட ஹீரோவாக்கி விட்டன.

"நானும் அண்ணனும் சினிமாவில் பெரிய ஆட்களா வரணும்னு அப்பா எங்களைத் தயார்படுத்தினார். நான் கிளாசிக்கல் டான்சர். லயோலாவில் விஷுவல் கம்யூனிகேஷன் படிச்சேன். அண்ணன் தரமணியில் டி.எஃப்.டி. டைரக்ஷன் படிச்சார். அப்பாவுக்கு மதுரை தான் சொந்த ஊர். ஒன்று நடிகனாகணும், இல்லேன்னா இயக்குநராகணும்னு சினிமாவுக்குள்ளே நுழைஞ்சு கடைசியிலே எடிட்டர் ஆகி விட்டார். அவரோட நிறைவேறாத இரண்டு ஆசைகளைத்தான் நாங்க இப்போ நிறைவேற்றி இருக்கோம்'' எனும் ரவிக்கு ஐம்பது லட்சம் சம்பளம் தரத் தயாரிப்பாளர்கள் தயார்.

படஅதிபர் அழகன் தமிழ்மணி தயாரித்திருக்கும் 'அன்பே உன்வசம்' படத்தில் அறிமுகமாகும் யோகனுக்கும், 'காதல் மூச்சு', 'வணங்காமுடி' என்று பல படங்களில் நடிக்கும் யோகம் அடித்திருக்கிறது. "அப்பாகிட்டே தயாரிப்பு நிர்வாகத்தைத்தான் கத்துகிட்டேன். ஆனால் நான் ஒரு நடிகனாக வரணும்னு அம்மா விரும்பினாங்க. அதுக்காகவே நடிப்பைக் கத்துகிட்டேன்" என்கிறார் யோகன். "முதல்லே நடிப்புலேதான்க ஜொலிக்கணும். நடனம், சண்டையெல்லாம் படத்துலே சில நிமிஷங்கள் வந்து போற பொழுதுபோக்கு விஷயங்கள். நடிப்புக்காக எத்தனை கஷ்டப் பட்டாலும் பரவாயில்லை" என்று சொல்லும் இவருக்கு, வணங்காமுடி படத்தில் போலீஸ் இன்ஃபார்மர் பாத்திரம். இதற்காக கோவை, சேலம், திருநெல்வேலி, மதுரை நகரங்களில் தலா பத்து நாட்கள் தங்கி, போலீஸ் இன்ஃபார்மர்களோடு பழகிவிட்டு வந்து, பிறகே நடித்திருக்கிறேன் என்கிறார்.

இந்த தந்தை, மகன்கள் கூட்டணியில் இப்போது ஏ.எம். இரத்தினம், அவரது மூத்த மகன் ஜோதி கிருஷ்ணா ஆகியோரும் களமிறங்கப் போவதாக அறிவித்து விட்டார்கள். எப்படியோ, நடிப்புத் திறமைதான் முக்கியம், தோற்றம் முக்கியமல்ல என்று தீர்ப்பு வழங்கியிருக்கும் தமிழ் ரசிகர்களை வணங்கலாம்.

அதே சமயம், புதிய ஹீரோக்களுக்காகத் தயாராகிவரும் கதைகளால், தமிழ் சினிமாவுக்கு நேரப் போகும் பக்கவிளைவுகளை எண்ணி, இப்போதே வருத்தப்படவும் ஆரம்பிக்கலாம்.

**— நட்சத்திரன்**



''ஒரு காலல ஷூவும் மறு காலல செருப்புமா எங்கே கிளம்பறீங்க?''

''கல்யாணத்துக்குத்தான்! யாரும் செருப்பு திருட முடியாது பாருங்க!''

— அம்பை தேவா

# தீபாவளிக்கு உதவி செய்யுங்கள்



கோயமுத்தூர் - குரும்பபாளையத்தில் இயங்கி வருகிறது 'தி யுனைடெட் ஊனமுற்றோர் பள்ளி'. எழுந்து நிற்கமுடியாத, நடக்கமுடியாத, பேசும் சக்தியற்ற, மனவளர்ச்சி குன்றிய 110 ஆதரவற்ற சிறுவர், சிறுமியர்களை இந்தப்பள்ளியில் நாம் அரவணைத்துப் பராமரித்து வருகிறோம். இந்த இல்ல 110 ஊனமுற்ற, அனாதை குழந்தைகளும் தீபாவளியினைக் கொண்டாட தங்களால் இயன்ற உதவியினை பொருளாகவோ, டிராப்ட் / மணியார்டர் மூலமாக இப்பள்ளியின் பெயரில் அனுப்பி உதவி செய்யலாம். கோயம்புத்தூர்-சத்தி மெயின் ரோட்டில் குரும்பபாளையத்தில் தி யுனைடெட் பள்ளி 11 ஆண்டுகளாக செயல்படுகிறது. பள்ளியினை நேரிலும் பார்வையிடலாம்.



## The United Physically Handicapped School

(an Institution for orphaned disabled children)

**96, Sathy Main Road, Kurumbapalayam, Coimbatore-641 107.**

**Tamil Nadu. INDIA Phone : 91-0422-2667578, 2667636.**

* Donations are Tax exempt



• கிரேஸி மோகன்



• உமா



• காந்தன்

# இலங்கையில் ஆவணி அவிட்டம்; குவைத்தில் தீபாவளி!

“நடிப்பு என்பது பெரிய விஷயமே இல்லை; நட்பு இருந்தால் போதும், நடிப்பு தானாக வந்துவிடும்! இதை நாங்கள் அனுபவ பூர்வமாகப் பார்த்து வருகிறோம்'' என்கிறார் கிரேஸி மோகன்.

இவரது நாடகக் குழுவான கிரேஸி கிரியேஷன்ஸுக்கு இது வெள்ளி விழா ஆண்டு. தமது நண்பர்கள் கம் நாடகக் குழுவினர் குறித்த சில சுவையான நினைவுகளைப் பகிர்ந்து கொள்கிறார் கிரேஸி மோகன்:

• சீனிவாசன்



''எங்க நண்பர் இச்சாவின் சகோதரி கல்யாணம். நண்பர்கள் எல்லாம் சாப்பிட்டு விட்டு அரட்டை அடித்துக் கொண்டிருந்த போது, இச்சாதான் நாமெல்லாம் சேர்ந்து ஒரு நாடகக்குழு ஆரம்பித்தால் என்ன?'' என்று பிள்ளையார் சுழி போட்டார். அதுதான் கிரேஸி கிரியேஷன்ஸுக்கு விதை.

**வா**சு எங்கள் குழுவில் முக்கியமானவன். நாடகத்துக்குத் தேதி கொடுப்பதில் ஆரம்பித்து, தேதி முடிவானவுடன் எல்லாருக்கும் தகவல் கொடுத்து, வெளியூர் என்றால் எல்லாருக்கும் ரயில் டிக்கெட் புக் பண்ணுவது எல்லாவற்றையும் பார்த்துக் கொள்ளும் வாசு, எனக்கு ஐந்து வயது முதல் நண்பன். யார் வர முடியாது போனாலும், அந்த கேரக்டரில் வாசு நடித்து, நாடகத்தை கலகலப்பாக முடித்து விடுவான்.

எனக்கு ஒரு கெட்ட பழக்கம். இரண்டு மணி நேரத்துக்கு நாடகம் போட சுமார் நூறு பக்கம் நாடகம் எழுதினால், முன்னூறாவது பக்கத்தில்தான் 'சுபம்' போடுவேன். நாடக ஸ்கிரிப்ட்டை கத்தரிக்கோல் இல்லாமல், பேனாவாலேயே எடிட்டிங் என்ற பெயரில் வெட்டி, சீர்படுத்திவிடுவது டைரக்டர் காந்தனுக்குக் கைவந்த கலை. பெருமைக்குரிய காந்தன், டைரக்டர் மௌலியின் தம்பி.

குழு ஆரம்பித்து, முதல் நாடகத்துக்கு நான்கு நாட்கள், பிரபல நடிகரை வைத்து ஒத்திகை நடந்தது. அப்புறம் நான் வேலை பார்த்த சுந்தரம் கிளேட்டனில் எனக்கு நைட் ஷிப்ட் என்பதால், ரிகர்சலுக்கு வர முடியாமற் போனது. நாடக அரங்கேற்றத்துக்கு முதல் நாள் ஒத்திகைக்குப் போனால், ஹீரோ ரோலில் தம்பி பாலாஜி நடித்துக் கொண்டிருந்தான். எனக்கு ஷாக்! ''பிரபல நடிகரை நம்ப முடியாது. ரிகர்சலுக்குக்கூட ரெகுலராக வர முடியவில்லை என்பதால் அவரைத் தூக்கிவிட்டோம்'' என்றார்கள் ஏகோபித்த குரலில்! அப்படி சான்ஸ் இழந்த பிரபல நடிகர் யார் தெரியுமா? வேறு யாருமில்லை; இந்த கிரேஸி மோகனே தான்!

• மதுமிதா



**பா**லாஜிக்கு நடிப்பு என்றால் அப்படி ஒரு அதீத ஆர்வம். தேதி கேட்டால், சொந்த விஷயங்கள் எதுவானாலும்

ஒதுக்கி வைத்துவிட்டு, ஓ.கே. சொல்லிவிடுவான். அதன் காரணமாகவே நாங்கள் இலங்கையிலும், அமெரிக்காவிலும் ஆவணி அவிட்டமும், குவைத்தில் தீபாவளியும்கூட கொண்டாடியிருக்கிறோம்.

எங்கள் குழுவின் சொதப்பல் மன்னன் 'சீனு' மோகன். ஆனாலும் ரொம்ப அதிர்ஷ்டக்காரன். அமெரிக்காவில் நாடகம் போட ஏற்பாடாகி இருந்தது. அமெரிக்காவில் இறங்கினதும், எங்கள் அனைவரது லக்கேஜும் வந்துவிட்டது. மோகனுடையது மட்டும் வரவில்லை. இவன் நேரே சம்பந்தப்பட்ட விமானக் கம்பெனி கவுண்டருக்குப் போய், "நான் ஒரு நடிகன்! நாடகம் போட வந்திருக்கிறேன். என் உடை, நாடக காஸ்டியூம் எல்லாம் இருந்த லக்கேஜ் வந்து சேரவில்லையே" என்று சப்தம் போட, விமானக் கம்பெனியினர் உங்கள் லக்கேஜைக் கண்டு பிடித்து, உங்களிடம் ஒப்படைக்கும்வரை தினம் இருநூறு டாலர் நஷ்டஈடு தருகிறோம் என்று சொல்லி, உடனடியாக இருநூறு டாலரைக் கொடுத்தார்கள். இவன் அதில் சகட்டுமேனிக்கு உடைகள் வாங்கிக் கொண்டான். மூன்று நாட்கள் கழித்து அவன் லக்கேஜ் வந்தது. ஹோட்டலுக்குப் போய்த் திறந்து பார்த்தவுடன் எல்லோருக்கும் ஷாக்! "டேய்! இதுக்காடா முப்பதாயிரம் ரூபாய் நஷ்டஈடு?" என்று கேட்டோம். ஆம்! உள்ளே இருந்தது, சாதாரணமான நாலு செட் பாண்ட், சட்டை, உள்ளாடைகள், தட்ஸ் ஆல்!



• கிச்சா

சுப்ரமணியம் என்கிற அப்பு ஒரு வக்கீல். ஆனால் அபாரமான நடிகன். ஒரே நாடகத்தில் நாலு ரோல்கூட பண்ணியிருக்கான். அலாவுதீன் நாடகத்தில் முதலில் ஆபீஸ் மேனேஜராக வருவான். அப்புறம் அலாவுதீன் பூதமாக வருவான். அப்புறம் மாதுவின் மாமனாராக. மறுபடி அலாவுதீனாக.

எங்கள் நண்பர்களில் ஆஜானுபாகுவான ஆசாமி பார்த்திபன். கல்கத்தாவில் நாலு நாள் நாடகம் முடிந்து, ஊருக்குப் புறப்பட வேண்டிய தினம் ரெஸ்ட். டீ.வியில் கிரிக்கெட் மேட்ச் பார்த்துக் கொண்டு இருந்துவிட்டு, சாவகாசமாய் ஸ்டேஷனுக்கு மூன்று டாக்ஸிகளில் புறப்பட்டோம்.

ஹௌரா பாலத்தில் டிராபிக் ஜாம். போக்குவரத்து நார்மல் ஆக, இரண்டு மணி நேரத்துக்கு மேல் ஆகும் என்றார்கள். வேறு வழியில்லாமல், பாதிப் பேர், லக்கேஜ்களை எடுத்துக் கொண்டு ஹௌரா படகுத் துறைக்குப் போய், சாமான்களைப் படகு மூலம் எடுத்து வர, மற்றவர்கள் மூச்சைப் பிடித்துக் கொண்டு ஓட்டமாய் ஓடினோம்.

ஸ்டேஷனுக்குள் நுழைந்தபோது எங்கள் அதிர்ஷ்டம், சென்னை ரயில் கால் மணி நேரம் லேட் என்றார்கள். பார்த்திபன் வாவா என்று குரல் கொடுக்க, பெட்டியில் ஏறி அமர்ந்தோம்.



• அப்பா ரமேஷ்

சட்டென்று ஜன்னலுக்கு வெளியில் ஒரு தமிழ் முகம். "என்ன இந்த ரயிலில் உட்கார்ந்திருக்கிறீர்கள். இது அஜ்மீர் போகிற ரயிலாயிற்றே! எதிரில் இருப்பதுதானே சென்னை ரயில்!" என்று அவர் சொன்னதும் எங்களுக்கு பேஸ்து அடித்தது. மறுபடி அவசரம் அவசரமாய் சாமான்களை இறக்கி, ஏற்றி... அப்பப்பா... ஆயுசுக்கும் மறக்காது.

"ஜுராசிக் பேபி' நாடகம் நடந்து கொண்டிருந்தது. ஒரு காட்சியில் அம்மாவாக நடிக்கும் சீதா, கட்டிலில் உட்கார வேண்டும். அவர் உட்காருகிறபோது, கட்டில் முனையில் விரல்பட்டு, ஆழமாய் வெட்டப்பட்டு, இலேசான எலும்பு முறிவாகி... நாடகம் பாதியில் நிறுத்தப்பட்டது. அடுத்து ஒரு மாதத்துக்கு சீதாவால் நடிக்க வர முடியாது என்ற சூழ்நிலை. அப்போது, எங்கள் நண்பர் ஒருவரின் உறவினரான உமா கை கொடுத்தார். நடிப்பு அனுபவமில்லாத உமா, இன்று அசத்திக் கொண்டிருக்கிறார். அது போல, எங்கள் குழுவில் நடித்துக் கொண்டிருந்த சுமங்கலி, டீ.வியில் பிஸியாகி திடீரென்று விலகிக் கொள்ள, அன்றைக்கு நாடகம் பார்த்துவிட்டு, நாடகம் முடிந்தவுடன் எங்களைப் பாராட்ட வந்த மதுமிதா, நடிகையாகி விட்டார்.



• சீனுமோகன்

சந்திப்பு:
**எஸ். சந்திரமௌலி**
படங்கள்:
**ஸ்ரீஹரி**



• மாது பாலாஜி

# ஆஹா! ரூ. 50,000 பரிசு!

கோவை
வாசகர்களுக்காக
மட்டுமே

**கல்கி**

வழங்கும் கலக்கல்
குவிஸ் போட்டி!



இது நான்காவது கூப்பன்! கூப்பனைப் பூர்த்தி செய்யுமுன் கீழேயுள்ள விஷயங்களை மீண்டுமொருமுறை படித்துப் பார்த்துக் கொள்ளுங்கள். ரூ.50,000 மெகா பரிசைப் பெற நீங்கள் செய்ய வேண்டியது மெகா வேலையல்ல; 'சிம்பிள் ஜாப்'தான்!

கீழேயுள்ள கூப்பனில் இடம் பெற்றுள்ள கேள்விகளுக்குப் பதில் எழுதி வைத்துக் கொள்ளுங்கள். அடுத்து வரும் 5, 12 அக்டோபர் இதழ்களிலும் இதே போன்று குவிஸ் கூப்பன்கள் இடம் பெறும். ஆறாவது வார இறுதியில் ஆறு கூப்பன்களையும் நிரப்பி, உங்கள் பெயர், விலாசத்துடன் எங்களுக்கு அனுப்ப வேண்டும்.

- அனைத்துக் கேள்விகளுக்கும் சரியான பதில்கள் எழுதிய கோவை மாவட்ட கல்கி வாசகர் ஒருவருக்கு ரூ.50,000 பரிசு வழங்கப்படும்.
- ஒருவருக்கு மேற்பட்ட வாசகர்கள் சரியான பதிலை எழுதியிருந்தால், இருக்கவே இருக்கிறது குலுக்கல் முறை.
- ஆறுதல் பரிசுகளாக, சென்னை, தி. நகர் P.R. ஜுவல்லரி வழங்கும் ரூ.120/- மதிப்புள்ள வெள்ளி காமாட்சி விளக்கு நூறு பேருக்குக் காத்திருக்கின்றன.



- உறையின் மீது 'ஆஹா! ரூ. 50,000 (கோவை)' என்று கட்டாயம் குறிப்பிட வேண்டும்.
- போட்டி தொடர்பாக விசாரணைகள் அனுமதிக்கப்படமாட்டாது.
- இந்தப் போட்டி கோவை மாவட்ட கல்கி வாசகர்களுக்கு மட்டுமே.
- ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.



ரூ.50,000 பரிசு

குவிஸ் போட்டி கூப்பன் - 



1. 'கோவை..............................' ஒரு பிரபல நகைச்சுவை நடிகை.
2. பொள்ளாச்சியிலிருந்து 35 கிலோமீட்டர் தூரத்தில் ஆனைமலையில் உள்ள டூரிஸ்ட் ஸ்பாட்..............................
3. கோவை நகருக்குள்ளே திருச்சி ரோட்டில் இருக்கிறது '.............................. போட்ஹவுஸ்'
4. மேட்டுப்பாளையத்தில் உள்ளது பிரபல..............................காளி கோயில்.
5. 'ஸ்ரீ கிருஷ்ணா'..............................ஸ்வீட் வகைக்குப் பெயர் பெற்றது.
6. பிற்காலத்தில் மகாராஷ்டிர ஆளுனராகவும் விளங்கிய திரு.............................. கோவை செங்குட்டுப்பாளையத்தில் பிறந்தவர்.

✉ தொலைக்காட்சிகளில் இடம் பெறும் சிறப்பு நிகழ்ச்சியை நேரடியாகப் பார்த்ததுபோல் சூடாகவும் சுவையாகவும் இருந்தது. 'அறிவியலா, அழிவியலா' எனும் தலைப்பில் கல்கி வழங்கிய கல்லூரிப் பட்டி மன்றம்.
வீரன்வயல், வீ. உதயக்குமாரன்.




✉ 'சந்தர்ப்ப சூழ்நிலைகளுக்கு ஏற்ப அரசியல் சட்டங்களைக் கையாள வேண்டும்; சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு இடமில்லை' என்பதை தலையங்கம் உணர்த்தியது. தேசிய அரசியலுக்குச் செல்ல ஆசைப்படும் முதல்வர், தேசிய கண்ணோட்டத்தில் சிந்திக்க வேண்டியது அவசியம்.
திருச்சி - 20,
இ. முகமது ஹஸன்.

✉ "அப்பாவிகளைக் காப்பாற்ற முடியாத 'பொடா' என்னத்திற்கு?" என்ற கருணாநிதிக்கும், "அதிகார துஷ்பிரயோகமாகும் வாய்ப்பிருப்பதால் 356ஐ ரத்து செய்ய வேண்டும்" என்ற ஜெயலலிதாவுக்கும், தலையங்கம் மூலம் நன்றாகவே பதில் தந்துள்ளீர்கள். வேலியில் முள் இருப்பதால் வேலியே வேண்டாமெனச் சொல்வது அறிவுடைமை ஆகாது என்ற தலையங்கத்தின் கடைசி வரி, நம் அனைவரின் சிந்தனைக்கும் உரியது.
திருவண்ணாதபுரம், முகதி. சுபா.

# ஸ்பெஷல் பாடம் உண்டா?

✉ டாக்டர் ராமதாஸ் தைலாபுர அரசியல் பயிலரங்கத்தில் - பல்கலைக் கழக பேராசிரியர்களைக் கொண்ட குழுவால் பாடத் திட்டங்கள் அமைக்கப்பட்டிருப்பதெல்லாம் சரி, அதில் கட்சித் தாவல் பற்றிய ஸ்பெஷல் பாடம் உண்டா?
ஈரோடு - 10, பள்ளிப்பாளையம் ரஞ்சனிப்ரியன்.

✉ எதிர்காலத்தில் அரசியல்வாதிகள் நல்ல குடிமகன்களாக, சுயநலக் கலப்பற்ற மக்கள் சேவையில் ஈடுபட வைக்க, டாக்டர் ராமதாஸ் முன் வந்திருக்கிறாரே, பாராட்டாமல் இருக்க முடியுமா என்ன?
சென்னை - 20, சஞ்சீவி மற்றும் நண்பர்கள்.

✉ சிவகங்கை மாவட்டத்தில் செருப்படிபட்ட தலித் பஞ்சாயத்துத் தலைவர், போலீஸ் பாதுகாப்புடன், பல தலைவர்கள் முன்னிலையில், மீண்டும் தேசியக் கொடி ஏற்றுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்ற 'தராசு'வின் பதில் (14.9.2003 கல்கி) அருமை. காயத்துக்குக் களிம்பு தடவும் கனிவு தொனிக்கிறது.
ஈரோடு - 9, சி. நாச்சிமுத்து.

✉ நடைமுறைச் சிக்கல்களினால் சிதைந்துபோன, இரு உள்ளங்களின் பாதையை யதார்த்தமாகச் சித்திரித்திருந்தார் கதாசிரியர் ஜி.ஆர். சுரேந்தர்நாத் 'எல்லாம் பொய்கள்' சிறுகதையில்.
கடம்பத்தூர், என். அண்ணாதுரை.

✉ 7.9.2003 தேதியிட்ட கல்கியில் மும்பை வெடிகுண்டு பற்றிய தங்களின் தலையங்கத்தில், அந்தக் கோரச் செயலை முஸ்லிம் அமைப்புகள் எதுவுமே கண்டிக்கவில்லை என்று எழுதியுள்ளீர்கள். இது உண்மைக்குப் புறம்பானது. ஜமா அத்தே இஸ்லாமி ஹிந்த், அகில இந்தியச் செயலாளர் மௌலானா முஹம்மத் ஜாஃபர், ஜமா அத்தே இஸ்லாமி தமிழ்நாடு மாநிலத் துணைத் தலைவர் ஜி. அப் துர்ரஹீம் ஆகியோரும் இதர பல முஸ்லிம் அமைப்பினரும் இந்தக் குண்டு வெடிப்புச் சம்பவத்தை வன்மையாக கண்டித்துள்ளனர்.
எஸ்.என். சிக்கந்தர் (மக்கள் தொடர்பாளர்), ஜ.இ.ஹி. தமிழ்நாடு.

# GOKULAM
The magazine for children

October 2003
Rs.6/- Only




## Harry Potter Short Story Contest Results!



Activity

## A DRESS FOR PETER

## THE BRONZE NATARAJA



## "TRADITIONAL GAMES ARE FUN!"

Cover Story

Star Rendezvous

## Sri Sri Ravishankar

**Answers your questions**




For subscriptions mail to :
Kalki Buildings, 47-NP, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, CHENNAI - 97.
subscription@kalkiweekly.com

அமுதம் வேண்டி, தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடைந்த போது, முதலில் வெளிப்பட்ட நஞ்சை உண்டதால் 'நஞ்சுகண்டன்' ஆன பெருமை வாய்ந்தவர் சிவபெருமான். நமது உடலிலும் ஒரு நஞ்சுண்டர் இருக்கிறார். அவர்தான் ஸ்ரீமான் மகாகனம் பொருந்திய கல்லீரலார்.

மது, போதைப் பொருள், விஷம் என தெரிந்தோ தெரியாமலோ நாம் குடித்து விடும் நச்சுத்தன்மையுடைய பொருள்களை எல்லாம் வாங்கிக் கொண்டு, அவற்றிலிருக்கும் நச்சுத் தன்மையை நீக்குவது கல்லீரல்தான்.

அது மட்டுமல்ல! போக்குவரத்துப் புகை, தூய்மையற்ற காற்று, தூசி என நாம் சுவாசித்துத் தொலைக்கும் எல்லா மாசுப் பொருள்களையும், சம்ஹாரம் செய்து செயலிழக்கச் செய்வதும் கல்லீரல்தான்!




# ஸ்ரீமான்

காய்கறி நறுக்கிக் கொண்டிருக்கிறீர்கள், அல்லது 'சடாசட்' முகச் சவரம் செய்து கொண்டிருக்கிறீர்கள். 'சர்' என்று வெட்டு! 'குபீர்' என்று வெளிக் கிளம்புகிறது இரத்தத்துளி. அந்த இடத்தை விரலால் அழுத்திப் பிடித்து, ஒன்றிரண்டு நிமிடம் ஆனதும் பார்த்தால் இரத்தம் நின்று விடுகிறது. இப்படி இரத்தத்தை உறைய வைக்க, கல்லீரலில் தயாரிக்கப்படும் 'புரோத்ராம்பின்' 'ரசாயனம் உதவுகிறது.

தேவைக்கு அதிகமான மருந்து மாத்திரைகளைச் சாப்பிட்டாலும் கல்லீரலுக்குப் பிடிப்பதில்லை. உடனே அவற்றை வெளியேற்றி திசுக்களைப் பாதுகாக்கும்.

இரத்தத்தில் இரத்த அடர்வெண் அதிகமாகி மூளை, இதயக் குழாய்களில் அடைப்பு ஏற்படுவதைத் தடுக்கவல்ல 'ஹெப்பாரின்' இரசாயனப் பொருளை உண்டாக்குவதும் கல்லீரல்தான்.

நாம் உட்கொள்ளும் மருந்து மாத்திரைகளை, வேலை செய்ய வைப்பதும் கல்லீரல்தான்.

கல்லீரலில் சுரக்கும் பித்தநீர், சிறுகுடலில் கொழுப்பு செரிமானமாவதற்கு உதவி, உயிர்ச்சத்துகளை குடல் உறிஞ்சிக் கொள்ள உதவுகிறது.

பாலின உணர்வுச் சுரப்பிகளைச் சமநிலைப் படுத்துவதிலும் கல்லீரலுக்கு

## 12 வணக்கத்துக்குரிய வயிறே...

முக்கியப் பங்கு உண்டு. சுருக்கமாகச் சொன்னால், 'கல்லீரல்' என்ற பெயரில் நமது உடம்புக்குள் ஒரு ரசாயனத் தொழிற்சாலையே மூன்று ஷிஃப்டுகளில் ஓடிக் கொண்டிருக்கிறது.

நரம்புகளின் வழியாகக் குடலிலிருந்து வரும் உணவுச் சத்தையும், மகா தமனியிலிருந்து வரும் இரத்தக் குழாய் வழியே பெற்றுக் கொள்ளும் ஆக்ஸிஜனையும் வைத்துக் கொண்டு, பல ரசாயன மாற்றங்களை நடத்தி முடிக்கிறது.

மாவுச்சத்து, கொழுப்பு, புரதம் போன்றவற்றை, கல்லீரல் வளர்சிதை மாற்றத்துக்கு உட்படுத்தி, கணக்கில்லாத உடலியக்க வேலைகளுக்கு கண்டிப்பான ஃபோர்மேன் போல இருந்து வேலை வாங்குகிறது.

இவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த கல்லீரலில் சிரோசிஸ் (கரணை நோய்), காசநோய், அடைப்புகள், நாளப்புடைப்பு, போர்டல் உயர் இரத்த அழுத்தம், சீழ்க் கட்டிகள், மஞ்சள் காமாலைத் தொற்று, தீங்கற்ற, வலியற்ற கல்லீரல் கட்டிகள், புற்றுக்கட்டிகள், புற்றுநோய் என ஏகப் பட்ட நோய்கள் தாக்கும் பேரபாயம்

# ஃபோர்மேன்!

இருக்கிறது என்று சுருங்கச் சொல்வது நியாயமில்லைதான். இடப் பற்றாக்குறை, மன்னிக்கவும்.

கல்லீரல் ஆரோக்கியமாக இருக்க மூன்று விஷயத்தில் கவனம் கொண்டாலே போதும். ஒன்று, சரிவிகித புரத உணவு, இரண்டாவது உடல் எடையைச் சீராக வைத்துக் கொள்வது, மூன்றாவது மது அருந்தாமல் இருப்பது.

மூன்றாவது சொல்லப்பட்டதுதான் மிக முக்கியமானது. ஏனென்றால், தொடர்ந்த மதுப்பழக்கம் காரணமாக, கல்லீரல் திசுக்கள் கடுமையாகப் பாதிக்கப்படுகின்றன. அதன் விளைவாக முக்கியப் புரதப் பொருளான 'அல்புமின்' மற்றும் உடலின் இரும்புச் சத்து உறிஞ்சுவதில் முக்கியப் பங்கு வகிக்கின்ற 'ட்ரான்ஸ்ஃபெரின்' போன்றவற்றின் உற்பத்தி குறைகின்றன. உடலில் கொழுப்பு சார்பு புரதப் பொருட்களின் அளவு அதிகரிக்கிறது. இதன் பக்க விளைவாக கல்லீரல் வீங்கி, அழற்சி ஏற்பட்டு, கல்லீரல் திறன் குலைந்து, கல்லீரல் - சிறுநீரக 'ஜாயின்ட் வெஞ்சர்' பணியில் பாதிப்பு ஏற்பட்டு... அப்புறம் என்ன?

குடி, குடியைக் கெடுத்த கதையைச் சொல்லிக் கொள்ள வேண்டியதுதான்!

இவ்வளவும் சொல்லிவிட்டு, குடிகாரர்களுக்கு உதவும் உறுப்பும் கல்லீரல்தான் என்று நான் சொன்னால், 'இதென்னடா லொள்ளாப் போச்சே' என்று தோன்றலாம்.

நிஜம்தான். ஒருவர் குவார்ட்டர், லார்ஜ் என்று சகட்டு மேனிக்குக் குடித்துக் கொண்டே வந்தால், கல்லீரலும், 'போனால் போகுது போ' என்று மதுவில் இருக்கும் நஞ்சுப் பொருளைத் தாக்கி, முறித்துக் கொண்டேயிருக்கும். மொடாக் குடியும் தொடர்ந்து, கல்லீரல் அறுபது சதவிகிதம் கெட்டுச் சீரழியும் வரையிலும் கல்லீரல் தான் உண்டு தன் வேலை உண்டு என்று பொறுமையாகத்தான் இருக்கும். அதையும் மீறி எண்பது சதவிகிதம் வரை அழிக்கப்பட்ட நிலையில்தான் கல்லீரல் 'மனோகரா' சிவாஜியைப் போலப் பொங்கி எழும். ஆனால், தட்ஸ் டூ லேட்! எண்பது சதவிகிதம் கெட்டுப் போன கல்லீரலைக் குணப்படுத்த முடியாது. வக்கீலுக்கும் (தண்ணி அடிச்சும் மிச்சம் மீதி எதுவும் சொத்து, பத்து இருந்தால்) உறவுக்காரர்களுக்கும் சொல்லியனுப்ப வேண்டியதுதான்.

அடுத்த வாரம் மூலாதாரமான விஷயம், காத்திருங்க!



டாக்டர் எஸ். அஷோக்

சந்தானம் எப்போது சாதாரணமாக நடந்து வருவான், எப்போது ஓட்டம் பிடிப்பான் என்பது கணிக்க முடியாதிருந்தது. பெரும்பாலும் அவனது இயக்கம் ஓட்டத்திலே இருக்கும். சாதாரண ஓட்டமில்லை. வாகனங்களை ஓட்டிச் செல்வது போன்ற ஓட்டம். சகஜமாக தன் கூட்டாளிகளுடன் சேர்ந்து நடந்து வருவதுதான் தெரியும். திடுதிப்பென்று இடதுகாலைத் தரையில் உதைத்துக் கொண்டு, கைகளிரண்டையும் முன்னுக்கு நீட்டிப் பஞ்சாகப் பறந்து போவான். ஸ்கூட்டர் ஓட்டுகிறானாம்! திடீரென அவனின் ஆசை காரில் போகத் துடிக்கும். நின்றமேனிக்கே இடது கையைப் பின்னுக்கு நீட்டிக் காற்றில் இரண்டு இழுப்புகள் இழுத்துவிட்டு, கைகளிரண்டையும் ஒரு சேர முன்னுக்கு நீட்டி, ஸ்டீரியங்கைப் பிடித்துக் கொண்டிருப்பது போல ஓட்டம் பிடிப்பான். காரில் பயணிக்கிறானாம்! நின்ற இடத்தில் ஆரம்பித்த ஓட்டம், அவன் சேர வேண்டிய இடத்தில் போய்தான் நிற்கும்!

சின்ன வயசிலிருந்தே இந்தப் பழக்கம் அவனிடம் நண்டுப் பிடிப்பாய்த் தொற்றிக் கொண்டிருந்தது. பள்ளிக்கூடம் விட்டு மாலையில் வீட்டுக்கு வரும் தூரத்தை எளிதில் கடக்க ஏற்படுத்திக் கொண்ட பழக்கம். எட்டாம் வகுப்போடு படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்துவிட்டு, இன்று காட்டு ஜோலிகளுக்கு அலைகிற இந்த மீசை முளைத்த வயசிலும் அவனிடம் ஒட்டிக் கொண்டிருந்தது.

"என்னல இந்த ஓட்டம் ஓடுதான்... புத்தி கெட்ட பயலாத்தான் இருப்பான் போலுக்கு."

கூடச் சேர்ந்த இளசுகள் எல்லாம் பரிகாசம் செய்து சிரித்துக் கொள்வார்கள். சில நேரங்களில் அவனிடம் நேரிடையாகக் கேட்டும் கொள்வார்கள்.

"எதுக்கிலே இப்படி ஓடுத? பாக்கிறவங்க எக்காளமாயில்ல சிரிப்பாங்க."

அதற்கு அவன் தயாராகப் பதில் வைத்திருப்பான்...

"எங்காலு வலிக்கல்ல நா ஓடுதேன்.. எவம் பாத்துச் சிரிச்சா எனக்கென்ன?"

அதற்காக அவனின் சிநேகிதத்தை அவர்கள் புறக்கணித்து விட்டதாக அர்த்தமில்லை. ஜோலியில் எந்தவொரு சலிப்பும் இருக்காது அவனிடம். ஓர் இளவட்டத்திற்குரிய மிதப்பிலே எல்லோரையும் திருப்திப்படுத்தி எசகுபிசகில்லாமல் செய்வான் அவன். வரப்பு வெட்டுவது, பாத்திக் கட்டுவது, குழி தோண்டுவது, சில நாட்களில் மலைக்குப் போய் விறகுகள் பொறுக்கிக் கொண்டு வருவது... இத்யாதி வேலைகள். அவனது அய்யாவும் அம்மையும்கூட எத்தனையோ தடவை, தங்களின் பரம்பரைத் தொழிலான பனையேற்றத்துக்கும் கூப்பிட்டுப் பார்த்திருக்கிறார்கள். அதிலெல்லாம் அவனிடம் நாட்டம் இருந்ததில்லை. உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு உச்சிப் பனையேறிப் பிழைக்கும் ஆபத்தைக் காரணம் காட்டி அல்ல, அவன் மறுத்தது. பனையில் ஏறிக் கொண்டால் நினைத்த நேரத்தில் தரையில் காரோட்ட முடியாதே என்ற தயக்கம்தான்.

குத்தகைக்குப் பனைகள் எடுத்து, பதனீர் இறக்கிப் பிழைத்துக் கொண்டிருந்தனர்

# நடை மாற்றம்



# அபிமானி

அவனது பெற்றோர். அவர்களின் சொற்பமான வருமானத்திலும் அவன் தந்த கூலியிலும் அவர்களின் போஜனம் அலப்பரவு இல்லாமல் நடந்து கொண்டிருந்தது. ஆனாலும் தன் அருமந்தப் புத்திரனின் விகற்பமான ஓட்டத்தைக் கண்டபோது தான் அவர்களுக்குக் குடல் கொதிப்பாய் இருந்தது...

"என்ன மக்கா... முழுத்த ஆம்பளையாய் இருந்துக்கிட்டே சின்னப்புள்ளக் கெனக்க ஓட்டம் பிடிக்கிறியே... அக்கம் பக்கம் நக்கல் பண்ணிச் சிரிக்கும்போ எம் புட்டு வேசடையாயிருக்கு தெரியுமா?"

"அவுங்க சிரிச்சா நா என்ன செய்வேன்... பொசமுட்டிப்போய்ச் சிரிப்பாங்க.. எனக்குப் புடிக்குது நா ஓடுதேன்... ஆமா."

அப்போதுதான் அவர்கள் ஒரு முடிவுக்கு வந்தார்கள். அவனுக்குக் கால்கட்டுப் போட்டுவிட்டால் பொஞ்சாதிக்காரி வந்த துடுக்கில் அவனது ஓட்டத்தை நிறுத்தி விடுவான் என்கிற முடிவு.

பொண்ணுக்காக அங்கேயும் இங்கேயும் அலையவேண்டியதிருக்கவில்லை அவர்களுக்கு. அய்யாவின் சொந்தத் தங்கச்சி மகளே தயாராக நின்றிருந்தாள். அவளின் சின்ன வயசிலே முடிவு பண்ணி வைத்திருந்தார்கள் பெற்றோர்கள். சந்தானத்துக்குச் செண்பகம்தான் என்று வார்த்தை அளவில் உறுதி பண்ணியிருந்தார்கள். இப்போது அந்த முடிவை சந்தானத்திடம் பெற்றோர்கள் சொன்னபோது, ரொம்பவும் நெகிழ்ந்து போனான். செண்பகத்தின் அழகான உருவம் அவன் கண்ணில் ஓடியது. மலர்ச்சியாய் அவளின் உதடுகளில் தவழ்ந்த



குறுநகையில் அவன் பூரிப்படைந்தான். அற்பசொற்பமாய் அவன் அவள் வீட்டுக்குப் போய்விட்டு வந்த தருணங்களில் முகங்கோணாமல் பிரியத்துடன் அவள் நடந்து கொண்ட விதங்களை இப்போது நினைத்துப் பார்த்தான். சொந்த அத்தையின் மகள் வேறு. அவனுக்குக் கசக்குமா என்ன?

ஒரு மாதத்தில் நிச்சயதார்த்தம் முடித்து, நாள் குறித்து, உற்றார் உறவினர் சூழ, பெண் வீட்டில் வைத்தே கல்யாணமும் நடத்தி முடித்தாயிற்று. சீர் செனத்தி என்று பெரிதாக ஒன்றுமில்லை. பெற்றோரின் சம்பாத்தியம் முழுவதுமே அவர்களின் ஒற்றைக்கொரு மகளாயிருந்த செண்பகத்துக்கே என்றிருந்தபோது, முறை வைத்துக் கேட்பது அர்த்தமில்லாததாகத் தோன்றியது. சந்தானத்தின் அய்யாவுக்கு இந்தக் கல்யாணம் எசகுபிசகில்லாமல், சந்தோஷமாய் முடிந்ததில் ஏகத் திருப்தியாயிருந்தது. அவர் விரும்பியதும் அதைத்தான்.

ஏக துடுடலாய்க் கல்யாணத்தை முடித்துவிட்டு, மதியமே மாப்பிள்ளை வீட்டுக்குப் போகத் தயாரானார்கள்.

மாப்பிள்ள்ளையும் பெண்ணும் தனிக் காரில் ஏறிக் கொள்ள, மற்றவர்கள் வேன் ஒன்றில் நிறைந்து கொண்டனர். வள்ளியூருக்குப் போக வேண்டும். ஐந்து மைல் தூரம்தான். காரை முன்னால் விட்டு, வேன் பின் தொடர்ந்து வந்தது. கும்மாளமும், சிரிப்புமாய் ஊர்ந்து போனது பயணம். அவை ரொம்ப நேரம் நீடிக்காது என்பதை அவர்கள் கொஞ்சமேனும் நினைத்திருக்க மாட்டார்கள்.

தார்ச் சாலையைக் கார் கடந்தபோது, குறுக்கு வெட்டாய் போன மண் சாலையிலிருந்து ஓடி வந்த லாரியொன்று, 'டமார்' என்று மோதி...

பொது மருத்துவமனை. ரொம்பத் தாமதத்திற்குப் பிறகுதான் சிறிது ஆசுவாசமாயிருந்தது. மூன்று உயிர்களுக்கும் பாதகம் இல்லை எனத் தெரிந்த ஆசுவாசம். ஆனால் அன்றிரவே டாக்டர் வந்து உதிர்த்த அதிரடி வார்த்தைகளில், எல்லோரும் அதிர்ச்சியடைந்து போயினர். செண்பகத்தின் இடதுகால் முட்டுக்குக் கீழே சிதைந்து போயிருப்பதால் இனிமேல் அவளால் சரிவர நடக்க முடியாது என்றார் டாக்டர்.

நொறுங்கிப் போனான் சந்தானம். அவனது அய்யாவும் அம்மாவும்தான். இனி அவளை வைத்து என்ன செய்ய முடியும் என்கிற திணறல். வயசான காலத்தில் தங்களின் வாழ்க்கைக்குத் துணையாய் இருப்பாளே என்று கணித்திருந்த அவர்களின் ஆசையில் இப்படியா இடி வந்து விழ வேண்டும் என்ற குமுறல்.

நான்கு மாதங்கள் ஒரு நாளைப் போலக் கடந்திருந்தன. சந்தானம் வீட்டுக்குத் திரும்பி வந்து மூன்று மாதங்களாகி இருந்தன. அவனுக்குக் கையில் சின்ன முறிவு மட்டுமே இருந்ததால், வீட்டிலிருந்தே மருத்துவம் பார்த்து குணமாகிப் போயிருந்தான். செண்பகம் வீட்டுக்கு வந்து மூன்று நாட்களே ஆகியிருந்தன. தாய் வீட்டுப் பராமரிப்பில் தன் வேதனையை விழுங்கிக் கொண்டிருந்தாள். உடல் வலியெல்லாம் குறைந்திருந்தது உண்மை. ஆனால் இடதுகாலின் பாதியளவு வெட்டி எறியப்பட்டு, மூட்டுக்கால் பொருத்தியிருந்ததன் அவலத்தில், தினம் தினம் செத்துக் கொண்டிருந்தாள் அவள். ஊன்றுகோல் இல்லாமல் அவளால் நடக்க முடியாது போயிருந்தது.

தன் கூட்டாளிகளுடன் காட்டுச் சோலிக்குப் போய்விட்டுத் திரும்பிக் கொண்டிருந்த சந்தானம், தன் வீட்டுக்கு உள்ளிருந்து ரொம்பவும் கெரவலான வார்த்தைகள் வெளிப்பட்டுக் கொண்டிருந்ததைக் கேட்க நேர்ந்ததும், சட்டென்று வெளித் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு செவி மடுக்கத் துவங்கினான்.

''அண்ணே ஒங்கப் புள்ளைக்கின்னு தானே அண்ணே எம்மவள வளத்திருந்தேன்... கல்யாணமும் முடிச்சுக் கொடுத்தேன். எப்படியிருந்தாலும் அவ அவனோடப் பொண்டாட்டிதானே அண்ணே... அவள வந்து ஏன்ண்ணே இன்னும் கூப்புடாம இருக்கீங்க? நொந்து நூலாப் போய்க், கிட்டிருக்கா எம்மவ.''

"அதுக்காக எம்மவன் வாழ்க்கையில மண்ணள்ளிப் போடச் சொல்லுதியா? காலு முறிஞ்சி போன அவள வச்சிக்கிட்டு நாங்க என்ன சந்தோஷத்தை அடைய முடியும் சொல்லு!"

"அப்படிச் சொல்லாதிங்கண்ணே... எம் மவனுக்கில்லாம ஒங்க மகனுக்கு இப்படி யொண்ணு ஆயிருந்தா நாங்க வேண்டா முன்னுப் போயிருவோமாண்ணே?"

"நீ சொல்றது எல்லாம் நடப்புக்கு ஒத்துக்குமா... வயசான காலத்துல எங்களுக் கொரு அனுசரணை வேணுமின்னுதானே நெனைப்போம். அவளே அப்படியிருந்தா, அவளுக்குப் பாடு பாக்கறது யாரு?"

"அவள நீங்க பெத்தப் பொண்ணு மாதிரி நெனச்சுப் பாருங்கண்ணே... சொல்லுங்க மதினி... அவளுக்கு வாழ்க்கை குடுங்க..."

"............"

அத்தையின் கெஞ்சுதலும், அய்யா அம்மையின் எசலிப்பும் கேட்டு இறுகிப் போய் அமர்ந்திருந்தான் சந்தானம். மாலை நேரத்திற்குரிய மந்தகாசம் கூடிக் கொண்டிருந்தது. சனங்களின் அணக்கம் தெரிந்தது. திடீரென அய்யா அம்மையின் குரல்களில் பிசிறு தட்டத் துவங்கியிருந்ததை உணர்ந்தான் இப்போது. அவர்களின் மனசுகளில் இரக்கம் சுரந்திருக்க வேண்டும் என்று யூகித்தான். என்னயிருந்தாலும் அய்யாவின் கூடப் பிறந்த பிறப்பாயிற்றே அத்தை.

"நீ சொல்றதெல்லாம் சரிதாம்மா. செண்பகத்தோட நெலைமையை நெனச்சா சங்கடமாகத்தான் இருக்கு. நம்மளா நெனைச்சு முடிச்சி வைக்கிற விசயமா இது? வாழப் போறது சந்தானமில்லியா? அவன் மனசில என்ன இருக்குதுன்னு நமக்குத் தெரிய வேண்டாமா?"

"நீங்க சொன்னா அவன் கேட்கவா மாட்டாண்ணே? எம் மவளுக்கு ஒரு வழி காட்டுங்கண்ணே!"

சந்தானத்துக்குச் சங்கடமாய்ப் போயிற்று. பெண்ணைப் பெற்ற வயிற்றின் குலைக் கொதிப்பு உறுத்திற்று. தனக்காகவே நியமிக்கப்பட்டு வளர்க்கப்பட்டவளுக்கு, தான் தொட்டுத் தாலிக் கட்டிக் கொண்டவளுக்கு நேர்ந்த அவலத்தில், தனக்கும் பங்குண்டு தானே என்று நினைப்போடிற்று அவனுக்கு. தான் ஏன் இதுவரை அதுபற்றிய சிந்தனை ஏதுமின்றி குத்துக் கல்லாட்டம் இருந்து விட்டோம் என்று குமைச்சலாக இருந்தது. தன்னைப் பற்றி என்ன நினைப்பாள் செண்பகம், என்று யோசனை பண்ணிப் பார்த்தான் அவன். திடீரென ஒரு தீர்மானத்துக்கு வந்தவனாய்த் தெருவை நோக்கி ஓட்டம் பிடித்தான். அதே கார் ஓட்டம்... காலை உதைத்துக் கொண்டு... டுர்ரென்று இரைந்து கொண்டு... காற்றில் கைகளை நீட்டி ஸ்டீரியங்கைப் பிடித்துச் சுழற்றிக் கொண்டு...



அன்று இரவோடு இரவாகவே செண்பகத்தை அழைத்துக் கொண்டு வந்தான் சந்தானம்.

தெருச் சந்தியில் அமர்ந்திருந்தவர்கள் பரிகாசமாய்ச் சிரித்துப் பேசிக் கொண்டது கேட்டது அவனுக்கு...

"பய ஓட்டமெல்லாம் எங்கனயோ ஓடிப் போயிருச்சி பாத்திங்களாலே!"

அவர்களிலும் ஒன்றிரண்டு இரக்கவான்கள் இருந்திருக்க வேண்டும். ஆதங்கமாய்ச் சில குரல்கள் வெளிப்பட்டன...

"அய்யோ பாவம்... அவன் வாழ்க்கை இப்படித்தான் முடியுமின்னு அவனென்னக் கனவா கண்டான்? இல்லன்னா அவ கண்டாளா? ஒரு கால் போனப் பொண்ணுக்கு வாழ்க்கை கொடுத்திருக்காம் பாரு, அவன்லா மனுசன்!"

இரு கக்கத்திலும் ஊன்றுகோல் தந்து இந்தி இந்தி நடந்து வந்தாள் செண்பகம். அவளின் நிதானத்துக்கு ஈடு தந்து அவளுடனே மெதுவாய் வந்து கொண்டிருந்தான் சந்தானம், கார் ஓட்டும் எண்ணமின்றி! ○

குறைந்த பட்சம் இலட்சங்களில் இருக்க வேண்டும் ஓராண்டுக்கான விளம்பர பட்ஜெட்! இப்படிப் பசையிருந்தால் மட்டுமே ஒரு நிறுவனத்தை க்ளையண்ட்டாகக் கருதும் பன்னாட்டு விளம்பர நிறுவனங்களுக்கு மத்தியில், நெத்தியடியாக வளர்ந்திருக்கிறது கோவையைத் தலைமையிடமாகக் கொண்ட சசி அட்வர்டைசிங்!

# "குனி தவறலாம்; குனிக்கோள் தவறக்கூடாது!"

ஒரு பழைய மிதிவண்டியின் துணையோடு இந்த நிறுவனத்திற்கு விதை ஊன்றிய ஆர். ஸ்வாமிநாதன் இன்று ஆலமரமாய் கிளை பரப்பி நிற்கும் தமது நிறுவனத்திற்காக, விமானத்தில் உலகம் சுற்றி வாடிக்கையாளர்களைச் சந்திக்கிறார். சைக்கிள் இருக்கையிலிருந்து விமான இருக்கைக்கு இடம் பெயர்ந்த இந்த வெற்றி எப்படிச் சாத்தியமானது...!

பல்லடம் அருகேயுள்ள செல்லக் கரிசல் கிராமத்திலிருந்து கோவைக்குக் குடிபெயர்ந்தது அந்தக் குடும்பம். அப்பா விவசாயக் கூலித் தொழிலாளி. அண்ணன், தம்பி, அக்காள், தங்கையென பாசத்திற்கும் வறுமைக்கும் பஞ்சமில்லாத குடும்பத்தில் ஸ்வாமிநாதனும் ஒரு பிள்ளை. ஆரம்பக் கல்வி, நகராட்சி துவக்கப் பள்ளியில். கே.பாக்யராஜ், சத்தியராஜ், மணிவண்ணன், ஆர். சுந்தர்ராஜன் போன்ற கனவுலகச் சாதனையாளர்கள் இவரது பள்ளிப் பருவத்துத் தோழர்கள். உயர்நிலைப் பள்ளிக் கல்வி முடிந்த கையோடு கல்லூரிக் கனவை வீட்டின் சூழ்நிலை பொசுக்கிப் போட்டது. குடும்பக் கஷ்டத்திற்கு நம்மால் முடிந்த எதையேனும் செய்தாகவேண்டும் என்று பதினெட்டு வயது ஸ்வாமிநாதன் துடிப்போடு தேடி அலைந்தபோது, சிந்தாமணி பொது விநியோக அங்காடியில் அரிசி நிறுக்கும் வேலை கிடைத்தது. "இதெல்லாம் ஒரு வேலையா?" என்று பலரும் கிண்டலடிக்க, இளமையின் சந்தோஷங்களுக்கு விடை கொடுத்துவிட்டு, 1965ல் அறுபது ரூபாய் மாத ஊதியத்தில் கிடைத்த அந்தப் பணியை ஏற்று, வறுமைப் பிணியைப் போக்க போராட்டம். அப்படியும் வருமானம் போதவில்லை. இந்த நேரத்தில் சிந்தாமணி அங்காடிகள் பற்றிய விளம்பரங்களைப் பத்திரிகைகளுக்குக் கொடுத்துவிட்டு வரும் ஒரு கூடுதல் பணியினை அலுவலகம் இவருக்கு ஒதுக்கியது. ஸ்வாமிநாதனிடம் கனிவான பேச்சு, இனிய அணுகுமுறை, வளைந்து கொடுக்காத நேர்மை போன்ற பண்புகளைப் பார்த்த பத்திரிகைத் துறையினர், "பிற துறை நிறுவனங்







களின் விளம்பரங்களையும் வாங்கி வாருங்கள், கமிஷன் தருகிறோம்" என்று புதிய சலுகைச் சாளரத்தை இவருக்குத் திறந்துவிட்டனர். உபரி வருமானத்திற்கு ஒரு வழி பிறந்து விட்ட சந்தோஷத்தில், தம்முடன் ஒட்டிக் கொண்டிருந்த பழைய மிதிவண்டியைத் தாமே பழுது நீக்கிவிட்டு நிமிர்ந்து பார்த்தார். கோவை மாநகர் மிரட்சி ஏற்படுத்துவதாய்த் தெரிந்தது. ஆனால் ஸ்வாமிநாதன் விடவில்லை.

கோவையெங்கும் மிதிவண்டியிலேயே தேடல் தொடங்குகிறது. சிறு வியாபாரிகள், கார்ப்பரேட் நிறுவனங்கள், தொழிற்சாலைகள் என பல படிகளில் ஏறி இறங்குகிறார். "விளம்பரம் கொடுத்துப் பழக்கமேயில்லை!" "ஏற்கெனவே வேறு ஒருத்தர் இருக்கார்" இப்படியான பதில்கள். விளம்பரங்கள் பிடித்தே தீருவது என்ற உத்வேகத்தில் அடிக்கடி கால்கள் வீங்கிப் போகுமளவுக்கு மிதிவண்டி மிதிப்பதும், ஏமாற்றத்தோடு திரும்பி வருவதும் தொடர்ந்த போதிலும், ஸ்வாமிநாதன் சோர்ந்துவிடவில்லை. சந்தித்த வாடிக்கையாளர்களையே சளைக்காமல் மறுபடி மறுபடி சந்தித்தார். விளைவு! அவரது விடாமுயற்சியைக் கண்டு வியந்து போய், அவருக்கு விளம்பரங்கள் தரத் துவங்கினார்கள். இதனிடையே மீடியா தொடர்பான வேறு துறைகளிலும் ஈடுபடும் எண்ணம் வர, 1976-ல் ஊர்வசி சபாவை என்ற கலைமன்றத்தைத் தொடங்கினார்.

இதில் நடத்திய நிகழ்ச்சிகளின் மூலம் லாபம் கிடைக்காவிட்டாலும், "ஊர்வசி ஸ்வாமிநாதன்" என்ற பிரபலம் வெகு விரைவிலேயே கிடைத்து விட்டது.

இந்த நற்பெயரைக் கொண்டு மேலும் ஏதாவது செய்ய வேண்டும் என்று ஸ்வாமிநாதனின் மனம் துடித்தது. தமது வாடகை வீட்டில், படுக்கை அறை, வரவேற்பறை என்று எல்லாமுமாக இருந்த, பத்துக்குப் பத்து அகலம் கொண்ட சிறு அறையில், சசி விளம்பர நிறுவனத்தை 1979ல் தொடங்கினார்.

## தட்டினேன் திறந்தது!

ஒரே ஒரு மேசையும், நாற்காலியும்தான் அங்கிருந்த அடிப்படை வசதிகள். தொலைபேசி இல்லை, ஆபீஸ் பையன் இல்லை! ஆனால் ஸ்வாமிநாதனிடம் வேகம் இருந்தது. தமது நிறுவனத்தை வேகமாக வளர்த்தெடுக்க விரும்பிய ஸ்வாமிநாதனுக்கு ரேஷன் கடை ஊழியர் பணி ஒரு தடையாகவே இருந்து வர, தயங்காமல் அந்த அரசு வேலையை உதறிவிட்டு வீட்டுக்கு நடந்தார். தமது விளம்பர நிறுவனம் வெளியே தெரிகிற மாதிரி ஏதேனும் செய்தாக வேண்டும் என்று துடித்த போது, சந்திரிகா சோப் நிறுவனத்திற்கு வானொலி விளம்பர ஜிங்கிள்கள் தயாரித்துத் தரும் வாய்ப்புக் கிடைத்தது. அவ்வளவுதான்! இதில் எப்படியும் பெயர் எடுத்து விட வேண்டும் என்று முடிவு செய்து, சென்னைக்கு வந்து இளம் இசைக்



"அந்த அமைச்சரை திடீரென மன்னர் பதவியிலிருந்து நீக்கி விட்டாரே... ஏன்?"

"வாஸ்துபடி தர்பார் மண்டபத்துலேயே அவர் இருக்கக் கூடாதாம்!

- தஞ்சை தாமு

---

கலைஞரைத் தேடி அலைந்தபோது, இலிப் என்ற இளைஞரின் திறமை தெரிய வந்தது. அவரைக் கொண்டு "சந்திரிகா சோப்பின் நறுமணம்! இயற்கை தரும் புதுமணம்!" என்ற ஜிங்கிளை மெட்டமைத்துத் திரும்பினார். இதற்காக அன்று அந்த இளைஞர் பெற்ற சன்மானம் ரூபாய் ஐந்நூறு. அந்த இசை இளைஞர்தான் இன்றைய இசைப் புயல் ஏ.ஆர். ரகுமான்!

சந்திரிகா சோப் விளம்பரம் வானொலியில் வலம் வந்த சில நாட்களிலேயே "யாரைய்யா இந்த சசி ஸ்வாமிநாதன்?" என்று தேட ஆரம்பித்தார்கள். 'சசி' வளர ஆரம்பித்ததும், முதல் கார்ப்பரேட் வாடிக்கையாளராக பிரிமியர் மில்ஸ் வந்து சேர்ந்தது.

இன்று கோவை தவிர, சென்னை, டெல்லி, மும்பை, ஹைதராபாத், கொச்சி, பெங்களூர், மதுரை, சேலம், ஈரோடு, திருப்பூர் போன்ற இந்தியாவின் மிக முக்கியமான நகரங்களில், கிளைகளோடு உச்சத்திலிருக்கும் சசி விளம்பர நிறுவனத்திற்கு இடையில் சோதனைகளே வரவில்லையா?...

ஆபிஸ் பையன் முதல் பொது மேலாளர் வரை அனைத்துப் பணியாளர்களும், 'சசி'யிலிருந்து, ஒரே நேரத்தில் திட்டமிட்டு குழுவாக விலகிச் சென்று வேறு நிறுவனத்தைத் தொடங்கினர். அப்போது தனித்துவிடப்பட்ட ஸ்வாமிநாதன், புறப்பட்ட இடத்துக்கே திரும்பித் தள்ளப்பட்ட சூழ்நிலை! இந்தியன் நியூஸ் பேப்பர் சொசைட்டியில் நிறுவனம் பதிவு பெற்று விட்ட பிறகு, 1986ல் ஸ்வாமிநாதன் சந்தித்த மிகப்பெரிய சவால்! ஆனால் கொஞ்சமும் அலட்டிக் கொள்ளாமல் ஒன்மேன் ஆர்மியாக செயல்பட்டே ஸ்வாமிநாதன், இந்தியாவின் பட்டியலிடப்பட்ட நூறு விளம்பர நிறுவனங்களில், 'சசி' இன்று முப்பத்தியோராவது இடத்தில் இடம்பெற உழைத்திருக்கிறார்.

கடல் கடந்தும் வாடிக்கையாளர்களைக் கொண்டிருக்கும் சசியின் வெற்றிக்கு ஸ்வாமிநாதனின் உழைப்பு மட்டும்தான் காரணமா...?

"புதிய வாடிக்கையாளர்கள் வருகையின் போது, நமக்குத்தான் வருவாய் ஆயிற்றே என்று கண்ணை மூடிக் கொண்டு அவர்களை வளைத்துப் போடுவதில்லை. முதலில் அவர்களின் தொழில் உயர்வுக்கான வழிமுறைகளையும் ஆலோசனைகளையும் தருகிறோம். அதன் பின்னரே அவர்களை வாடிக்கையாளராக மாற்றிக் கொள்கிறோம். வாடிக்கையாளர்களும், எங்களது நிழலில் பாதுகாப்பாக இருப்பதை உணர்கிறார்கள். இதனால்தான் வேறு விளம்பர நிறுவனங்களைத் தேடிச் செல்வதில்லை" என்று வெற்றியின் ரகசியத்தைச் சொல்லும் ஸ்வாமிநாதன், நேரம் இல்லை, பிஸி என்று காரணம் காட்டி அலுவலகத்திலேயே மூழ்விவிடுவதில்லையாம். "மனைவி, குழந்தைகள், நண்பர்கள் என எல்லாத் தரப்பினரோடும் நேரத்தைச் செலவிடத் தவறுவதில்லை" எனும் இவர் தொழில் முனைவோருக்குத் தரும் அறிவுரை இதுதான்:

"பணம், சப்போர்ட், மார்க்கெட் இருந்தால் மட்டுமே தொழில் தொடங்க முடியும் என்று நினைப்பது தவறு. கவனத்தையும் மூலதனத்தையும் மனம் போன போக்கில் சிதறவிடக் கூடாது. தொழிலை லாபகரமாக நடத்துவது என்பது 'செஸ்' போட்டி போன்றது. எதிராளியின் நோக்கத்தையும், பலத்தையும், சரியாக மதிப்பீடு செய்து கொள்ள வேண்டும். எத்தகைய சவால்கள், சோதனைகளையும் தாங்குவேன் என்ற உறுதியோடு, வெற்றி என்ற இலக்கை நோக்கி எண்ணத்தை ஒருமுகப்படுத்த வேண்டும். குறி தவறலாம். குறிக்கோள் தவறக் கூடாது" என்கிறார் சசி அண்ட் சசி நிறுவனர் ஆர். ஸ்வாமிநாதன்!

— ஆர்.சி.ஜெயந்தன்

அன்று மாலை பள்ளி விட்டதும் குட்டி நேராக வீட்டுக்குப் போகாமல், வழியிலேயே ஜக்குவுக்காகக் காத்திருந்தாள். அவனுக்கு, அவனுடன் பேசித் தீர்ப்பதற்கு நிறைய விஷயங்கள் இருந்தன. அவற்றுள் முதன்மையானது, அவன் அவள் பேச்சுக் காய் விட்டு வெளியில் பழம் போல் நடிக்கிறானா என்று கேட்க வேண்டியது.

மகாபலிபுரம் போய்வந்ததிலிருந்தே அவன் சுத்தமாகச் சரியில்லை என்பது அவள் தீர்மானம். எப்போதும் போல உற்சாகமாக அவன் பேசுவதில்லை. புதிய புதிய கண்டுபிடிப்புகள் ஏதும் செய்ததாகவும் தெரியவில்லை. எங்கிருந்தோ வந்து அவனுடன் ஒட்டிக் கொண்ட அந்தக் குரங்கு, எப்போது பார்த்தாலும் அவனுடன் கூடவே சுற்றிச் சுற்றி வருகிறது. அவன் பள்ளிக்குப் போகும்போதும் வரும்போதும், அவன் கூடவே அதுவும் போகிறது, வருகிறது. பள்ளி வாசலிலேயே அவன் அதற்கு விடை கொடுத்து அனுப்பி விட்டாலும், மறக்காமல் சாயங்காலம் சரியாகப் பள்ளி விடும் நேரத்தில் அது வந்து நின்று விடுகிறது.

ஜீவராசிகளிடம் அன்பாயிருப்பதில்

# மெல்லினம்

பிழை இல்லைதான். அதேசமயம் ஒரு புதிய சிநேகிதத்துக்காகப் பழகிய அத்தனை பேரையும் உதாசீனம் செய்வதாவது?

ஜெய்ப்பூரிலிருந்து யாரோ ஒரு வியாபாரி போன ஞாயிற்றுக்கிழமை மூட்டையாகப் புடைவைகளை எடுத்துக் கொண்டு விற்க வந்திருந்தான். ஜக்குவின் அம்மா அவனை அழைத்து வாசலில் கடை பரப்பிவிட்டு, அக்கம்பக்கத்து வீடுகளுக்கும் தகவல் சொல்லியனுப்பியிருந்தாள்.

புதிய புடைவைகள் ஜெய்ப்பூரிலிருந்து வந்திருக்கின்றன. வாங்குவது அடுத்தகட்டம். ஆனால் விரித்துப் பார்த்து மகிழத் தடையேதும் இல்லையே? குட்டியின் அம்மா அவசரமாக முகத்தை முந்தானையில் துடைத்துக்கொண்டு, 'தோ வர்ரேன்' என்று கிளம்பியபோது குட்டியும்கூட ஒட்டிக் கொண்டாள்.

ஜக்குவின் வீட்டு வாசலில் கொழுக்கட்டைகள் முன்பாகப் பிள்ளையார் மாதிரி, அந்தப் புடைவை வியாபாரி அமர்ந்திருந்தான். சுற்றிலும் பக்தர்களாக ஜக்குவின் அம்மா, பக்கத்து வீட்டுக் கனகா அக்கா, மூன்றாவது வீடு ரஞ்சனாம்மா, கோட்டை வீட்டுப் பாட்டி, சுலோகம் சுந்தராம்பா, கிரைண்டர் கமலா என்று எல்லாரும் சூழ்ந்திருந்தார்கள். ஏழெட்டுப் பேர் இருப்பார்கள். எப்படியும் நாலைந்து புடைவைகளுக்குக் குறையாமல் விற்கும் என்று வியாபாரி ஒரு நூறு புடைவைகளை விரித்துப் போட்டுக் கொண்டிருந்தான்.

"ஆண்ட்டி, ஜக்கு எங்கே?" குட்டி கேட்டாள்.

"கொல்லைல இருக்கானா பாரு" என்று அவன் அம்மா சொல்லும் போதும் அவள் பார்வை



# 14

புடைவைகளின் மீதே இருந்தது.

ஜக்கு தோட்டத்தில்தான் இருந்தான். போன மாதம் அவன் நட்டிருந்த செம்பருத்திச் செடி அங்கே வாடிக் கொண்டிருந்ததை, அப்போதுதான் கவனித்தவன் மாதிரி அதற்கு நீருற்றிக் கொண்டிருந்தான். தோளின் மேலே அந்தக் குரங்கு!

"திஸ் இஸ் டு பேட் ஜக்கு" என்று குட்டி சொன்னாள்.

"பாரு, உன் வெங்கடாஜலபதி எப்படி ஏக்கமா பாக்கறது? ஒரு நாளாச்சும் அதை இப்படி உன் தோள்மேல தூக்கி வெச்சிட்டிருந்திருக்கியா? நீ கூப்பிடாமலேயே எவ்ளோ பட்டர்ஃப்ளைஸ் உன்கிட்ட வரும் முன்னெல்லாம்? இப்ப இந்தக் குரங்கைப் பார்த்து எல்லாம் பயந்து எங்கியோ போயிடுச்சே? எனக்கே பயமா இருக்கு. மூஞ்சியப் பாரு. உர்ருன்னு எப்பப்பாரு பிராண்ட வர மாதிரி! நீ எப்படி இதைக் கொஞ்சிண்டிருக்கே? பயமா இல்லே?"

"வா குட்டி" என்றான் ஜக்கு. "இதை வெறுக்காதே குட்டி. இது நல்ல குரங்கு. ஆஞ்சநேயர் அம்சம். காட் ஒன்லி செண்ட் இட்!" என்றான் ஜக்கு.

"பொய்... பொய்" என்று கத்தினாள் குட்டி.

"எங்கிட்ட பேசக்கூடாது, வெங்கடாஜலபதி பேச்சுகூட காய் விடுன்னு காட் சொல்லுவாரா? நான் நம்பமாட்டேன்!"

அவன் தன் தோளின்மீது ஏறி உட்கார்ந்திருந்த அந்தக் குரங்கை இறக்கிவிட்டு, உள்ளே போ என்று சைகை காட்டினான். பிறகு துணிக்கல்லின் அடியில் அவனையே முறைத்துப் பார்த்தவண்ணம் அமர்ந்திருந்த வெங்கடாஜலபதியை நோக்கிப் போய், அருகே அமர்ந்து அதன் நெற்றியை நீவிக் கொடுத்தான்.

"நான் ஏன் இதும் பேச்சு காய் விடணும்? சமர்த்தா இருந்தா எப்பவும் பழம்தான்" என்று சொன்னான்.

"அப்போ நான் சமத்தா இல்லியா?" என்கூட ஏன் இப்பல்லாம் பேசறதில்லே? பிராமிஸா பழம்தான்னு சொல்லு" குட்டிக்கு அழுகையே வந்துவிடும் போலிருந்தது.

"சிச்சி" என்றான் ஜக்கு. "நான் ஏன் உன் பேச்சு காய் விடணும்? அதெல்லாம் இல்லே. நீ என் பெஸ்ட் ஃப்ரெண்ட்."

"அப்படின்னா சொல்லு, ஏன் ஒரு மாதிரி இருக்கே கொஞ்ச நாளா? உடம்புக்கு என்னமாச்சும் சரியில்லையா?"

"இல்லியே? சரியாத்தான் இருக்கேன். ஏன் எல்லாரும் இப்படியே கேக்கறீங்க?" அவனுக்கே அது கலவரமூட்டும் விதத்தில்தான் இருந்தது. ஒருத்தர் பாக்கியில்லை. 'என்ன ஆச்சு? என்ன ஆச்சு?' கேட்காதவர்களே இல்லை. தன் முகத்தில் அப்படி என்னதான் எழுதி ஒட்டியிருக்கிறது? யாராவது ஒருத்தரிடம் கொஞ்ச நேரம் மனம் விட்டுப் பேசினால் எல்லாமே சரியாகிவிடக் கூடும் என்று அவனுக்குப் பட்டது. ஆனால் யாரிடம்



பா.ராகவன்

போய் என்ன பேசுவது? தாத்தா, அம்மா, பாட்டி, வகுப்புத் தோழர்கள், இந்தக் குட்டி எல்லாரிடமுமே ஒரெல்லைக்குமேல் எதையும் பேச வேண்டாம் என்று எப்போதும் உள் மனம் எச்சரித்துக் கொண்டே இருக்கிறது. குட்டியிடம் மட்டுமாவது கொஞ்சம் சொல் லட்டுமா என்று குரங்கிடம் கேட்டபோது, "எதையாவது சொல்லணும். அவ்ளோதானே? கொஞ்சம் மாத்தி, வேற மாதிரி சொல்லு. கொஞ்சம் பாரம் குறையும்" என்று அது மாற்று உபாயம் சொன்னது. அதையே வெங்கடாஜலபதியிடமும் அவன் கேட்டான்.

"எதுக்குச் சொல்லணும். நீ படற கஷ் டத்தை அவனும் படணுமான்ன? பேசாம இரு" என்று ஒரு வாத்தியார் தொனியில் அது கட்டளையிட்டது அவனுக்குப் பிடிக்க வில்லை.

"ஹூம் பார். நீ இப்படிப் பேசினா உங் கிட்ட எவன் வந்து அன்பா இருப்பான். எப்பப் பாரு ரங்கம்பாட்டி மாதிரியே வடுக்கு வடுக்குன்னு கடிப்பேச்சு பேசறே. எவ்ளோ கஷ்டப்படறேன்? ஆறுதலா பேசணும்னே தோணலையே உனக்கு?" என்று அதனிடம் சொன்னான் ஜக்கு.

"நீயா வரவழைச்சுக்கிட்ட கஷ்டத்துக்கு வேற யார் ஆறுதல் தர முடியும் ஜக்கு? எப்படி வரவழைச்சிக்கிட்டியோ, அப்படியே தூக்கி வெளில போட்டுட்டு பழையபடி படிப்புல ஆர்வம் காட்டு. என்னோட விளையாடு. பாரு, என்னை நீ பத்து நாளா குளிப்பாட்டவே இல்ல. எனக்கே கப்படிக்குது" என்றது அது.

"ஹூம். அப்படியே இட" என்று அப் போது எழுந்து போனான். ஆனால் குட்டியை அப்படி முற்றிலும் புறக்கணித்துவிட்டுப் போய் விட முடியாதே. மேலும் கொஞ்சம் வேறுமாதிரி நடந்து கொண்டாலும் வெங் கடாஜலபதி சகித்துக் கொள்ளும். குட்டி அழ ஆரம்பித்துவிடுவாள். அது வேறு பிரச்னை.

"ஒரு ப்ராப்ளம் குட்டி" என்றான் ஜக்கு.

"என்னது?"

"எனக்கில்லே. எங்கப்பாவுக்கு. அதான் நான் வேடா இருக்கேன். ஆனா இதை நீ என்மேல் ப்ராமிஸா யார்கிட்டயும் சொல்லக் கூடாது."

"என்ன ப்ராப்ளம்? உடம்பு சரியில் லையா? கேன்சரா?" என்றாள் குட்டி.

"ச்சீ! சினிமா பார்த்துட்டுப் பேசாதே. இது வேற. இந்த ஊர்ல முன்னாடி ஒரு காலத் துலே, நம்ம மேத்யு டாக்டர் கிளினிக்குப் பின் னாடி இருக்கற சந்துல ஒரு பொம்மனாட்டி இருந்திருக்கா. இப்ப அவ இல்லை. செத்துப் போயிட்டா. ஆனா ஆவியா வந்து பயமுறுத் திண்டிருக்கா. பெரிய பல்லெல்லாம் இல்லை. மூஞ்சி அழகாத்தான் இருக்கு. ஆனா சிரிப்பு ரொம்ப கோரம். சகிக்கலே. டெய்லி ராத்திரி பன்னெண்டு மணிக்கு வயலட் புடைவை கட் டிண்டு வந்து எங்கப்பாவை பயமுறுத்தப் பாக்குது. நான்தான் கஷ்டப்பட்டு அதைத் தடுத்து, பிடிச்சி வெச்சுத் திருப்பி அனுப்பிண் டிருக்கேன். இல்லாட்டி எங்கப்பாவை அது சாப்டுடும்."

"வாட்? ஆவி, ஆளைச் சாப்டுமா?"

"ஆமா. எங்க பாட்டி எப்பவாச்சும் திட்டி நீ பார்த்திருக்கியா? நர மாமிச பட்சிணின்னு திட்டுவாளே?"

"ஆமா?"

"அதான் இது. நர மாமிசம்னா மனுஷங் களைச் சாப்டறதுன்னு அர்த்தம்."

"நான்வெஜிடேரியன் ஆவியா?"

"ஆமா. ஆனா ரொம்ப கோரம். அப் படியே உயிரோட சாப்டுடும். டெய்லி நடு ராத்திரி எங்க வீட்டு வாசல்ல வந்து நின்

"கூட்டத்தில் ஏன் கூச்சல், குழப்பம்?"

"ஒரு குட்டிக் கதை கூடச் சொல் லாமல் பேச்சை முடித்துக் கொண் டாராம்..."

- எஸ். மோகன்

னுடுது அது. நான் கரெக்டா முழிச்சிண் டிருந்து எழுந்து போய், அதை மிரட்டித் திருப்பி அனுப்பிண்டிருக்கேன்."

"ஐயோ... உன்னால எப்படி முடியும்? பயமா இல்லே?"

இப்போது அவன் கொஞ்சம் யோசித் தான். பிறகு, "ம்ம்.. பயம்தான். ஆனா மனசுக்குள்ள மந்திரம் போட்டுண்டுடுவேன்."

"என்ன மந்திரம்?"

"எவ்ளவோ இருக்கு. எங்க பாட்டி சுதர் சன சுலோகம் சொல்லிக் குடுத்திருக்கா. அதைச் சொன்னா ஆவியால ஒண்ணும் பண்ண முடியாது. அப்புறம் கருடதண்டகம் தெரியும்."

"கிரேட்" என்றாள் குட்டி. "அப்புறம்?"

"உள்ள வந்தேன்னா, கையை காலை உடைச்சுடுவேன். போ வெளிலன்னு மிரட்டி அனுப்பி வெப்பேன். வேற என்ன முடியும் என்னால? தினம் இப்படியே ராத்திரில தூங் கறது இல்லை. அதனால டயர்டா இருக்கு. நீ என்னடான்னா, ஏன் பேசலை, ஏன் பேச லைன்னு பிராணனை வாங்கறே..."

"சரிடா" என்றாள் குட்டி.

''ஐயோ, கதை விடறான் குட்டி, நீ நம்பாதே. இவன் கொஞ்சம் கொஞ்சமா கெட்டுப் போயிண்டே இருக்கான்'' என்றது வெங்கடாஜலபதி.

குட்டிக்கு அதன் குரைப்பு புரியவில்லை. ஜக்கு அதன் பக்கம் திரும்பி முறைத்தான். "நீ இங்க இருக்கணுமா வேணாமா? அதைச் சொல்லு முதல்ல. உன்னை கார்ப்பரேஷன் காரன்கிட்ட பிடிச்சிக் குடுத்துடட்டுமா? ம்?''

அது சட்டென்று வாயை மூடிக் கொண்டு திரும்பிப் படுத்துக் கொண்டது.

''அதை ஏண்டா இட்டறே? ஆவி வரும் போது அது தூங்கிப் போயிடறதா?''



"ஆமா" என்று சொல்லி வைத்தான் ஜக்கு.

அவள் சற்று நேரம் மிகவும் மௌனம் காத்தாள். ஆக, ஜக்குவின் பிரச்னை என்ன வென்று ஒருமாதிரி புரிந்துவிட்டது. ரொம்பப் பெரிய பிரச்னைதான். யாரால் இதையெல் லாம் சமாளிக்க முடியும்? எத்தனை பயங் கரமான பிரச்னை! நள்ளிரவில் வரும் ஆவி! அதுவும் மேட்டுத்தெருவில் வசித்து இறந்த ஒரு பெண்ணின் ஆவி. அது என்னதுக்காக ஜக்குவின் அப்பாவைச் சாப்பிட வருகிறது? ஊரில் வேறு ஆளே கிடைக்கவில்லையா அதற்கு? ச்சே, ஒரு பெண்ணாக இருந்து ஆவி யானவள் எப்படி இப்படியொரு நரமாமிச பட்சிணியாக மாறிவிட முடியும்? கேட் பதற்கே நாராசமாக இருக்கிறது. பயங்கரமாக இருக்கிறது. ஜக்கு மாதிரி மந்திரசக்தி படைத்த பையன்களால் வேண்டுமானால் வாசலிலேயே தடுத்து நிறுத்தித் திருப்பி அனுப்ப முடியும். மற்றவர்கள் என்றால் என்ன செய்துவிட முடியும்? தவிர, ஜக்குதான் எத்தனை நாளைக்கு தினசரி தூங்காமல் வாசலில் நின்று காவல் காக்க முடியும்? என்றா வது ரொம்ப டயர்டாகி தூங்கித்தானே ஆக வேண்டும்? அப்போது அந்தப் பெண்ணின் ஆவி உள்ளே நுழைந்துவிட்டால்? ஐயோ!

"என்ன யோசிக்கறே?'' என்றான் ஜக்கு.

"ஒண்ணுமில்லேடா. ஒரே ஒரு டவுட்."

"கேளு."

"நீ சொல்றதையெல்லாம் நான் நம்பறேன். கரெக்டாத்தான் நீ சொல்லுவேன்னு எனக்குத் தெரியும். ஆனா சொல்லு, அந்த ஆவி ஏன் ஊர்ல இருக்கற மத்தவங்களை யெல்லாம் விட்டுட்டு உங்கப்பா வைச் சாப்பட வரணும்? உங் கப்பாவுக்கும் அதுக்கும் என்ன சம்பந்தம்?''

தூக்கி வாரிப் போட்டது ஜக்கு வுக்கு. குட்டி இப் படியொரு சரியான கேள்வியைக் கேட்டு விடுவாள் என்று அவன் எதிர் பார்த்திருக்க வில்லை. கேள்வி களற்று இருக்கும் வரை மட்டுமே நண்பர் கள்கூட சௌகரியமாக இருக்கிறார்கள். குட்டி ஒரு கேள்வி கேட்டிருக்கிறான். அவ சியம் பதில் சொல்லித்தானே ஆக வேண்டும்? ஆனால் ஓரிரு வினாடிகள் தாம திப்பதில் பெரிய பிழை ஏதும் வந்துவிடப் போவதில்லை.

அவன் உள்ளே பார்த்து, "விக்கி..." என்று குரல் கொடுத்தான்.

"அது யாரு?"

எங்கிருந்தோ அந்தக் குரங்கு பாய்ந்தோடி வந்து அவன் தோளில் ஏறி உட்கார்ந்து கொண்டதும், குட்டி பயந்து இரண்டடி பின்னால் போனாள்.

"இதுதான். இதுக்குத்தான் அந்தப் பேர் வெச்சிருக்கேன்'' என்று ஜக்கு சொன்னான்.

"சரி. இப்ப சொல்லு, நீ என்ன கேட்டே?''

''அந்த ஆவி ஏன் உங்கப்பாவை மட்டும் தேடி வரணும்? ஊர்ல அதுக்கு வேற ஆளே கிடைக்கலியான்னு கேட்டேன்."

"காரணம் இருக்கு. கிட்டவா சொல்றேன்."

அவள் ஆர்வமுடன் அவனருகே நெருங்கி வந்து அமர்ந்துகொண்டாள். (தொடரும்)

யுகபாரதி

# அரைச் சொல்

பேச்சுக்கு இடையிடையே
ராசா என்கிற
சிவத்தம்பி அய்யாவை
நிரம்பப் பிடிக்கும்

ஒருவருக்காவது
ராசாவாயிருப்பதில்
ரகசிய பெருமை
ஒவ்வொருவருக்கும்.

இருபது வருடமாய்
நண்பனாயிருந்தும்
ராஜராஜனை

கட்டையனன்றோ
கதிரேசன்
தம்பியென்றோதான்
கூப்பிடுகிறேன்

பெரிய மனது வேண்டும்
பிறரை
ராசாவாக்குவதற்கு

# அன்னம் கொடுக்கும் ஸ்ரீ அன்னபூரணி க்ஷேத்ரமான

# காசியில் தீபாவளி அமாவாசை நாளில்

# கங்கையில் தீபமேற்றி அன்னதானம் செய்வோம் வாருங்கள் !

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் புண்ணிய க்ஷேத்ரமான காசியில் தீபாவளி அமாவாசை நாளில் அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்கேற்கலாம்...

**"ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" 5 ஆண்டுகளுக்கு மேலாக தொடர்ந்து நடத்தும் அன்னதான சேவை !**

**பேரன்புடையீர் ! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ அன்னபூரணி அன்னை தீபாவளித் திருநாளில் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.**

கங்கைக்கு நிகரான நீருமில்லை. காசிக்கு நிகரான ஊருமில்லை என்பது **இந்துக்களின் திருமந்திரம்**. பிரபஞ்சம் முழுமைக்கும் உணவு படைக்கும் தாயாக விளங்கும் **ஸ்ரீ அன்னபூரணி** மாதா கொலுவீற்றிருக்கும் புண்ணிய ஸ்தலமான காசியில் **தீபாவளி அமாவாசை** அன்று கங்கா மாதாவுக்கு மலர் மாலை அணிவித்து, கங்கையில் தீபமேற்றி, **அன்னதானம்** செய்யப்படுகிறது என்பதை தெரிவித்துக்கொள்கிறோம். அன்பர்கள் அனைவராலும் காசியில் கங்கைக்கு தீபமேற்றி அன்னதானமிட முடியும் என்ற இறை சிந்தனையோடு **"ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்"** என்ற தனி அமைப்பின் மூலம் காசியில் அன்னதானம் நடைபெறுகிறது. இந்த அன்னதான இறை பணிக்கு தங்களால் இயன்ற நன்கொடையை வழங்கி இறையருளால் காசியில் ஏழைகளுக்கும், அடியார்களுக்கும், அன்னம் அளிப்பதில் நாமும் ஓரளவேனும் பங்கு கொண்டோம் என்ற ஆத்ம திருப்தியை அடைய இது ஒரு சிறந்த வாய்ப்பாகும். **தீபாவளி அமாவாசையன்று அன்னாபிஷேகம், லட்டு தேர், அன்னக்கூடு** போன்றவை காசியில் மிக விசேஷமாக நடத்தப்படுகிறது. ஸ்ரீ அன்னபூரணி அருளால் வாழ்நாள் முழுவதும் உணவு தட்டுப்பாடின்றி ஆரோக்கியமாக வாழ அனைவரையும் தீபாவளித் திருநாளில் **"ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்"** மூலம் அன்னதானம் செய்ய அன்புடன் அழைக்கின்றோம்.

**தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.**

- ரூ.500- அனுப்பும் அன்பர்களுக்கு, **ஆன்மீகம் மாத இதழ்** ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000- அனுப்பும் அன்பர்களுக்கு, **ஆன்மீகம் மாத இதழ்** ஒரு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5000- அனுப்பும் அன்பர்களுக்கு, **ஆன்மீகம் மாத இதழ்** ஆறு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.

காசி, கயா, பிரயாகை (திரிவேணி சங்கமம்) ஆகிய இம்மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் புண்ணிய காரியங்கள், பித்ரு காரியங்கள், பிண்டம் போடுதல், தர்மங்கள், ச்ரார்த்தம், திவசம், தர்ப்பணம் போன்றவற்றை அவரவர் விருப்பப்படி அன்னதானக் கைங்கர்ய அன்பர்களுக்கு செய்து தரப்படும்.

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு பிண்டப்பிரதானம் மற்றும் தர்ப்பணம் காசியிலும், கயாவிலும், பிரயாகையிலும் நேரில் சென்று செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு **"ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்"** மூலம் செய்யப்படுகிறது. **பித்ருக்களுக்கு பிண்டப்பிரதானம் செய்ய காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று பித்ரு க்ஷேத்ரங்களுக்கும் தனித்தனியாக ரூபாய் 1000-அனுப்பும் போது யாருக்கு ச்ரார்த்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம். பிண்டப்பிரதானத்திற்காக ரூ. 5000- அனுப்பும் அன்பர்கள் சார்பாக தொடர்ந்து வருடத்திற்கு ஒருமுறை ஆறு ஆண்டுகளுக்கு மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் எந்த இடத்தில் யாருக்கு ச்ரார்த்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவர்களுக்கு ச்ரார்த்தம் செய்யப்படும். பித்ரு காரியங்களுக்கு பணம் அனுப்பும் அன்பர்களுக்கு காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று இடங்களிலும் உள்ள தெய்வீக ஆலமரமான 'அக்ஷய வடத்தின்' படமும், கயாவில் உள்ள விஷ்ணு பாதத்தின் படமும் அனுப்பி வைக்கப்படும். நம் வீட்டில் செய்யும் ச்ரார்த்தத்திற்கு தாய், தந்தையர், உறவினர்கள் மட்டுமே பங்குகொள்ள வாய்ப்புண்டு. மூன்று பித்ரு க்ஷேத்ரங்களில் ஏதாவது ஒரு அக்ஷய வடத்தில் (ஆலமரம்) பிண்டப்பிரதானம் செய்தால் ஏழு தலைமுறைக்கு பித்ருக்கள் கூட்டமே முக்தி அடைவதுடன் பித்ரு தோஷங்களும் நிவர்த்தியாகும்.**

அன்னதானத்திற்கு நன்கொடை அனுப்புவோர் தங்களுடைய வேண்டுதலையும் பிரார்த்தனையையும் தெரிவித்தால் அதற்கேற்ப நீங்கள் விரும்பும் அமாவாசை தினத்தில் காசியில் அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ. 1000, ரூ. 5000 அனுப்பும் அன்பர்களுக்கு கங்கா தீர்த்தத்துடன் கூடிய [illegible] ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் [illegible] ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் [illegible] அனுப்பி வைக்கப்படும்.

ரூ.5000 - அனுப்பும் அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு மாதமும் அமாவாசை தினத்தில் காசியில் அன்னதானமும், கங்கையில் தீபமேற்றும் பணியும் செய்து ஆறு வருடங்கள் ஆன்மீகம் மாத இதழ் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் மங்களம் பெற வேண்டும் என்ற எண்ணத்துடன் ரூ. 5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத்கீதை புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

அன்னதான சேவையிலும், கங்கைக்கு தீபமேற்றும் பணியிலும் ஈடுபட விரும்பும் அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque / D. D/ M. O. மூலம் Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4 என்ற பெயருக்கு எடுத்து கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி கங்கா மாதாவின் புண்ணியமும், அன்னபூரணி அன்னையின் அருளையும் பெறுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.**

Cheque / D. D/ M. O. அனுப்ப வேண்டிய முகவரி

## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**
68, Nadu Street,(Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.
**TEL : 2495 9302, E-mail:siva siva @ vsnl.net**

"காசியில் தீபாவளி அமாவாசையன்று கங்கா மாதாவுக்கு தீபமேற்றி நிறைந்த ஆயுளையும் குன்றாத ஆரோக்கியத்தையும் பெறுவோம் "



# தலைகீழாய் நின்றால் தெரிந்து கொள்ளலாம்!

'ஹ்யூமர் கிளப்' (ஆங்கிலம் என்னுடையதல்ல; அவர்களுடையது) சமீபத்தில் இருபதாவது ஆண்டு நிறைவைக் கொண்டாடியிருக்கிறது. சிரிப்பாய்ச் சிரிக்காமல், பிறரைச் சிரிக்க வைக்கும் சீரிய மன்றத்தை வாழ்த்துவோம். பிறந்த நாளைத் தொடர்ந்த கூட்டம் சங்கீதச் சிரிப்பு நிகழ்ச்சி. சிறப்புப் பேச்சாளர்களுள் இருவர் ஏற்கெனவே அம் மன்றத்தில், அதே தலைப்புக்கு உரையாற்றியவர்கள் என்ற போதும் ஜிலுஜிலுப்பாக இருந்தது. ஆனால், 'தூக்கிச் சாப்பிட்ட' இரண்டு சிரிப்புகளைச் சொன்னவர் என்னவோ ஹ்யூமர் கிளப் சேகரன்தான்:



• சேகரன்

கணவனும் மனைவியும் மற்றொரு தம்பதியை வியந்தார்கள். வயது முதிர்ந்த பின்னரும், கிழவர் கிழவியை கண்ணே மணியே என்று அழைத்துக் கொஞ்சிக் கொண்டிருந்தாரே! 'இளமை உணர்வின் ரகசியமென்ன' என்று முதியவரிடம் கேட்டபோது அவர் சொன்னார்: "அச்சோ! அதெல்லாம் ஒன்றுமில்லை... ஒரு பத்து வருஷமாச்சு அவள் பெயர் மறந்து போய்...!"

சான்ட்ரோ வண்டிகளில் இப்போதெல்லாம் காணப்படும் ஒட்டு வாசகம், 'வாகனத்துக்குள்ளே ஒரு பேரறிஞர் அமர்ந்திருக்கிறார்' என்று பறை சாற்றுகிறதல்லவா...? அந்தப் பேரறிஞர் எப்படிப்பட்டவர் என்கிற சந்தேகம் சேகரனுக்கு வந்துவிட்டதாம். தமது இரு சக்கர வாகனத்தில் விரைந்து, ஒரு சான்ட்ரோவை முந்தி, சிவப்பு விளக்குக்காக வாகனங்கள் நின்ற தருணத்தில், கண்ணாடியைத் தட்டி விசாரித்திருக்கிறார்.

கண்ணாடியை இறக்கியவரின் பக்கத்தில் ஒரு பெரிய ஜாதி நாய் சமர்த்தாக உட்கார்ந்திருக்க, "பேரறிஞர் யார் என்று பார்க்கத்தான் கண்ணாடியைத் தட்டினேன்..." என்றாராம் சேகரன். சான்ட்ரோவை ஓட்டிக் கொண்டிருந்தவர் 'வள்'ளென்று விழவும், புரிந்து போயிற்று உள்ளேயிருந்த இருவரில் யார் பேரறிஞர் என்று!

இன்னொரு கூட்டம்... இது கொஞ்சம் கண் கலங்க வைத்துவிட்டது - துக்கத்தினால் அல்ல; மகிழ்ச்சியில்,

• குருஜி ராகவன் பவழ விழா





நெகிழ்ச்சியில்...

'தலம்தோறும் தமிழ்க்கடவுள்' என்ற தலைப்பில் திருப்புகழ் மணம் கமழும் தொடரை கல்கியில் எழுதிய குருஜி ராகவனின் பவழ விழா. சென்னை, ராஜா அண்ணாமலைபுரம் சிருங்கேரி மண்டபத்தில் கூட்டமான கூட்டம். குழு குழுவாக திருப்புகழ் பாடி, தொடர் வழிபாடு நடத்தினர். ஒழுங்கு, கட்டுப்பாடு, ஆழ்ந்த பக்தி, ஆத்மார்த்தம் எல்லாமும் கலந்த ஓர் அருமையான சூழல். பெண்களின் எண்ணிக்கையே அதிகம். குருஜி ராகவன் திருமதி ராகவன் இருவரும் கூடவே பாடி மகிழ்ந்து கொண்டிருந்தனர். தனிப்பட்ட முறையில் ஏற்பட்ட ஓர் அனுபவத்தால் முருகன்பால் ஈர்க்கப்பட்டு, திருப்புகழ் வழிபாடு மன்றங்களை உலகம் முழுவதும் நிறுவிச் செயல்படுத்தி வருகிறார் குருஜி ராகவன். உலகெங்கும் அன்பும் அவிரோதமும் ஏற்படுத்தும் இவ் வழிபாடு என்பது, உறுப்பினர்களின் ஆழ்ந்த நம்பிக்கை. அந்த நம்பிக்கை அன்றைய விழாவில் மெய்ப்பட்டதைக் காண முடிந்தது.



• ப. சிதம்பரம்




• ஜனநாயக வேர்கள் துவக்க விழா

**ஜ**னநாயகத்தின் தூண்கள் யாவை...? என்று கேட்டால் என்னை அடிக்க வருவீர்கள். ஆனால் ஜனநாயகத்தின் வேர்கள்...? மக்கள் சக்திதான். இந்த வேர்களைக் குறித்துக் கவலைப்பட்டதால் அவற்றைப் பலப்படுத்த ஓர் இயக்கம் ஆரம்பித்திருக்கிறார் பார்க் டவுன் எம்.எல்.ஏ, எஸ்.ஜி விநாயகமூர்த்தி. துவக்க விழாவில் கவலை, நம்பிக்கை, அவநம்பிக்கை, ஆதங்கம் யாவும் பகிர்ந்து கொள்ளப்பட்டன.

நட்சத்திரப் பேச்சாளர் ப. சிதம்பரம், சுதந்திரம் நமது பிறப்புரிமை என்கிற உணர்வு அவசியம்; கல்வியறிவு அத்தியாவசியம், அச்சமின்மை - தார்மிகக் கோபம் கட்டாயத் தேவை, மனித நேயம் இன்றியமையாதது - என ஜனநாயகம் தழைப்பதற்கான வேர்க்காரணங்களை விளக்கினார். இன்று ஜனநாயகத்துக்கு இருக்கக்கூடிய மிகப் பெரிய அச்சுறுத்தல் பெரும்பான்மை அரசுகளின் ஆதிக்க மனோபாவம் என்பதை, உணர்ச்சி வசப்படாமல் குரல் உயர்த்தாமல் சொன்னார்.

**ரா**ஜாஜி இலாகா இல்லாத அமைச்சராக இருந்தபோது (இது மமதா பாணி பொறுப்பல்ல, அப்போதெல்லாம் இலாகா இல்லாத அமைச்சர் என்றால், அனைத்து இலாகாக்களையும் கண்காணித்தாக வேண்டும்!) நேரு அயலுறவுத் துறை தொடர்பான விவாதக் கூட்டத்துக்கு அவரை அழைத்தாராம். நேருவின் கருத்தை ராஜாஜி எதிர்த்திருக்கிறார். அதிகாரிகள் நேருவை ஆதரிக்க, "பெரும்பான்மை என் பக்கம்தான்" என்றாராம் நேரு. அதற்கு ராஜாஜி என்ன பதில் சொல்லியிருப்பார் என்று நினைக்கிறீர்கள்...?

தெரிந்து கொள்ள கொஞ்சம் தலைகீழேதான் நில்லுங்களேன்!

- சுமி

# குறையொன்றுமில்லை

நமக்கு எல்லா நலத்தையும் ஞானத்தையும் கொடுக்கிற பரமாத்மா, கடைசியிலே ஒன்றுக்கும் பிரயோஜனமில்லாமல், அதைக் காட்டிலும் மட்டமாக இருக்கும் படியான ஒரு நிலையையும் கொடுத்து விடுகிறான்.

கும்பகர்ணன் இருக்கிறான் பாருங்கள்... அவனுக்கு ஏகமாக வரத்தைக் கொடுத்து விட்டான் பகவான். அவ்வரத்தோடு அவன் விழித்துக் கொண்டேயிருந்தான் என்றால் உபத்திரவம் என்று தூங்குவதற்கு வரத்தைக் கொடுத்து விட்டான்!

அதே போல்தான் நமக்கும் ஏகப்பட்ட சக்தியைக் கொடுத்து, கடைசியிலே மிருத்யு பயம், ரோக பயம், இத்தியாதிகளையெல்லாம் கூடவே கொடுத்திருக்கிறான்! இல்லையானால் மனிதன் நிற்பானா! நமக்காகத்தான் வேதம், சாஸ்திரம் எல்லாமே சொல்லப்பட்டிருக்கிறது... அவற்றைச் சொல்லி எல்லா தேவதைகளையும் 'ஆவாஹயாமி' 'ஆவாஹயாமி' என்று நாம் பிரார்த்தனை பண்ணினால், சர்வ தேவதைகளும் கட்டுண்டு அங்கேயே இருந்து விடுவார்கள். 'முடிகிற சமயத்திலே வருகிறேன்...' என்று எந்த தேவதையும் எழுந்து போய் விடுவதில்லை. அப்படி தேவதைகள் எழுந்து போய்விட்டால், கலச பிரதிஷ்டைக்கெல்லாம் பலன் ஏற்படுமா?...

துர்தேவதை இருக்கிறது பாருங்கள்... அந்த துர்தேவதைகள் கூட மந்திரத்துக்குக் கட்டுப்படுகின்றன. ஒரு போடு போட்டு, 'இந்த இடத்தை விட்டுத் தாண்டினாயானால் தெரியும்!' என்றால், அங்கேயே அது உட்கார்ந்துவிடும்!

துர்தேவதை கூட கட்டுப்படுகிறது! சாத்விக தேவதைகள் எல்லாமே கட்டுப்படுகின்றன. கட்டுப்படாதவர் யார் என்றால்... நம்மைத்தான் சுட்டிக்காட்டுகிறது சாஸ்திரம்!

'எழுந்திரு என்றால் உட்காருவான், உட்காரு என்றால் எழுந்திருப்பான்' என்று மனுஷ்யவர்க்கத்தினன்தான் சொல்கிற வார்த்தையைக் கேட்க மாட்டான் என்று பராசர மஹரிஷியே சொல்கிறார். ஆகையினாலே, சர்வ பிராணிகளிடத்திலேயும் நாம்



அன்போடு இருக்க வேண்டும். அதுதான் பூத தயா.

'சர்வ பூத தயா புஷ்பம்' - இது அழகான சுலோகத்தின் ஒரு வரி.

*அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம்*
*புஷ்பம் இந்த்ரிய நிக்ரஹ :*
*சர்வபூத தயா புஷ்பம்*

*க்ஷமா புஷ்பம் விசேஷத :*
*தியானம் புஷ்பம் தவம் புஷ்பம்*
*ஞானம் புஷ்பம் ததைவச*
*சத்யம் அஷ்ட பிதம் புஷ்பம்*
*விஷ்ணோ ப்ரீதி கரம்பவேத்*

என்று விஷ்ணுவுக்குப் ப்ரீதியான எட்டு புஷ்பங்கள் சொல்லப்படுகின்றன. அதிலே ஸர்வ பூத தயா புஷ்பம் - ஸர்வ ஜீவன்களிடமும் ப்ரியமாக இருக்க வேண்டும் என்பதை உணர்த்துகிறது.

**ஹோ**மகுண்டத்துக்குப் பக்கத்திலே பரிஸ்தரணம் என்று தர்பங்கள் போடப் பட்டிருக்கும். அதற்குப் பக்கத்திலேயே 'பரிதி' என்று ஸமித்தினால் அமைத்து வைக்கப்பட்டிருக்கும்.

பரிஸ்தரணம் - தர்பங்கள் - எதற்கு என்றால், முப்பத்து முக்கோடி தேவர்கள் வந்து உட்காருவதற்கு தர்பாஸனம் அது. அதிலே வந்து அவர்கள் சுற்றிவர உட்காருகிறார்கள். பரிஸ்தரணத்துக்கு வெளியிலே, பூதகணங்களெல்லாம் வந்து உட்கார்ந்திருக்கின்றன. அதற்கப்புறம் தான் மனுஷ்யகணமான நாமெல்லாம் உட்கார்ந்திருக்கிறோம்.



ஹோமம் பண்ணுகிற போது தேவகணங்களெல்லாம் வந்து ஹவிஸை வாங்கிக் கொண்டு போகின்றன. பூத கணங்களெல்லாம் உட்கார்ந்திருக்கிறது பாருங்கள்... அவை அப்படியே பார்த்துக் கொண்டிருக்கின்றன! 'நமக்குக் கொஞ்சம் கிடைக்காதா, நமக்குக் கொஞ்சம் கிடைக்காதா' என்று பார்க்கின்றன!

அந்த அக்னி பகவான் என்ன பண்ணுவான், ஹோமம் பண்ணுகிற அத்வர்யுவினுடைய கையைக் கொஞ்சம் தட்டி விட்டு, ஹவிஸ்ஸானது ஹோமம் பண்ணுகிற அக்னியிலே விழாமல், அதற்கு வெளியே போய் விழும்படியாகப் பண்ணி விடுவான்! அந்த மாதிரி வெளியிலே விழுந்ததை, 'ஐயோ, வெளியிலே விழுந்து விட்டதே' என்று எதிரிலே உட்கார்ந்திருக்கிறவர் எடுத்துத் திரும்பவும் அக்னியிலே போட்டால்,

யக்ஞம் கெட்டுப் போய்விடும் என்கிறது சாஸ்திரம். அந்த ஹோம குண்டத்திலே எச்சிலை உமிழ்வதற்குச் சமம் அது!

ஏனென்றால், அக்னி பகவானே அந்த பூத கணங்களுக்கு என்று விட்டுக் கொடுக்கிறான். அவர்களுக்கு அது கிடைக்க வேண்டும் என்பதற்காகத் தடுத்து வெளியிலே விழ வைக்கிறான்.

ஆகையினாலே, எப்படி எப்படி யக்ஞம் கெடுகிறது என்பதைக்கூட சாஸ்திரம் எடுத்துச் சொல்கிறது. அதை நாம் ஜாக்கிரதையாகப் பார்க்க வேண்டும்.

ஆகையினாலே பூதகணங்களுக்குப் பண்ண வேண்டிய அந்த பூத யக்ஞத்தையும் நாம் செய்ய வேண்டும். அதற்கடுத்து விசேஷமாக மனுஷ்ய யக்ஞம்!

அதிதிகள் வீட்டுக்கு வந்தால் அவர்களுக்குப் பண்ணவேண்டிய அன்னதானம் ரொம்ப முக்கியம். யாத்ரிகர் வந்தால், அவரை நீ யார்?' என்று கேட்கக் கூடாது! யார் 'பசி' என்று வந்தாலும் அன்னதானம் பண்ணு... எல்லா தானத்தைக் காட்டிலும் பூரணமான தானம் அன்னதானம். ஏனென்றால், போதும் என்று திருப்தியாகச் சொல்கிற தானம் அது ஒன்றுதான். பூரண திருப்தி! மற்ற விஷயங்களிலே இது இல்லையே!

ஒருத்தரிடத்திலே ஐந்நூறு ரூபாய் கொடுத்து விட்டு, 'என்ன சுவாமி, திருப்தி தானே?' என்றால், 'ரொம்ப திருப்தி, ரொம்ப திருப்தி' என்று அவருடைய வாய் சொல்கிறது. ஆனால் மனசு என்ன கேட்கிறது...? 'ஆயிரம் கொடுக்கக் கூடாதா?' என்கிறது. அப்படியானால் அது ஆயிரத்தில் திருப்தி அடைந்து விடாது, இன்னமும் மேலே விழையும் என்பது தெரிகிறது. திரவியத்திலே திருப்தியே ஏற்படாது உலகத்திலே. அன்ன தானத்திலே மட்டும்தான் அந்தத் திருப்தி ஏற்படும். ஆகையினாலே, அன்னதானம் விசேஷம்.

ஆயிரம் யானைகளை தானம் பண்ணுவதைக் காட்டிலும், நூறு குதிரைகளை தானம் பண்ணுவதைக் காட்டிலும், அன்ன தானம் விசேஷம். சர்வ மனுஷ்ய வர்க்கத்துக்கும் அது திருப்தி அளிக்கிறது.

**ய**க்ஞங்களின் மூலம் தேவதா ஆராதனம், பூதாராதனம் நடக்கிறது என்று பார்த்தோம். அடுத்தது ரிஷி தர்ப்பணாதிகளெல்லாம் பண்ண வேண்டும். அதற்கும் மேலே நாம் செய்ய வேண்டியது பிரும்ம யக்ஞம்.

# திருச்சி வாசகர்களே தயாரா?



பிரும்மம் என்றால் வேதம். பிரதிபலனை எதிர்பார்க்காமல், ஆறு அங்கங்களுடன் கூடிய வேதத்தை அத்யயனம் பண்ண வேண்டும். அத்யயனம் பண்ணி, அந்த வேதத்தை நித்யம் தன் கிருஹத்திலே ஒரு பிரச்னமாவது பாராயணம் பண்ண வேண்டும். இதற்குத் தான் பிரும்ம யக்ஞம் என்று பெயர். அது கடமை. அப்படி நித்யம் பண்ணுகிற பாராயணம் பிரதிப் பிரயோஜனத்தை எதிர்பாராததாக இருக்க வேண்டும். அவ்வாறு பண்ணினால் என்ன கிடைக்கும்...?

'தொழுது முப்போதும் உன்
அடிவணங்கித்
தூமலர் தூய்த் தொழுது ஏத்துகின்றேன்
பழுது இன்றிப் பாற்கடல்
வண்ணனுக்கே
பணி செய்து...' வாழும் உயர்நிலை – ஆண்டாள் சொன்ன உயர்நிலை கிடைக்கும்.

**சி**ல பேர் - மஹான்கள் - பரம ஏகாந்திகள். அவர்கள் தாங்கள் இருக்கிற இடத்தை விட்டுவிட்டு எங்கேயும் போக மாட்டார்கள். அஜகர வ்ருத்தி என்று பெயர். அஜகரம்

என்றால் மலைப்பாம்பு. அது இருந்த இடத்திலிருந்தபடியே உணவு கொள்ளும். தானாகப் பிரயத்தனம் பண்ணிப் போகாது. அந்த மாதிரி மகான்கள் எங்கேயும் போக மாட்டார்கள்.

சுவாமி தேசிகன் வைராக்கிய பஞ்சகம் என்கிற ஸ்தோத்திரத்திலே சொல்கிறார்... 'அஹஹ! அது என்ன வயிறு! அப்படி ஒரு வயிறா?' என்று கேள்வி எழுப்புகிறார். 'நிலத்திலே அறுவடை ஆன உடனேயே தானியங்களெல்லாம் கீழே சிந்தியிருக்கும். அதைப் போய்ப் பொறுக்கி எடுத்துக் கொண்டு வந்து, தானியத்தைச் சாப்பிடுவார்கள் சில மகான்கள். ஆற்றிலே தண்ணீர் ஓடுகிறது. தீர்த்தத்தை அள்ளிப் பருகினால் தாகம் நீங்கும். மான ஸம்ரக்ஷணத்துக்கு ஒரு முழம் வஸ்திரம் போதாதா...? அதை விட்டு விட்டு இந்த வஸ்திரத்துக்காகவும், இந்த தீர்த்தத்துக்காகவும், இந்த அன்னத்துக்காகவும் ஒருத்தரிடம் போய் இந்திரன் என்றும் சந்திரன் என்றும் சொல்லி மானுடனைப் பாட மாட்டேன்' என்கிறார் சுவாமி தேசிகன்.

அந்த மாதிரி மகான்கள் - வைராக்கிய சீலர்கள் இருக்கிற இடத்துக்குத் தேடிக் கொண்டு போய் நாம் கொடுக்க வேண்டும். பிரும்ம யக்ஞம் பண்ணுகிறவர்களும் அப்படிப்பட்ட மகான்கள்தான். அவர்கள் இருக்கிற இடத்தைத் தேடிப் பொருள் தானாக ஓடி வருமாம்... அவர்கள் செல்லும் இடமெல்லாம் சிறப்பு.

ஆனால், ஒருவன் பொருளை விரும்பி அதன் பின்னால் ஓடினான் என்றால், அது அவனை விட்டு ஓடிக்கொண்டே இருக்கும். கிடைக்கவே கிடைக்காது. 'வேண்டாம்' என்று அவன் உட்காருகிற போது, அதுவே அவனை நாடி ஓடி வரும்.

இதைத்தான் உபநிஷத் நமக்குச் சொல்கிறது. காமத்தை விட்டவனைப் பார்த்து... ஆசையெல்லாம் வந்து வணங்கி நின்றதாம். 'நீ என்ன சொல்கிறாய்? உனக்கு என்ன வேண்டும்? சொல்லு... நாங்கள் அதை நடத்திக் கொடுக்கிறோம்' என்று அவனைக் கொண்டாடுகின்றன காமங்கள்!

இந்த நிலையைச் சுலபத்தில் அடைந்து விட முடியுமா...? ரொம்ப கஷ்டமான நிலை அது!

(வளரும்)

# ஜூனியர் ஜீனியஸ்கள்!

தமிழ்மணி அப்படிச் சொன்னதும் திடீரென அந்த அறை முழுவதும் ஒரு மௌனம் சூழ்ந்தது. ஏ.சி.யின் குளிரையும் மீறி ஒருவகை வெப்பம் பரவுவதை உணர முடிந்தது.

சுற்றிலும் அமர்ந்திருந்த மற்ற உதவி இயக்குநர்கள் தமிழ்மணியையும் டைரக்டரையும் மாறி மாறிப் பார்த்தனர். கண்களில் எதிர்பாராத மிரட்சி.

ஆனால் இயக்குநர் சந்திரனின் முகத்தில் எவ்விதச் சலனமும் தென்படவில்லை.

எவ்வளவு பெரிய டைரக்டர் அவர்! அவருக்கு முன்னால் முகத்தில் அடித்தாற் போல் இப்படி இதுவரை யாராவது பேசியிருப்பார்களா?

கடந்த பத்து நாட்களாக 'விகாஸ்' ஹோட்டல் அறையில் கதை விவாதம் சுமுகமாகத்தான் நடந்து வந்தது. ஏறக்குறைய கதை முடிவாகியிருந்தது. கிளைமாக்ஸ் பற்றிய பேச்சு வந்தபோதுதான் இந்தச் சம்பவம் நடந்தது.

உதவி இயக்குநர்கள் தங்கள் அனுபவத்துக்கும் அறிவுக்கும் ஏற்றபடி ஏதேதோ சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

உதட்டைப் பிதுக்கிக் கொண்டிருந்த டைரக்டர் சந்திரன் கடைசியாகத் தாம் யோசித்து வைத்திருந்த முடிவைச் சொன்னார்.

அப்போதுதான் தமிழ்மணி அந்த வெடிகுண்டை வீசினான்.

இத்தனைக்கும் அவன் ரொம்பவும் ஜூனியர். உதவி இயக்குநராக இதுதான் அவனுக்கு இரண்டாவது படம்.

டைரக்டர் தமது கிளைமாக்ஸைக் கூறி முடிப்பதற்குள்ளேயே மற்ற உதவி இயக்குநர்கள் ஓங்கி ஜால்ரா அடிக்கத் துவங்கிவிட்டிருந்தனர்.

இந்த கிளை





மாக்ஸுக்காகவே படம் நூறு நாள் ஓடுமென்றும், இல்லையில்லை, வெள்ளி விழா காணும் என்றும், ஏன், ஆஸ்கருக்கே போகும் என்றும் அவர்கள் கொட்டிய ஐஸ் மழையில் டைரக்டர் குளிர்ந்திருக்கக் கூடும். தமிழ்மணிக்கு எரிச்சலாக இருந்தது.

அது அப்படியொன்றும் மெச்சத் தகுந்த முடிவு அல்ல.

"என்ன தமிழ்மணி, நீ ஒண்ணுமே சொல்லலே?" என்று சந்திரன் கடைசியில் கேட்டே விட்டார்.

தமிழ்மணி யோசிக்கவோ தயங்கவோ இல்லை. "இது ரொம்ப சாதாரண முடிவு சார். அது மட்டுமில்லாம ரொம்பவும் பிற்போக்குத்தனமா இருக்கு" என்றான் பட்டென்று.

இந்த அதிரடி பதிலை யாரும் எதிர்பார்க்கவே இல்லை. ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

நிசப்தம் கனத்துக் கிடந்தது. டைரக்டர் உணர்ச்சியற்ற முகத்தோடு ஒரு நிமிடம் கண் மூடி யோசித்தார். பிறகு அமைதியான குரலில்,

"சரி, நாளைக்குப் பார்க்கலாம்" என்று கூறிவிட்டு அறையை விட்டு வெளியேறினார்.

அடுத்த வினாடி அத்தனை வாள்களும் தமிழ்மணியின் மீது



"இந்த மெகா சீரியல் ரேட்டிங்லே முதலிடத்துலே இருக்கா... எப்படி?"
"இதைப் பார்த்தா 'ரோபோ'கூட கண்ணீர் விடுதாம்!"
- தஞ்சை தாமு

கருணையின்றி வீசப்பட்டன.

"ஏம்பா, உனக்கு மூளை கலங்கிப் போச்சா? டைரக்டரையே மட்டந்தட்டிப் பேசிட்டியே."

"அவர் முகமே கருங்கிப் போச்சு பார்த்தியா?"

"அவ்வளவுதான். உன் கதை முடிஞ்சு போச்சு."

ஆளுக்கு ஆள் பேசவும்தான் தமிழ் மணிக்கு நிலைமையின் விபரீதம் புரிந்தது.

வசனகர்த்தா முத்துக்குமார், அவனைத் தனியே அழைத்துக் கொண்டு போனார்.

"தம்பி, உன்னுடைய கருத்து சரிதான். ஆனா அதை நீ அப்படிச் சொல்லியிருக்கக் கூடாது. எந்த ஒரு டைரக்டரும் தன்னுடைய கருத்தை உதவி இயக்குநர் ஒருத்தர் மறுத்துப் பேசறதை விரும்ப மாட்டார். நீ அவசரப்பட்டு உன்னுடைய எதிர்காலத்தைக் கெடுத்துக்கிட்டியேப்பா" பொறுப்பு மிக்க தந்தையின் அறிவுரை தொனித்தது அவரது குரலில்!

அன்று முழுவதும் தமிழ்மணிக்கு இருப்புக் கொள்ளவில்லை. தீயின்மீது நிற்பதாகவே உணர்ந்தான்.

மிகப் பெரிய இயக்குநராகிக் கோலோச்சும் தன் கனவெல்லாம் முளையிலேயே கருகிவிட்டதை எண்ணியபோது, கண்களில் கண்ணீர் முட்டியது. இந்த உதவி இயக்குநர் வாய்ப்பைப் பெறுவதற்கே எவ்வளவு பாடுகள்! சினிமாக் கனவோடு ஊரிலிருந்து ஓடிவந்த காலத்திலிருந்து எத்தனை இயக்குனர்கள் வீட்டு வாசல்களில் தவங் கிடந்திருப்பான்? எத்தனை பேரிடம் கதை சொல்லிக் கரணம் அடித்திருப்பான்? எத்தனை கெஞ்சல்! எத்தனை அவமானம்? நீண்ட பட்டினிப் போர்!

எல்லாவற்றுக்கும் விடிவு காலமாய்த் தன்னை அடையாளம் கண்டு, உதவி இயக்குநராகச் சேர்த்துக் கொண்ட கலங்கரை விளக்கு அவர். அவரையே அவமானப்படுத்துவது போலப் பேசி விட்டோமே! நினைக்க நினைக்க நெஞ்சில் பாரமாய் அழுத்தியது.

மறுநாள் காலையிலேயே டைரக்டர் வீட்டுக்குப் போய்விட்டான். டைரக்டர் சந்திரன் எழுந்து, குளித்துச் சாப்பிட்டுப் புறப்படும்வரை, வாசலிலேயே காத்துக் கிடந்தான். ஒவ்வொரு நிமிஷமும் அனலாய்க் கொட்டியது.

வெளியே வந்த டைரக்டர் இவனைக் கண்டதும் புருவங்களை உயர்த்தினார்.

தமிழ்மணி தயங்கியபடி, "சார், நேத்து நான் ஏதோ மனக்குழப்பத்துல இருந்ததால அப்படிச் சொல்லிட்டேன் சார். அப்புறம் ரூம்ல போய் யோசிச்சுப் பார்த்தேன் சார். நீங்க சொன்னது ரொம்ப நல்ல கிளைமாக்ஸ். இப்ப உள்ள ட்ரெண்டுக்குப் பொருத்தமான கிளைமாக்ஸ் சார்" என்றான்.

"அப்படிங்கிறே?" என்று சொல்லிக் கொண்டே காரில் ஏறி அமர்ந்தார் டைரக்டர்.

"ஆமா சார். இந்தக் கதைக்கு அதுதான் சார் 'சூட்'டாகும். படம் சூப்பர் ஹிட் ஆகும் பாருங்க."

டைரக்டர் மெல்லச் சிரித்தார். "தமிழ்மணி! நீ ஒருத்தன்தான் திறமையும் துணிச்சலும் உள்ள ஆளுன்னு நினைச்சுக்கிட்டிருந்தேன். நீ வித்தியாசமா சிந்திக்கிறவன். மனத்தில் பட்டதை வெளிப்படையா சொல்றவன். அதனால உன்னையே இந்தப் படத்துக்கு அசோசியேட் டைரக்டரா போடலாம்னு இருந்தேன். ஆனா நீயும் அந்த மந்தையில ஒருத்தன்தானா? சரி, சரி. நீயும் போய் அவங்களோடு உட்கார்ந்து ஜால்ரா அடிச்சுக்கிட்டிரு."

கார் வேகமெடுத்துப் பறந்தது. ○



# கதைகள் பிறக்கும் கதை!

இப்போதெல்லாம் முதல்வர், தாம் பேசும் விழாக்களில் குட்டிக் கதைகள் சொல்லுவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறார்.

அ.தி.மு.க. தொண்டர்களை இது ரொம்பவே கவர்ந்திருக்கிறது.

தமது உரைகளைத் தானே தயார் செய்து கொள்ளும் அளவுக்கு முதல்வருக்குத் தகுதி இருந்தாலும், கடுமையான வேலைச் சுமையின் காரணமாக, அவரது உரைகளை முதல்வர் அலுவலக அதிகாரிகள் தயாரிக்கிறார்கள்.

அதிலும் குறிப்பாக, முதல்வர் அலுவலகத்தில் தனி அதிகாரியாக இருக்கும் கவிஞர் இளந்தேவன் (எ) முத்துராமலிங்கம் தான், இந்த உரைகளைத் தயாரிக்கும் பொறுப்பை ஏற்றிருக்கிறார் என்று சொல்லுகிறார்கள். குட்டிக் கதைகளுக்கும் இவர்தான் இன்சார்ஜ் என்கிறார்கள்.

மரபுக் கவிதையில் சிறப்புற்று இருக்கும் இளந்தேவன், முன்பு 'தமிழரசு' பத்திரிகையில் உதவியாளராக இருந்தவர்.

முதல்வர் ஓர் ஊருக்கு விஸிட் செய்யும் முன்னர் அந்த ஊருக்குச் சென்று, விழா ஏற்பாடுகளையும் இவர் கவனிக்கிறாராம். சமீபத்தில் தமிழ் இணையதள மாநாட்டில் இவர் தொகுப்பாளராகவும் இருந்தார். முதல்வரைப் புகழ, புதுப் புது வார்த்தைகளை இவரிடமிருந்து தொண்டர்கள் கற்றுக் கொண்டார்கள்.

முதல்வரின் உரைகளில் பாரதிதாசன் பாடல்களிலிருந்து மேற்கோள்களும், நாலடியார், தாயுமானவர் என்று இலக்கியங்களிலிருந்து எடுத்துக்காட்டுகளும் தாராளமாக வந்து விழுகின்றன. உரையினூடே, அரசியல் மசாலா சேர்க்க சில சமயங்களில் கோ. கலிவரதன், விருதுநகர் சீனிவாசன், புலமைப்பித்தன் ஆகியோரது உதவி கோரப்படுகிறதாம். "முதல்வர் என்றாலே தொண்டர்களுக்கு, ஒரு ராணுவக் கட்டுப்பாடு போன்ற பயம் வந்துவிடுகிறது. அவர்களை ரிலாக்ஸ் செய்து, கலகலப்பூட்ட, வறட்டுத்தனமான அரசு செய்திகளிடையே இந்தக் கதைகள் மிகவும் உதவுவதாகச் சொல்கிறார் அ.தி.மு.க. பிரமுகர் ஒருவர். கருணாநிதியின் இலக்கியப் பேச்சுக்கு தன் பேச்சு, எந்த விதத்திலும் குறைந்தது அல்ல என்று நிரூபிப்பதுதான் முதல்வரின் நோக்கமாம்.

— கௌசி

மாடல் ஆக வேண்டும். ஆனால் பூனை நடை போடத் தெரியாது. போர்ட்ஃபோலியோ எப்படிப் பண்ணணும்? பாடி லாங்வேஜ்னா என்ன? மேக்கப், டிரஸ் எப்படி இருக்கணும்...?

இப்படி பல எப்படிகளுக்கு விடை தெரியாமல் விழிக்கும் பெண்ணா நீங்கள்? இதோ உங்களுக்காகவே பெங்களூரில் இருக்கிறார் அஞ்சலி சந்திரசேகர். இவர் நடத்தும் எஸண்டா (Ezanta) ஸ்டுடியோ மூலம் மாடலிங் மற்றும் விளம்பரத் துறையின் சகல தேவைகளையுமே பூர்த்தி செய்கிறார். லொகேஷன் செலக்ட் பண்ணுவதிலிருந்து போஸ்ட் புரொடக்ஷன் வரை இவர் ஆல் இன் ஒன் பெண்மணி. இவருக்கு வலதுகரமாகச் செயல்படுபவர்கள் பலர்.

முன்பெல்லாம் வீதி நாடகம், கூத்து என்றால் ஒருவர் உடல் முழுவதும் பெயின்ட் அடித்து வருவார். சலங்கை கட்டி டான்ஸ் ஆடிக்கொண்டே ஜனங்களிடம் காசுகூட வசூலிப்பதைப் பார்த்திருக்கிறோம். ஆனால் இன்று 'பாடி பெயின்டிங்' மாடல் உலகின் ஒரு கட்டாயம்!



ஒரு புகைப்படம் மூலம் பாப்புலராக வேண்டுமா, ஒரு நிமிடம் எதிராளியை செய விழக்கச் செய்ய வேண்டுமா? எடுடா பிரஷ்ஷை, முக்குடா பெயின்டில், பூசுடா உடலில்...! என்று பாடி பெயின்டிங் அத்தியாவசியத் தேவையாகி விட்டது. அதில் கொடி கட்டிப் பறப்பவர் ஹரீஷ் கர்க். இளம் பெண்களின் உடலில் வண்ணமடிப்பதே இவர் தொழில்! 'பொதுவாகவே பெண்கள் என்றாலே அழகு தான். இதில் பெயின்டிங் எதற்கு? என்றால் உங்களுக்கு அறுபதாம் கல்யாணம் வெகு சீக்கிரத்தில் என்று அர்த்தம்.

ஒரு மாடலைத் தயார் பண்ணுவதிலிருந்து ஸ்டைல், உடை, அவருடைய கட்டணம், செட்,





# வாங்க வாங்க! காப்பி சாப்பிடுங்க!

• ஹரீஷ் கர்க், அஞ்சலி

லொகேஷன், லைட், ஸ்பாட் லைட், கலர் ஜெல், ப்ராப்ஸ் (தமிழ் ப்ளீஸ்!)... பயங்கர டென்ஷன் உத்யோகத்திலும் எப்படித்தான் சிரித்துக் கொண்டேயிருக்க முடிகிறதோ அஞ்சலியால், தெரியவில்லை!

"ஃபேஷன் ஷோ, ராம்ப், திரைப்படம், விளம்பரம், மாடலிங், அவர்களுக்குண்டான போர்ட் ஃபோலியோ... போன்ற சகல தேவைகளையும், நாங்கள் கவனித்துக் கொள்கிறோம். விளம்பரக் கம்பெனிகள் தங்கள் புது புராடக்டை அறிமுகம் செய்யும்போது அவர்களுக்கென மாடல், லொகேஷன், செட்... என அத்தனையும் ரெடிமேடாகத் தந்து அசத்தி விடுவோம். புது மாடல்களுக்குப் பயிற்சி தருகிறோம். வார்ட்ரோப் (உடை), மேக்கப், உடற்பயிற்சி... என அவர்களுக்குப் பொருத்தமானதை நாங்களே தேர்வு செய்து தருகிறோம். எங்கள் ஸ்டூடியோவிற்குள் நுழைந்தால் போதும், சகலத்தையும் நாங்கள் பார்த்துப்போம்" என்கிறார் பஞ்சாபிப் பெண்ணான அஞ்சலி!

ஒரு சிறிய துணியை, ஸ்கார்ஃபைக் கூட கவர்ச்சிகரமாக கண் கவர் முறையில் பயன்படுத்துகிறார் அஞ்சலி. 'ஸ்பெஷல் ஷீட்' என்று இது போன்ற விதவிதமான துணிகளை நூதனமான முறையில் பயன்படுத்துகிறார்.

கொரமங்களாவிலிருக்கும் 'எஸண்டா' ஸ்டூடியோவில் பலவிதமான பேக்ரவுண்டில் செட்கள், பெரிய பெரிய கண்ணாடிகள், அதைச் சுற்றி அருமையான பளிச் விளக்குகள், விசாலமான அறைகள், அலமாரியில் நிரப்பி வைக்கப்பட்டிருக்கும் குட்டி குட்டி துப்பட்டாக்கள், வேலைப்பாடுடைய ஸ்கார்ஃபுகள் நம்மை ஈர்க்கின்றன.





தமிழ் சினிமாவிற்கென ஆடை, செட், லொகேஷன் ரெடி செய்யவும் காத்திருக்கின்றனர் அஞ்சலியும் ஹரீஷும்!

"தமிழ்நாடு எங்களுக்கு மிகவும் பிடிக்கும். தமிழர்கள் ஸோ ஸ்வீட். "வாங்க வாங்க, காப்பி சாப்பிடுங்க" என்று எப்படி ஆத்மார்த்தமாக உபசரிக்கிறார்கள். இல்லத்தில் கூப்பிட்டு இதயத்தில் அல்லவா அமர வைத்து விடுகிறார்கள்" (ஜில்லென்ற கவிதை), என்று சொல்லும் அஞ்சலி, திருமணம் செய்திருப்பது தமிழரான சந்திரசேகரை! மாடலைப் போல இருக்கும் அஞ்சலி மறக்காமல் அணிந்திருப்பது தாலியை! (இங்கு டி.வி நியூஸ் ரீடர்கள்கூட போட மறந்திருக்கும் ஓர் ஆபரணம்!)

சகல விதமான தேவைகளும் பூர்த்தியாகும் ஒரே இடம் அநேகமாக எஸண்டா ஒன்றேதானாம்!

மாடலாக வேண்டுமென்ற கனவுடன் பல யுவதிகள் தூக்கத்தை வீணாக்கிக் கொண்டிருக்கின்றனர்.

"ஒரு கவர்ச்சியான மாடலுக்குத் தேவையான அம்சங்கள் எல்லாவற்றையுமே கற்றுக் கொடுப்போம்; அது மட்டுமல்ல, ஒரு விளம்பரத்திற்கு எவ்வளவு வசூலிக்க வேண்டும். ராம்ப் ஷோ என்றால் எவ்வளவு... போன்றவற்றையும் சொல்லித் தருவோம்" என்கிறார் அஞ்சலி! இப்போது மாடல் உலகில் கலக்கிக் கொண்டிருப்பவர்கள் பலர் இங்கு வந்து சென்றவர்கள் தானாம். ஆனால் பெயரைச் சொல்ல விரும்பவில்லை என்கிறார்.

மாடல்கள் : சன்னி, ஆர்த்தி, ராதிகா

**- லதா சேகர்**



**மேஷம்:** சனி பகவான் 3ல் சஞ்சாரம் என்பதால் சகல வகையிலும் முன்னேற்றம் ஏற்பட்டு தன்னம்பிக்கை கூடும். புதியவர்கள் அறிமுகம் உண்டாகி, உத்தியோகம், தொழில் விஷயத்தில் புதிய திருப்பம் ஏற்படும். எதிர்ப்புகள் மறைந்து உற்சாகமான சூழ்நிலை நிலவும். அரசியல்வாதிகளின் மதிப்பு உயரும். வெளிநாடு செல்ல முயற்சி செய்து கொண்டிருப்பவருக்கு பயணம் சிறப்பாக அமையும். புதிய சொத்து சேர்க்கை உண்டாகும். ராசிநாதன் செவ்வாய் 11ம் இடத்தில் லாபஸ்தானத்தில் அமர்ந்து குரு பார்வையும் சஞ்சாரம் என்பதால் தெய்வீக ஈடுபாடு அதிகரிக்கும். பெண்களுக்கு அதிர்ஷ்டமான வாரம்.



**ரிஷபம்:** ஏழரைச் சனி இரண்டாவது சுற்று நடைமுறையில் உள்ளவர்களுக்கு, சுப மங்கள காரிய முயற்சி கூடி வரும். குறிப்பாக, பெண்கள் தொட்டதெல்லாம் பொன் போலத் துலங்கும். உடன் பிறந்தவர்களின் ஆதரவு அமோகமாகக் கிடைக்கும். வெளிநாட்டிலிருந்து எதிர்பார்த்த செய்தி வந்து சேரும். குல தெய்வப் பிரார்த்தனை செய்ய நல்ல சமயம் எதிர்பார்த்திருந்தீர்கள் அல்லவா? மங்களமாக நிறைவேறி விடும். இலேசான சோர்வு, டென்ஷன், அலைச்சல் போன்றவற்றால் பீடிக்கப்பட்டிருந்த மாணவச் செல்வங்கள், அவற்றிலிருந்து விடுதலை பெறுவார்கள்.



**மிதுனம்:** குருபகவான் ஏழாவது இடமான தமது வீட்டைப் பார்ப்பதால், கணவன் - மனைவி உறவு இனிமையாக இருக்கும். குடும்பத்தில் சுப மங்கள காரிய முயற்சி கூடி வரும். இதுவரை 12ல் இருந்த ராகு, 11ம் இடம் மாறி குரு பார்வையும் பெற்றுள்ளது. அதிக செலவுகள் ஏற்பட்டாலும் சவாலே சமாளி என்று சரிக் கட்டி விடுவீர்கள். வீடு வாங்கவோ, கட்டவோ இது நல்ல சமயம். கலைத்துறை, நாடகம், நாட்டியம், சினிமா, அழகு, அலங்காரத் துறைகளைச் சார்ந்தவர்களுக்கு லாபம் கொழிக்கும்.

# நடக்குமென்பார்;



**கடகம்:** மக்கள் நலன் சீராக இருக்கும் என்பதோடு, அவர்களால் மனமகிழ்ச்சியும் அதிகரிக்கும். "கையிலே நாலு காசு இல்லையே! திடீர்னு ஏதாவது செலவு வந்தா என்ன செய்யறது"ன்னு கையைப் பிசைஞ்சுக்கிட்டு இனி நீங்க நிக்கவே தேவையில்லை. நாலு திசையிலிருந்தும் நவமை யோகம் அடிக்கப் போகுது. உல்லாசம், விருந்து, உபசாரம், சரளமான பண வசதி என்று மஜாவா இருக்கப் போகுது வருங்காலம். குடும்ப தன ஸ்தானத்தில் குரு புதனுடன் சஞ்சாரம் என்பதால், தாமதமாகி வந்த காரியங்கள் 'சட்டுபுட்டு' என்று நடந்து சங்கடம் தீர்க்கும்.



**சிம்மம்:** உத்தியோகத்தில் சிறு சிறு பிரச்னைகள் ஏற்பட்டு மறையும். சிறு வாக்கு வாதங்கள்கூட பெரிய மனஸ்தாபத்தை உண்டாக்கி விடும் என்பதால், பேச்சில் கவனம் தேவை. சில வாரங்களுக்கு, புதிய முயற்சிகளைத் தள்ளிப் போடவும். கேது, 3ம் இடத்தில் சஞ்சாரம் என்பதால், எதிர்ப்புகள் மறையும். துணிவு, தன்னம்பிக்கை கூடும். வெளிநாடு தொடர்பான தொழில், நல்ல அனுகூலமான திருப்பங்களைத் தரும். இயந்திரம், கான்ட்ராக்ட்ஸ், இன்டஸ்ட்ரீஸ், கமிஷன் ஏஜெண்ட், எலக்ட்ரானிக்ஸ், கெமிக்கல்ஸ், மருத்துவம் போன்றவை ஏற்றம் தரும். பெண்களின் நோக்கம் நிறைவேறும்.



**கன்னி:** கல்வி, ஆராய்ச்சி, விஞ்ஞானம் போன்ற துறைகளில் ஆர்வம் கொண்டுள்ள மாணவர்களுக்கு, சிறப்பான எதிர்காலம் சிறகடித்து வரும். வெளிநாட்டிலிருந்து எதிர்பார்த்த நல்ல செய்தி உங்களைத் தேடி வரும். குடும்பத்தில் எல்லா வகையிலும் உற்சாகமான மனநிலை இருக்கும். கோர்ட்டு, வழக்கு, சொத்து விவகாரங்கள் அனுகூலம் தரும். புனித ஸ்தல பயணம் மேற்கொள்ள வாய்ப்புகள் தேடி வரும். ஸ்பெகுலேஷன் துறையில், மிதமான பலன்களே கிடைக்கும். ஜவுளி, ஃபர்னிச்சர், புத்தகம், பத்திரிகை, அச்சகம் இனத்தைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயர்வார்கள்.



**துலாம்:** கேது ஏழாம் இடத்தில் இருப்பதால் எடுத்த காரியங்களில் தடை, சின்ன விஷயங்களில்கூட சிக்கல், பணம் சம்பந்தப்பட்ட விவகாரங்களில் பிரச்னை என மனச் சஞ்சலங்களை உண்டு செய்வார் என எதிர்பார்ப்பது சரிதான். ஆனால்

கிரக யோக பலம், கூடியிருக்கும் பட்சத்தில் நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. முயற்சிகளுக்கு ஏற்ற நல்ல பலன்களே நடைபெறும். உத்தியோகம் விஷயமாக பயணம் மேற்கொள்வது, பதவி சம்பந்தமாக புதிய திருப்பத்தைத் தரும். கிரக வழிபாடு செய்தால், மன அமைதி கிடைக்கும்.



**கவிஞர் வெண்ணிலா முருகேஷுக்கு (ரிஷபம்) தொட்டதெல்லாம் பொன் போல துலங்க போகுதாமே!**



**விருச்சிகம்:** வெளியூரோ, வெளிநாடோ, நீங்கள் எதிர்பார்த்த நல்ல தகவல் வந்து சேர்ந்து, வயிற்றில் பால் வார்க்கும். 11ம் இடமான லாபஸ்தானத்தில் சூரியன், சுக்ரன் மற்றும் 6ல் ராகு சஞ்சாரம் என்பதால் மிக சந்தோஷமான செய்திகள் கிடைக்கும். சுய தொழில் வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் காணப்படும். கடன் தொல்லைகளிலிருந்து நிவாரணம் பெறுவீர்கள். "சனி 8ல் சஞ்சாரம் செய்கிறாரே!' ஏதேனும் வம்பு, வழக்கு வந்து சேருமோ" என்று பயப்பட வேண்டாம். குரு பார்வை இருப்பதால், நல்லதே நடக்கும்!



**தனுசு:** தனுசு ராசிப் பெண்களுக்கு, சகல சந்தோஷமும் சௌக்கியம் விசாரித்து வந்து சேரும். குரு பலமும் பூரணமாக இருப்பதால், மகிழ்ச்சிக்குக் குறையே இல்லை. பொன், பொருள், ஆடை, ஆபரணம் என யோகம் உண்டாகும். குடும்பத்துடன் இனிய சுற்றுலா அமையவும் வாய்ப்புகள் உண்டு. வியாபாரிகளுக்கு பணப் புழக்கம் அளவுக்கு அதிகமாக இல்லை என்றாலும், திருப்திகரமான பொருளாதார சூழ்நிலை அமையும். ஞான மார்க்கத்தில் உள்ளவர்களின் தொடர்பு மன அமைதி தந்து வழி காட்டும்.

# நடக்கும்!



**மகரம்:** குடும்பஸ்தானத்தை, குருபகவான் பார்ப்பதால் சுப மங்கள காரியங்கள் நடக்கவிருக்கின்றன. பச்சை மாவிலைத் தோரணம், கெட்டிமேளம், விருந்து உபசாரம் என தடபுடல் பண்ணிடுவீங்க. செலவு கொஞ்சம் கையை மீறிடும். அதனால் என்ன? சுபச் செலவாச்சே! ஜமாயுங்க! சனி பகவான் 6ம் இடத்தில் பலம் பெற்று சஞ்சாரம் என்பதால் எதிர்ப்புகள் மறையும். எதிரிகள் அட்ரஸ் இல்லாமல் காணாமல் போவார்கள். உத்தியோகமோ, தொழிலோ, ஆரோக்கியமான சூழலும் அமைதியான போக்கும் காணப்படும். பெரியவர்கள், அனுபவஸ்தர்களின் ஆலோசனைகளை ஏற்று மதித்து நடக்கவும். வாழ்வு வளம் பெறும்!



**கும்பம்:** திருநள்ளார் நாயகன், உங்கள் ராசிநாதனாச்சே! அவர், 5ம் இடத்தில் பூர்வ புண்ணியஸ்தானத்தில் பலமுடன் சஞ்சாரம் என்பதால் தெய்வ பலம், தெய்வீக ஈடுபாடு, புனித காரியங்களில் பங்கு கொள்ளல், பிரபுதனவான்கள் ஆதரவு ஆகியவை உண்டாகும். அலுவலகத்தில் உற்சாகமான மனநிலையோடும் பணியாற்றி மேலதிகாரிகளிடம் பாராட்டு பெறுவீர்கள். கொடுக்கல் வாங்கல் சுமுகமாக இருக்கும் என்பதால் பொருளாதாரச் சிக்கல் வராது. மாணவர்கள் முன்னேற்றப் பாதையில் வெற்றி நடை போடுவார்கள்.



**மீனம்:** கலைத் துறையைச் சேர்ந்த மீன ராசி அன்பர்கள், பெயர், புகழ் கூடி ஆதாயம் பெறுவார்கள் என்பதால், இனிய வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். குரு பகவான் 6ம் இடத்தில் இருப்பது சிறப்பான விஷயம் அல்ல என்றாலும், குடும்பஸ்தானத்தைப் பார்ப்பதால், சுப காரியங்கள் செவ்வனே நடைபெறும். பெண்களுக்கு சந்தோஷமான மனநிலை இருக்கும். சிறு சிறு உடல் உபாதைகளால் பாதிக்கப்பட்டிருந்தவர்கள்கூட, ஆரோக்கிய மேன்மை அடைவார்கள். தெய்வ தரிசனம், கிரக வழிபாடு, தான தர்மம் போன்றவை மனமகிழ்ச்சி அளிக்கும்.



# ஜில்லு மல்லு

—கதிர்


ஹாய் ஜில்லு!


என்னடா, முடிவெட்ட காசு இல்லையா?
இந்த மாதிரி கெட்டப் இருந்தாதான் இண்டஸ்டிரியில மதிக்கிறாங்க.


என் தலையைப் பார்த்தா ஏ.ஆர். ரகுமான்... முகத்தைப் பார்த்தா சங்கர் மகாதேவன்... ரெண்டையும் சேர்த்துப் பார்த்தா... ஆதித்யன்...


உடம்பைப் பார்த்தா எஸ்.பி.பி... அதை விட்டுட்டியே...
ரீசென்டா நான் ரிலீஸ் பண்ண ஆல்பத்தோட சேல்ஸ் தெரியாம பேசிக்கிட்டிருக்க.


ஏன் சேல்ஸ் ஆகாது...? உன் பாட்டைப் போட்டா ஒரு கொசுகூட வீட்டுக்குள்ள வர மாட்டேங்குதாம். "உள்ளே பாட்டைக் கேட்கிறது; வெளியே சென்று சாகிறது"ங்கறாங்க.


ட்ரிங்... ட்ரிங்...
மல்லு, உனக்குதான், ஃபோன்.
எங்கிருந்து?
குட்-நைட் கம்பெனியிலிருந்து.

